னுல் வாய்மலர்ந்தருளியவண்ணம் ஏனையகரங்களை யிமைப்பிற் சங்க
த்தனன். பிறகு சிவபெருமான் "வாண! உன் தோளிலிருந்த தின
நீங்கியதா?" என்று வினவ, வாணன் "அடியேன் அறியாமைய
லறைந்ததைப் பொறுத்தருளவேண்டும்" என வேண்டினன். சிவ
க்கிணைப்படி வாணன் தன்மகள் உஷையை அநிருத்தனுக்கு மண
புணர்த்திக் கண்ணனோடு துவாரகாபுரிக் கனுப்பிவிட்டு, சிவப்பிரச
தத்தாற் பழையபடி ஆயிரம் அத்தங்களும் அமையப்பெற்றுத் தி
க்கயிலாயகிரியிற் குடமுழா வெடுக்கும் பாக்கியம்பெற்றனன்.

சிவபிரானுந் திருமாலும் வாணன் மாளிகையில் விநோதயு
தஞ் செய்கையில் "படர் குறிப்பொடு வெம்பிணி படைத்தெதி
விடுப்பார்" என்றபடி சிவபிரான்பேரில் கண்ணன்பிரயோகித்த சீத
சுரத்தைத் தணிக்கும்படி "மூன்று சிரங்கர நாலு கொடுங்கண
முதிர்விழி யொன்பதுடன் - மூன்றி யடும்படை பூத பசாசுக
சுற்றி யுறக்கடுவே - கான்று கொளும்புகை யோடனல் வீசிய காலு
வேயுலக - மீன்றவன் முன்னுல கெங்கு நடுங்க வெழுந்தது பா
பதம்" என்றபடியே சிவபெருமான் ஏவிய உஷ்ணசுர மான
மூன்று சிரம் - நான்கு கரம் - ஒன்பது விழி - மூன்று கால்களுட
சென்று கண்ணன் விடுத்த சீதளசுரத்தைக் கணத்தில் மாய்த்தது
தீராச் சுரமுற்றோர் அத்திருவுருவத்தைப்பணியின், சூரியன்மு
பனிபோல விலகிச் சுகமுறுவர். விஷ்ணுவிடுத்த சுரத்தின் வீறுபே
க்கினமையால் சிவபிரான் ஜ்வராபக்நமூர்த்தியெனப் பெயருற்றன

---

* அண்ணல் கண்ணனுடன் அமராக்குகையில் அஞ்சினு
போல அகன்றது அதிசயமன்று. "விஷவ்ருக்ஷோபி ஸம்வ்ருத்யஸ்
யம் சேத்துமஸாம்பிரதம்" என்றபடியே நச்சுமரமா யிருப்பினு
தன் கையால் வளர்த்துத் தானே சங்கரித்தல் தகாதெனக் கருதி
"தோள்தினவு தீரவேண்டும்" என்ற வாணனுக்கும், மைநாகமலை
யிற் றவஞ்செய்த விண்டுவுக்கும், திருவாய்மலர்ந்தருளியவற்றை

றைநவேற்ற லீலாமாத்திரையாய் அடியர்பக்திக்ககமகிழும் அருள்
ள்ள லாதலின், அச்சுதன் ஜெயமுறநடித்துக்காட்டியதன்றி உள்ள
டியே ஓடியதன்று.

அவ்வாறு நடிக்காவிடில் விண்டு தன்னைநோக்கித் தவஞ்செ
ய்தபொழுது மகுடாபிஷேகஞ்செய்வித்துத் தானே யெதிர்ப்பினுஞ்
சயிக்கும்படிகொடுத்தவரம் அவலமாகும். அன்றியும் சிவப்பிரசாத
ாகிய தனது வல்லமையைத் தற்செயலாகக்கருதி இறுமாந்தவாணன்
ன்னை யெதிர்க்க நேராது: அதனால் அவன்தோள்கள் சங்கிக்கப்
டா. இதுநிற்க.

அவதார கோலமல்லாத ஆதிவிஷ்ணுவே தன்னொடுசண்
டைசெய்தற்கஞ்சி, பிருகுமுநிவன் மனைவிபால் அடைக்கலம் புக்க
வுணனைக்கொல்ல ஸ்திரீஹத்தி தேடிக்கொண்டு முநிவர் முனிந்து
பிக்கப் பத்துப் பிறவிகள் அடைந்ததையும், சிவகணத்தலைவருள்
ருவராகிய ஶங்குகர்ணனுக்குந் திருமாலுக்கும் நிகழ்ந்த யுத்தத்தில்
ஶங்குகர்ண கணேஶேநபிந்நஸ்தேகேஶஸம்ஶப:" என்றும் ஸ்கா
த புராணத்தின்படி, அவனாற் சிகையையறுத்துவிடப்பட்டதையும்,
ததிமுநிவருடன் சண்டைசெய்கையிற்சக்கரத்தின்கூர்வாய்மழுங்கி
அவருடம்பினின் றுதித்த அளவில்லா விஷ்ணுமூர்த்திகளைக் கண்டு
ர்ச்சித்தனனெனக்கூறும் பாத்ம ஸ்காந்த புராணங்களையும், அவர்
மூர்த்திகளிற் பிரமனைச் சிரங்கொய்கையிலும், மதனனைச் சாம்பரா
க்குகையிலும் என்னசெய்தனனென்டதையும், தக்ஷயாகத்திற் சங்கட
பட்டதையும், இந்திரன் செல்லுருக்கொண்டு அவனேந்தியவில்லின்
ாணைக்கடிக்க விழுந்ததையும், எண்ணிப் பார்ப்போமாக. இத்தியாதி
யாபத்தால், பலவாறவமதிப்புண்ட திருமாலின் கரிய ரோமமாகிய
ண்ணனுக்கஞ்சிச் சிவபிரான் ஓடினார் என்பதைப் பூர்வபக்ஷஞ் செ
து, அவ்வாறு நடித்துக் காட்டினனென்று சித்தாந்தமாக்குக.

### பாகவதம் - தஸமஸ்கந்தம்.

தோஸ்ஸஹஸ்ரம்த்வயாதத்தம் வரம்பாராயமேபவத்,த்வாலே க்யம்ப்ரதியோத்தாரம் நலேபேத்வத்ருதேஸமம், கண்டேத்யநிர்வ தைர்தோர் பிர்ர்யுயுத்ஸுர்திக்கஜாநஹம், அப்யயாஞ்சூர்ணயந்நர்த்ரீ பீதாஸ்தேவிப்ரதுத்ருவு:, தச்ச்ருத்வாபகவாந்க்ருத்த: கேதுஸ்தே ஜயதேயதா, த்வத்தர்பக்நோபவேந்மூட ஸம்யுகேமத்ஸமேநதே,இ யுக்த:குமதிர்ஹ்ருஷ்ட: ஸ்வக்ருஹம்ப்ராவிஶந்ந்ருப—சிச்சேதபகவ ந்பாஹூந்ஶாகாஇவவநஸ்பதே:.

### விஷ்ணு புராணம்.

பாணேபிப்ரதிபத்யாத மைத்ரேயாஹத்ரிலோசனம், தேவப ஹூஸஹஸ்ரேண நிர்விண்ணேஸம்யாஹவம்விநா, கச்சிந்மமைஷே பாஹூநாம் ஸாபல்யஜநகாரண:, பவிஷ்யதிவிநாயுத்தம் பாராயமப கிம்புஜை: —, ஶங்கர:—மயூரத்வஜபங்கஸ்தே யதாபாணபவிஷ்யதி பிஶிதாஶிஜநாநந்தம் ப்ராப்ஸ்யஸேத்வம்ததாரணம்.

### உமாஸம்ஹிதை

ஸ்ரீதேவி—த்வத்தோவிஸிஷ்டபாவஸ்து விஷ்ணோஸம்ப்ரதிபத் யதே,கதமேதத்தயாஸிந்தோ க்ருபயாவதஸுவ்ரத,ஶ்ருணுதேவிப்ர வக்ஷ்யாமி விஷ்ணோராதிக்யதாம்ப்ரதி, புராகதாசித்தேவேஶிபரமா நந்தகாநநே, க்ரீடாஸக்தேமயிபுரா விஶ்வமேததநாயகம், உபத்ருஷ் டம்ஸதாதுஷ்டைர்வேதவாதபஹிஷ்க்ருதை:, ஸ்வாஹாஸ்வதாவஷ ட்காரரஹிதேகர்மவர்ஜிதே, ப்ரஹ்மணாஜ்ஞாதவ்ருத்தார்த: கார்ய ஶேஷமசிந்தயத், சக்ரபாணிஸமாஹூய ரத்நஸிம்ஹாஸநேஶுபே அபிஷேச்யவரந்தத்வா ப்ரணம்மகரவம்பிரியே,ஸ்ருஷ்டிஸ்திதிவிநா ஶாநாம் கர்த்ருத்வமகுதோபயம், ஸர்வஜ்ஞதாதிஸித்திஞ்ச தத்தவா நஸ்மிவிஷ்ணவே, மத்தோதிகோபவாந்ராஜா பவவிஷ்ணோமஹாப்ர பே, இதிதத்தவர:பூர்வம் வாரணஸ்யாம்ஹரி:புரா, இதிஜ்ஞாத்வாக விப்ராஹ மேநிரேப்யதிகம்ஹரிம்.

## భాగవతం.

శ్లో॥ దోస్సహస్రంత్వయాదత్తంవరంభారాయమేభవత్। త్రైలో
క్యేప్రతియోద్ధారం నలెభేత్వదృతేసమం। కండూత్యానిర్భృతైర్దోర్భిః
యుయుత్సుర్దిగ్గజానహం అద్యాయాంచూర్ణయన్నద్రీన్ భీతాస్తేపిప్ర
దుద్రువుః తచ్ఛ్రుత్వాభగవాన్క్రుద్ధః కేతుస్తేభజ్యతేయదా। త్వద్దర్ప
ఘ్నంభవేన్మూఢసంయుగే మత్సమేనతే। ఇత్యుక్తఃకుమతిర్హృష్టః స్వగృ
హంప్రావిశన్నృప। తదన తరాధ్యాయం॥ చిచ్ఛేదభగవాన్బాహూన్
శాఖాఇవవనస్పతేః॥

## విష్ణుపురాణం.

శ్లో॥ బాణోపిప్రతిపత్యాథమై త్రైయంబకంత్రిలోచనం। దేవబాహు
సహస్రేణ నిర్విణ్ణోస్మ్యాహవంవినా। కశ్చిన్మమైషాంబాహూనాం సాఫల్యజన
కారణః। భవిష్యతివినాయుద్ధం భారాయమమకింభుజైః। శంకరః। మయూర
ధ్వజభంగస్తే యదాబాణభవిష్యతి। పిశితాశిజనానందం ప్రాప్స్యసేత్వంత
దారణం॥

## ఉమాసంహిత.

శ్రీదేవీ। త్వత్తోవిసృష్టభావస్తువిష్ణుసంప్రతిపద్యతే। కథమేతద్దయా
సింధోకృపయామావదసువ్రత। శ్రీణుదేవిప్రవక్ష్యామివిష్ణోరాధిక్యతాంప్రతి।
పురాకదాచిద్దేవేశి పరమానందకాననె। క్రీడాసక్తే మయిపురావిశ్వమే
కదనాయకం। ఉపమృష్టంసదాదుష్టై ర్వేదవాద బహిష్కృతైః। స్వాహా
స్వధావషట్కారరహితె కర్మవర్జితె। బ్రహ్మణాజ్ఞాతవృత్తాంతఃకార్యశేషము
చింతయత్। చక్రపాణింసమాహూయరత్నసింహాసనేశుభె।అభిషిచ్యవరం
దత్వాప్రణామంకరవంప్రియె। సృష్టిస్థితివినాశానాం కర్తృత్వముకులోద్భ
వం। సర్వజ్ఞతాదిసిద్ధించ దత్తవానస్మివిష్ణవే। మత్తోధికోభవాన్నోజాభవ
విష్ణోమహాప్రభో। ఇతిదత్తవరఃపూర్వం వారణస్యాంహరిఃపురా। ఇతిజ్ఞా
త్వాకవిప్రాహామేనిరెప్యధికంహరిం॥

ஜ்வராபக்னமூர்த்தயேநம:

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

# இருபத்தைந்தாவது.

# சார்த்தூலஹர மூர்த்தி.



சமஸ்தலோக காரண பூதராகிய பரமேச்சுரன் கட்டளைப்படி திருமால்மோகினியுரு வேற்றுத் தாருகவனமுனிவர் தவத்தையழித்தும், பெருமானே பிக்ஷாடனத்திருவுருக்கொண்டு முனிவர் பத்தினிகள் கற்பையொழித்தும் நகரிற் புறம்போந்தபோது, பெருமான் பக்கலிற் சேர்ந்த திருமால் பெண்ணுருநீங்கினர். அப்பொழுது அயன்முதலிய அமரர் ஆண்டடைந்துவணங்கினர். அவற்றையெல்லாம் நன்குணர்ந்துள்ள தாருவனமுனிவர் ஓர்வேள்விசெய்து அரனை யழிப்போமென்று ஆபிசாரஹோமமியற்ற, அவ்வக்கினியில் நினைத்தற்குமரியவுருவும் இடிமுழக்கனைய வெடிபடுதொனியும், பெரியவாயும், வளைவாகிய பற்களும், கூர்மைவாய்ந்த நகமும், தீப்பொறிசிந்துஞ் சிவந்தவிழியும் அஞ்சாமையுமுடைய புலியொன்று அதிகரித்த கோபத்துடன் தோன்றியது. முனிவர் வல்லியத்தைநோக்கி முக்கட்பிரானை முடிக்கவென விடுக்க, அது விடையூர்தியைத் தேடி விரைந்துவருகையில், உலகினர் அச்சுறவோடிவரும் உழுவையை உம்பர்பெருமான் எதிர்சென்றுபற்றிச் சங்கரித்துத் தமதருமைத் திருமேனியில் அதன் சருமத்தை யாடையாக வணிந்தனர்.

வல்லியம் வலியிழந்து வஸ்திரமானபின், எவற்றையுமழிக்கும் இணையில்லாக் கணிச்சி யொன்று, எரியிலிருந்து பிறக்க, அந்தணர் ஐயன்மேல்விடுப்ப அஃது எதிர்வர, சங்கரர், தமது செங்கையிற் பற்றி இங்கொரு படையா யிருவென விசைத்தனர். மீண்டும் ஓர்



௨௫ சார்த்தூலஹர மூர்த்தி.

மான் உற்பவித்தது. அதனை மகாதேவன்மேற் போக்க, அது சரா சரமெல்லா மழியும்படி இரைச்சலிட்டு அந்தரமார்க்கமா யெழுந்து வரக்கண்ட அரன் அதனொலியால் உயிர்கள் வருந்தாது கிருபைபுரிந்து இடக்கரத் தேற்று "ஈண்டிருந்திகை" எனப் பணித்தனர். அதன்மேல் சர்ப்பங்கள் பிறந்தன: அவற்றைச்செலுத்த, சம்பு சரீரத்திற் பணியாக அப்பணிகளை யணிந்தனர். பூதவெள்ளம் தோன்றின. ஆதிநாதன்மேல் ஏவினர். மாதுபாகர் வருகெனவிளித்து "நமது சேனையாய் நாளுமிருத்திர்" என நன்கருளினர். ஒரு வெண்டலை உலகழியச் சிரித்துத் தோன்றக்கண்டு சிவன்மேற் பிரயோகிக்க, சிவபிரான் திருக்கரத்தாற்பற்றிச் சிரமீதணிந்தனர். இவற்றைக் கண்டமுநிவர் முனிவுற்று,முன்னவன்மேல்மந்திரங்களைவிட அவை துடிபுருவேற்று இடியென முழக்கி யெதிர்வர, எம்பிரான் கரத்திற் பற்றி"என் கன்னத்தில் முழங்குக" எனக் கட்டளையிட்டனர். தாருவனத்தோர் தீயாக்கோபத் தழலால் மீண்டும் யாகஞ்செய்ய முயலகன் பிறந்தான். முநிவர், முயலகனையும் ஹோமாக்கினியையும் "உமைகேள்வனை யுயிர்செகுக்க" என வோதியனுப்பினர். நேர் வரக்கண்ட நின்மலர் நெருப்பைக் கையிற் றாங்கி, நிசாசரனாகிய முயலகனை நிலத்தில் விழக் காலாற் றள்ளி முதுகின்மேல் தமது முண்டகத்தாளூன்றி நின்றனர். வேறொன்றுஞ் செய்யமாட்டாத வேதியர் பல சாபமிட அவை தாளுவினிடஞ் செல்லாமைகண்டு தமோறிநின்றனர். முயலகன் முதுகை யசைக்க முக்கணர் நடிக்க, கண்ட நான்முகன் முதலானோர் "அரகர சங்கர சம்பு" எனத் தொழுவாருந் துதிப்பாருங் களிப்பாருங் கைகுவிப்பாரும் பாடுவாரும் பணிவாருமாயினர்.

சிவபெருமான் தம்மைப் பணியாத தாருவனமுநிவருக்கு ஞானத்தை யநுக்கிரகித்தனர். அதனால் அந்தணர் அறிவுகூர்ந்து "ஐயனே! அடியேங்க ளறியாமையாற் பலவகையாகத் தேவரீரை யவமதித்தோம். அவற்றை மன்னிக்கவேண்டும் அருட்பெருங்கடலே",

என்று பல்முறை பணிந்து உடல் நடுங்க உரை குழற உரோமம் புள கிப்ப உள்ள முருக ஆநந்தவெள்ளம் பெருக வேண்டினர். சிவபெரு மான் "முனிவரே! சைவ நெறியைக் கைக்கொண்டு நற்றவம்புரிந்து நானிலத்திருத்திர்" என்று விடுத்து, திருக்கைலையை யடைந்து திரு மால் பிரமன் முதலானோரைத் தத்த மிடஞ் செல்ல விடுத்தனர். இதன் முற்பட்ட சரிதத்தைப் பிக்ஷாடனமூர்த்தத்திற் காண்க.

ஈண்டு தாருவனமுனிவர் செய்த ஆபிசாரவேள்வியில் தோன்றி அவர்கள் ஏவலின்படி வந்த புலியைச் சங்கரித்து உடையாகப்போர்த்த கோலமே சார்த்தூலஹரமூர்த்தமெனப்படும்.

**கந்தபுராணச் சுருக்கம்.**

"தீதின்மாதர்கள்கற்பழித்தவனைச்செகுத்திடுவோமென
மாதழற்கொண்மகம்புரிந்ததின்வந்துவந்துபிறந்திடும்
காதுவெம்புலிபரசுநவ்விகடும்பணித்திரள்பூதர்கண்
மோதுவெண்டலைதிண்டிறற்றுடிமுயலகன்றனையேவினர்.
வேங்கைதன்னையுரித்துடுத்தனன்மிக்கசாரதர்தானையாய்ப்
பாங்குறும்படியோதினொருபாதவண்கமலத்தினு
லேங்குறும்படிமுயலகன்றனையீடினேடுமிதித்தனன்
வாங்கருங்கவினுற்றமேனியின்மற்றவையாவுமணிந்தனன்."

சார்த்தூலஹரமூர்த்தயேநம:

---



26 பாசுபத மூர்த்தி.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

# இருபத்தாறாவது
# பாசுபதமூர்த்தி.

சந்திரவங்கிசத்து மன்னரில், பாண்டு புத்திரர் பஞ்சவர்கட்கும், திருதராட்டிரன் மக்கள் நூற்றுவர்கட்குந் தொடர்ந்த பாரதப் போரில், பதின்மூன்றாந்தினப்போரில், பல்லாயிரவரான சஞ்சத்தவர்களைப் பார்த்தன் கொன்று திரும்புமுன், அநேக அரசருடன் அமர்செய்து அவர்களை அபஜெயப்படுத்திவரும் அபிமந்நு வென்னும் அருச்சுனன் சுதனைச் சயந்திரதன் சங்கரித்தனன். அதனைப் பாடிவீடுசேர்ந்தறிந்த பற்குனன் பதைத்துத் துடித்து வேர்த்துக் களைத்துக் கோபித்துப் பற்களைக் கடித்து மீசை துடிக்கத் தோளைப் புடைத்து "என்மகனைக் கொன்றவனை நாளைச் சமரில் நாசஞ்செய்யேனாகில் நான் எரியில்வீழ்ந்திறப்பேன்" எனச் சபதஞ்செய்தனன்.

அப்பொழுது அவ்வருச்சுனனுக்குச் சாரதியாயும் அருந்துணையாயும் மைத்துனனாயுமுள்ள கண்ணன் அவனைப் புறத்தே கொண்டுபோய்த் தேற்றி "காலையிலிருந்து கடும்பசியாக விருத்தலின் ஈண்டுள்ள கனிகளையேனும் புசித்துக் களையாறுக" என, அருச்சுனன் "அடியேன் அரனை அருச்சித்தன்றி அருந்தேன்" என, கிருஷ்ணன் "என்னையே பெருமானாக எண்ணி யருச்சிக்க" என, இயைந்து, அவ்வனத்திலிருந்த அநேகமலர்களைக்கொண் டருச்சித்து, அங்குக் கிடைத்த பழவருக்கங்களாற் பசியையாற்றி, அன்றெல்லாம் அயர்ந்திருந்தவனாதலின் அவ் வரண்யத்திலேயே கண் ணுறங்கினன். கண்ணன் அவனுடலைப்பாதுகாக்க அமரர் சிலரை ஆண்டமைத்துப் புத்திர சோகத்தாலே துயிலுஞ் சவ்வியசாசியின் கனவில் தோன்றி

னன். நரன் நாரணனை நமஸ்கரித்தனன், மதுசூதனன் "மைத்துன துரோணர் முதலானோர் காப்பினும் நாளைப் போரிற் சிந்துமன்னனைச் சிரமழிக்கும்படி திருக்கயிலை சென்று சிவபிரானது திருவருள்பெற்றுத் தினகரன் உதிக்குமுன்னர்த் திரும்புதும்" என அருச்சுனனுங் கனவிலே சம்மதித் தெழுந்தனன்.

கண்ணன் அருச்சுனனென்னும் இரண்டு கருமலைகள், கயிலையாகிய வெண்மலையை நண்ணி, பார்வதி யாகிய பச்சைமலையைப் பாகமாகக்கொண்ட பரமேஸ்வரனென்னும் பவளமலையைக்கண்டு பணியும்படி அப் பருப்பத மடைந்து முதற்பெருங் காவலாகிய நந்தியெம்பெருமானது நளின சரணங்களை நமஸ்கரித்து அவரநுக்ஞை பெற்றுத் திருச்சந்நிதியினுட் சேர்ந்து தேவமுநி கணங்கட்கிடையே சிங்காதனத்திற் சிலையரசபுத்திரியாருடன் வீற்றிருக்குஞ் சிவபெருமானைத் தரிசித்து, பன்முறைநிலமேற் பணிந்து கைகூப்பி நின்று,

"நித்தனே நிமலனே நிகழ்நின்றுமனே
அத்தனேயடியவர்க்கெளியவண்ணலே
பித்தனேயாதியந்தங்கள்பேசொணு
முத்தனேயுயிர்தொறுமுலாயமுன்பனே" — எனப் பல

வாறாகத் துதித்துக் கண்களில் ஆநந்தபாஷ்பஞ்சொரியும் நரநாரணர்களை நோக்கி, நம்பர் "இவ்விரவில் விரைவாக ஈண் டடைந்தது என்னகாரணம்?" என வினவ, கிருஷ்ணார்ச்சுனர் "தேவதேவா! தேவரீர் முன்திருவருள்செய்த பாசுபதத்தால் நிவாதகவசர் காலகேயர்களை வதைத்தோம். அதன் முஷ்டிநிலை தலைப்பட அநுக்கிரகிக்கவேண்டும்" என வேண்ட, அமலர் அவ்வாறே தடாகத்திலிருந்த பாசுபதத்தை இருவரா லெடுத்துவரச்செய்து, முஷ்டிநிலை (நனவிலும் மறவாவண்ணம்) முற்றுப்பெற வுணர்த்தினர். அருச்சுனன் அன்றிரவிற் கண்ணனை அருச்சித்த கடிமலர் யாவும் அண்ணல் மேனியி லமர்ந்திடக் கண்டு ஆநந்தபரவசமாய் வணங்கி நின்றனன். கண்ணன் எண்ணிவந்தது கைகூடியதென்று களித்துக் கைகூப்பிநின்றனன்.

குன்றுதல் உளமகிழ்ச்சியுடன் "பாரதப்போரிற் செயமுண்
ாகக்கடவது" என ஆசீர்வதித்து விடையளிக்க, விடையூர்தியின்
நவருள் பெற்ற இருவரும் இறைவரது திருவடியைப் பணிந்து
ரிதிற்புறம்போந்து ஆலயத்தை வலம்வந்து திருக்கைலையை நீங்கித்
ம திருக்கை சார்ந்தனர். அருச்சுனன் இவ்வாறு சொப்பனங்கண்டு
ண்ணென விழித்து அம்பறாத்தூணியில் அவ்வத்திர மிருத்தலின்
ன்மையெனத் தெளிந்துகொண்டனன். சுயோதனன் யுத்தியும்,
ரோணன் வல்லபமும் பலமன்னர் பராக்கிரமமும் மாயன் வஞ்ச
ரயா லொழிந்தன. அருச்சுனன் தனக்குச் சிவபிரான் பிரசாதித்த
சுபதக்கணையாற் சிந்துதேசாதிபதியாகிய செயத்திரதன் சிரசை
கொய்து சபதத்தை நிறைவேற்றினன். கிருஷ்ணமூர்த்தியும் அரு
னனும் அவாவியவண்ணம் அவர்கட்கு அஸ்திரமருளிய அவசரம்
சுபதமூர்த்தமெனப்படும்.

பாசுபதமூர்த்தயேநம:

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# இருபத்தேழாவது
# கங்காளமூர்த்தி.

ஒருநாள் சிவாலயத்துள்ள திருவிளக்கொன்று சுடர்மழுங்
கையில், சிவபெருமான் தேவியாரைப்பார்த்து "பெண்ணே! இ
திருவிளக்கின் திரியைத்தூண்டுவோர் திரிலோகமும் அரசுசெய்வ
என்றனர். அப்பொழுது ஓரெலி அத் தீபத்திலிருந்த நெய்யை
குடித்ததால் அஃதசைந்து திரி தூண்டப்பெற்றது. இறைவிய
எம்பெருமானை நோக்கி "இப்பொழுது இதனைத் தூண்டிய இ
வெலிக்கு இன்னருள் புரியவேண்டும்" என, அண்ணல் "அவ்
றே அளித்தனம்" என்றருளினர்.

அஃது மாவலியென்னும்பெயருடன் அசுரகுலத்திற்றோன்
அவனி முழுவதையும் அரசுபுரிந்தது. தானவர்சூழாம் வலி மிகுத
கண்டு வானவர்கோன் மனம்பொறுனய் எண்ணில்லாச் சேனையு
னெதிர்த்துப் போர்செய்து புறமுதுகிட்டோடி, திருமால்பாற் கூ
னன். அது சமயத்தில் திதி யென்பவள் விண்டுவை வேண்டி "எ
மைந்தனாக வரவேண்டும்" என வரங் கேட்க, அரவணை துயி
வோன் அவளுக்கு "அவ்வாறே யாகுக" வென்று வரமளித்து, அ
ராணி கேள்வனை நோக்கி "அமரர் பெரும! அஞ்சற்க. அவ
அடற்போம்" என்றருளிக் **காசிபமுநி**வருக்கும் திதிக்கும் மைந்தனா
**வாமனாவதாரஞ்** செய்தனர்.

மாவலி அசுரனாயிருப்பினும் யாககருமங்களைச் செய்தும், அவ
வர் விரும்பிய தானங்களை அபரிமிதமாக அளித்தும், நற்செயலிலே
யிருந்தனன். வாமனவடிவங்கொண்ட மாயவன் மாவலி மாளிகைக

டைய நிருதநிருபன் கண்டு, எதிர்சென் றழைத்துச் சோடச உப
ங்களுஞ் செய்து, தக்க ஆதனத்தமர்த்தி "வேதிய! யாது கருதி
ீனை கூறுக" என, வாமனன் "மகவான்- மலரான் -மலர்தலே
த்து மன்னர் முதலானோர் மனங்களிக்க அளிக்கவல்ல வள்ளலா
ொன்று உள்ளத்திற் கொண் டுன்பா லுற்றேன்" என, மாவலி
றையோனே! ரதம்-கஜம்- துரகம்-பொன்-பொருள் - பொக்கி
முதலிய எதுவேண்டினும் இமைப்பிற் றருவேன். இயம்புக"
, அந்தணன் "அரச! அவற்றையெல்லாம் அவாவினே னல்
ன். எனதடியால் மூவடிமண் வேண்டினேன்"என,மாவலி "மூவ
ண் எற்றுக்குப் பயன்படும்" என, மாணி "தவஞ்செய்திருப்
ன்" என்றனர்.

அப்பொழுது அருகிருந்த அசுரகுருவாகிய **சுக்கிரன்** "அரசே!
னோர் பார்ப்பனச் சிறுவனென் றெண்ணுதே. திருமா லாதலின்
ம விளையும்" எனச் செப்பினன். மாவலி "மாலே யென்பால்
றயவனாகி மூவடிமண் யாசித்தானென்று அரும்புக ழிருக்குமாத
ா அதனால்விளையுஞ் சஞ்சலம் பெரிதன்று" என்ற சுக்கிரன் சொ
க் கடந்து மும்முறை நீர் சொரிந்து தாரைவார்த்தனன். அதுபெ
அச்சுதர் அக்ஷணமே திரிவிக்கிரமாவதாரங்கொண்டு அண்ட
ாக மூடுருவ நின்று ஓரடியாற் பூலோகத்தையும் மற்றோரடியால்
வலோகத்தையும் அளந்து மூன்றாவது அடிக்கு இடமின்மையா
ாவலியின் சிரமே லூன்றி அவனைப் பாதலலோகத் தமிழ்த்தி
னல் அகந்தைகொண்டு ஆர்ப்பரித்து அவனிமாக்களை அழிக்க
ின்றனர்.

அதுகண்ட அமரர் அளைக்கணமுந் தாழாது,அதிவிளைவாகச்
ன் று, அம்பிகைபாகர் வீற்றிருக்கும் வெள்ளிமலையை யடைந்து,
பகவான் நளினபாதங்களைப் போற்றி உள்ளே செல்ல உத்தர
பற்று, சந்நிதானத்தைச் சார்ந்து சாஷ்டாங்கமாகப் பணிந்து
களைச் சிரமேற் குவித்து "சம்பு! சங்கரா! சச்சிதாநந்தா!

ஜகத்ரக்ஷகா ! சரணம் ! சரணம் !!" என்று பேரிரைச்சலாய்த்
த்திரஞ்செய்ய, எல்லா மறிந்த எம்பெருமான் ஓர் விளையாட
ஒன்று மறியார்போன்று " உம்பர்களே ! உங்களுக் குற்ற து
யாது ? ஓதுமின்" எனத் திருவாய்மலர்ந்தருளினர். வானவர் "ம
தேவா ! மாவலிபால் மாயவன் வாமனவடிவாய்ச் சென்று மண் ய
த்து வானுற்றோங்கி மாவலியை மாய்த்து, மமதையால் வைய
தை வதைக்கின்றனன். அவனை விரைவி லடக்காவிடில் அமரர்
தணர் முதலானோர் அரைக்கணத்தில் அழிவது சரதம்' என மு
யிட, அருள்வள்ளல் அகிலத்திலுள்ள அனைவர்க்கு முற்ற ஆபத்
அகற்றும்படி அக்கணமே அவ் வாமனன் முன்னரடைந்து, மய
மொழிய வார்த்தைகள் சில வாய்மலர்ந்தருளியும் * பிருகுமுனிவ
சாபப்படி விண்டு கருப்பாசயமுற்ற பாசவீக்க முதிர்ச்சியால்,
ளாமல், இறுமாந்திருப்பதுநோக்கி, இறைவர் இணையில்லாச் சின
கொண்டு வச்சிரதண்டமொன்று திருக்கையி லேற்று வாமனன் ப
பிலடித்தனர். வாயுவேகத்தாற் சாய்ந்த மேருமலைபோல வாமன
தரைமேற் சாய்ந்தனன். அப்பொழுது அவனது தோலையுரித்துக் ச
சுகமாகத் தரித்து முதுகென்பைப் பிடுங்கித் தண்டாகக் கையிற்
ண்டு கடவுளர் துயரொழித்துக் கயிலையடைந்தனர்.

அச்சுதன் அகந்தையகன்று, பண்டைய உணர்வெய்திப்ப
னைப் பரவி, தேவமுனிவர்கட்கு வாமனபுராண மோதி வைகுந்த
சேர்ந்தனர். மாவலி நற்கதி பெற்றனன். சிவபிரான் வாமனன
முதுகென்பைக் கொண்ட கோலமே கங்காளமூர்த்தமெனப்படும்.

[வாமனன் வானை யளந்தபொழுது மே லண்டகடாகம் பிள
ற்று, ஆகாயகங்கை யொழுகி, அது மாளவதேசவழியாய்ச் சமுத்
சங்கமமாயிற்று. அதன் விருத்தாந்தத்தை யறியார் சிலர் அக்கங்
நீரைச் சிவபிரான் அணிந்தனரெனக் குழறுவர். அஃதபத்தமென்

---

*ஆதியில் அமரருக்கும் அசுரருக்கும் நிகழ்ந்த அமரில் அண்
கள் ஆற்றகில்லாராய் விண்டுவை வேண்டியது கண்டு திருமால் செ

ஞ்சேர்ந்து கிரியைச் செலுத்தித் தீயோர் டனைச் செற்று
போனவ ரொழியத் தானவர் சிலர் தம துயிர் தப்பிப் பிழைக்
சமர்த்துறத் தோடிப் பெருந்தவஞ்செய்யும் பிருகுமுனிவர் பர்ண
யடைந்து அவர் பன்னியாகிய கியாதியென்னும் மாதினை
டைக்கலம் புக, அவ்வம்மை "அஞ்சேல்" என் றபயமளித்து
ரமத்தில் வைத்துக் காத்தனள். சீற்ற மிகுந்து தீச்சொரி விழி
டுஞ் சக்கரப்படையைத் தாங்கிய கையொடுஞ்சீதரன் பாதசாரி
வருதல் கண்ட கியாதி வணங்கி நிற்க, மாதவன் சினந்து மாதின்
லைக் கொய்து தானவர் குழாத்தைச் சங்கரித் தொழித்தனன்.

பிருகுமுனிவர் தன் பெண்சாதியைக் கொன்ற பின்னை கள்வன்
பெருங்கோபங்கொண்டு "கேசவா! ஈசனை யன்றி யெவரை
பணிவோம். சைவசமயமே தரணியிற் சிறந்ததென் றெண்ணி
ப்ப துண்மையாயின், இறந்த பிறவிக ளீரைந் தெய்தி வரு
க" வென வசைமொழி யிசைத்து "நின்னடியார்கள் நெறி
வழி தீக்கை பெற்றுச் சிவநிந்தை செய்து நிரயங்கடைக" என
டமொழியிட்டாற் கூறி, சுக்கிரனு லுயிர்த்தெழுந்த தோகையோடு
ந்து வாழ்ந்தனர். திருமால் தனக்குற்ற பிருகுவின் சாபம் பிரிய
க யாதெனப் பெரிது மாலோசித்துத் திரிபுராந்தகனன் சேவடிவ
கிப பெருமுனி சபித்த பிறப்பொரு பத்தும் ஒழிப்ப வேண்டு
றுள்ளத் தெண்ணிச் சிவலிங்கக் குறியொன்று பிரதிட்டைசெ
பாசுபத விரதம் பூண்டு உடலெங்குந் திருவெண்ணீறு சண்ணி
த் திரிபுண்டரந் தரித்து உருத்திராக்கம்பூண்டு உருத்திரசமக
ந்திரஞ் சபித்துக்கொண்டு, சருகு-நீர்-பழம்-காற்று முதலிய
றைப் புசித்து ஒரே மனதாய் உமாபதியை உள்ளத்திருத்தி, பஞ்
னிமத்தியிற் பலகால நின்று தவஞ்செய்தனர். அவர் தவத்திற்
ந்த அடியவர் சகாயர் அம்பிகை சமேதராய் இடபவாகன மிவர்
தரிசனந்தர, கமல கேசவன் கண்கள் களிக்கக் கண்டு 'அரகர'
ன்று சிவநாமங்களைத் துதித்து அஷ்டாங்க பஞ்சாங்க நமஸ்கா

ரம் பல முறை செய்து பணிந்து நிற்க, பரமன் களித்து "மாதவ யாது வேண்டினை" எனத் திருவாய்மலர்ந்தருள, சார்ங்கன் "சங் ர! பிருகுமுநிவன் சாபத்தை விலக்கியருளவேண்டும்' என் றிரப் பெருமான் "மெய்யடியவர் இசைத்த மொழிகள் என்றுந் தவறு மாநிலத்துள்ள மன்பதைக் குதவியாய்ப் பிறவி பத்தும் நீ பெறு லே திண்ணம் ஆயினும் நம்மடி யருச்சனைப் பலனால் ஐந்தினி லரு மற்றைந்தினிற் றண்டமு மடைதி" என்றருளக் கேட்டுக் களித் "தேவரீரோ அடியேனைத் தண்டிக்கவும் காக்கவும் நாயேன்பெறு வ வுற்றது என்னபாக்கியம்" என்று வணங்கச் சிவபெருமான் அந்த தானமாயினர். அவற்றுள் முற்பட்ட ஐந்தில் தண்டமும், பிற்பட் ஐந்திற் சிவார்ச்சனை செய்யும் பெரும்புண்ணியமும் பெருமான் தி வருளாற் பெற்றனர்என்பது. சிவபிரானே சர்வதேவர்கட்குஞ் சி கர் என்றறிக.

## இலிங்கபுராணம்.

விஷ்ணும் ப்ரஹ்மண மிந்த்ரஞ்சயமமந்யாஸ்ஸுராநபி
யதோநிக்ருஹ்யஹரஸேஹர இத்யுச்யதே புதை:

లైంగపురాణము.

విష్ణుంబ్రహ్మాణమింద్రంచయమమన్యాస్సురానపి।
యతోనిగృహ్యహరతేహరఇత్యుచ్యతేబుధైః॥

### ஸ்காந்தம் விஷ்ணுவாக்கியம்.

த்வம்விஶ்வகர்த்தாதவநாஸ்திகர்த்தா
த்வம்விஶ்வபர்த்தாதவநாஸ்திபர்த்தா
த்வம்விஶ்வஹர்த்தாதவநாஸ்திஹர்த்தா
த்வம்விஶ்வநாதாதவநாஸ்திநாத:

త్వంవిశ్వకర్తాతవనాస్తికర్తా। త్వంవిశ్వభర్తాతవనాస్తిభర్తా।
త్వంవిశ్వహర్తాతవనాస్తిహర్తా।త్వంవిశ్వనాథాతవనాస్తినాథః॥ స్కాం[illegible]

## ஆதித்யபுராணம்.

“...பாந்தேஶமித த்ரிவிக்ரமமஹாகங்காளபத்தஸ்புரச்
(சேஷஸ்ஸூக்ரமதோ ந்ருஸிம்ஹநகரப்ரோதாதிகோலாமிஷம்
...ஸ்வைகார்ணவ ஸம்விஹாரமுதிதௌ யௌ மத்ஸ்யகூர்மாவுபௌ
...ஷந் தீவரதாங்கதோஸ்ய துஸதாம் மோஹம் மஹாபைரவம்.”

## ఆదిత్యపురాణం.

కల్పాంతె శమిత త్రివిక్రమ మహాకంకాళ బద్ధస్ఫుర
చ్ఛేషః స్సూక్రమఠో నృసింహనఖర ప్రోతాదికోలామిషం।
విశ్వైకార్ణవ సంవిహారముదితౌ యౌ మత్స్యకూర్మావుభౌ
కర్షన్ద్దీపరతాంగతోస్య తుసతాం మోహం మహాభైరవః॥

## உபதேசகாண்டம்.

“பற்றினன் வயிரத்தண்டம் பகிரண்டமதிரவோச்சிச்
சுற்றினனுருமுக்காலத் தெழித்தனன் றுளவமார்பி
னெற்றினனெற்றலோடு மெறிபடு சண்டவாயு
முற்றுறவிற்றுவீழு மூரிவெங்கிரியிற் சாய்ந்தான்.
கருநிறக் கமஞ்சூன்மேகக் காரதளுரித்து வாங்கித்
திருநிறத்தமையக் காளகஞ்சுகமென்னச் சேர்த்தி
வெரிநுறப்பிடுங்குமென்பு நண்டென வெடுத்துக்கொண்டான்
மருமலர்த்துளவமாயோ னுணர்வுமயக்கந்தீர்ந்தான்.”

## காஞ்சிபுராணம்.

“குறளாயணுகி மூவடிமண் கொண்டு நெடுகி மூவுலகுந்
திறலானளந்த மாவலியைச் சிறையிற்படுத்து வியந்தானை
யிறவேசவட்டி வெரிநெலும்பை யெழிற்கங்காளப்படையென்ன
வறவோர் வழுத்தக் கைக்கொண்டவங்கணாளன் றிருவுருவம்.”

கங்காளமூர்த்தயேநம:

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

# இருபத்தெட்டாவது
# கேசவார்த்த மூர்த்தி.



திருமால் முன்னொருகாலத்திற் சிவபிரானை நோக்கிக் கடுந்த
ஞ்செய்தனர். அரவாபரணர் அச்சுதன் செய்யும் அருந்தவத்திற்
அகமகிழ்ந்து அவருக்குப் பிரசன்னமாய் "விண்டுவே! தேவாசுர
ளாலே தீர்த்தற்கரிய வல்லமையும், எத்தகையினராயிருப்பினும்
வர்கள் யாவரையும் மயக்கத்தக்க மாயையும் உனக்குக் கடாக்ஷி
தோம் **மாயன்** என்றினியுன்பெயர் வழங்குக. நீயே எனது இட
புறமாவாய்." எனத்திருவாய்மலர்ந்தருளி அந்தர்த்தானமாயினர்.

**திருநாவுக்கரசுசுவாமிகள்.**

"எரியலாலுருவமில்லையேறலாலேறவில்லைக்
கரியலாற்போர்வையில்லைக்காண்டகுசோதியார்க்குப்
பிரிவிலாவமரர்கூடிப்பெருந்தகைப்பிரானென்றேத்தும்
**அரியலாற்றேவியில்லை**யையனையாறனார்க்கே."—எனவும்,

இரட்டைப்புலவர்.

"வருக்கைத்தடம்பொழிலாமாத்தையையர்க்குமாசொன்றில்லா
முருக்கொத்தமேனிபழகியநாதர்க்குமூச்சரவத்
திருக்கைக்கமல **அரனுக்கரிதிருந்தேவி**யன்றேல்
**அரிக்குப்போநுஞ்ஞாயிர்** செவ்வீர்நும்மறிவின்மையே."— எனவு

**காசிகண்டம்.**

'ஆற்றல்வடிவாட்டடங்கையவுணராலு மகல்விசும்புதனிபுரக்
மமரராலு, மாற்றரிதாயெவ்வுயிர்க்குமயக்கஞ்செய்யுமாயை நினக்க
த்தனமெம்மிடப்பாலீயே, யூற்றிருந்தூறவொழுகுந்துளவத்தா

[illegible]னையிகழ்ந்தோ ரெமையிகழ்ந்தோ ரென்னவோதி, யேற்றையிருங் [illegible]காடியுயர்த்த செக்கர் வேணி யிறைவனுயர்த்தடங்கயிலை யெய்தி [illegible]னே.''—எனவும், வரும் பிரமாணங்களாற் சிவசத்திகளுள்ளே [illegible]விஷ்ணுமூர்த்தியும் ஒன்றென்பது பெறப்பட்டது.

அத்தகைய பேற்றினையடைந்த அச்சுதர் சிவபிரானரது [illegible]ருவுள்ளக் குறிப்பின்படி பராசத்தியேயாவர்; பாரியாகையிற் பார்[illegible]தியும் ஆணுருவாகையில் விஷ்ணுவும் க்ரோதமுற்றாற் காளியும் [illegible]த்தமுனையிலே துர்க்கையுமாக விளங்குவர்.

ஆகமரஹஸ்ரம்.

[illegible]சைவசக்தி:பரமேஸ்வரஸ்ய ப்ரயோஜநார்த்தாயசதுர்விதாபூத் [illegible]பாபேவாரீபுருஷேஷுவிஷ்ணு: க்ரோதேசகாளீஸமரேசதுர்கா.

[illegible]

[illegible]

[illegible]

[illegible]

ஒருகாலத்தில் உமையம்மையார் சிவபெருமானை நோக்கி விர[illegible]ங்களுட்சிறந்த சோமவாரவிரதத்தை ஆச்சிரயித்து வசிஷ்ட ராதி [illegible]முனிவர்கட்கு அன்னமளிக்கையில், இறைவியாரது தவச்செயலைக் [illegible]காணவிரும்பிய எம்பெருமான், விஷ்ணுமூர்த்தி பாரியாகிப் பின் [illegible]ர, தாம் விருத்தவேதிய வடிவேற்று எழுந்தருளி, விமலையின் விர[illegible]த்தைச் சோதித்து, பெருமான் தமது நிஜவடிவும், திருமால் முத[illegible]லிற் பார்ப்பதி யுருவும் பின்னர்த் தனது நிஜவடிவுங் காட்டத் தரி[illegible]சித்துக் களித்தனரெனவும் ஓர் சரித முளது.

சைவபுராணம்.

பேரபோகீந்த்ரதகயே பத்ந்யாஸார்தம்தவாஜிரம்
ப்ராப்ய [illegible] [illegible].

அதாலோக்யமஹாதேவம் விஸ்மயோத்புல்லலோசநா
கிமிதந்தேவிவிஸ்மிதம் ஸேயமித்யாஹபார்வதீ
அதேங்கிதஜ்ஞோதைத்யாரிர் நாரீரூபம்விஹாயதத்
ஸ்வரூபந்தர்ஶயாமாஸ பார்வத்யா:ஸந்நிதௌஹரி:
நீலநீரதஸம்காஶ: புண்டரீகதளேக்ஷண:

𑌤𑌤𑍍𑌰 𑌸𑍍𑌕𑌾𑌨𑍍𑌦𑍇 𑌶𑌿𑌵𑌪𑍁𑌰𑌾𑌣𑍇.

[illegible]
[illegible]
𑌅𑌥𑌾𑌲𑍋𑌕𑍍𑌯𑌮𑌹𑌾𑌦𑍇𑌵𑌂 𑌵𑌿𑌸𑍍𑌮𑌯𑍋𑌤𑍍𑌪𑍁𑌲𑍍𑌲𑌲𑍋𑌚𑌨𑌾 ।
𑌕𑌿𑌮𑌿𑌦𑌂𑌦𑍇𑌵𑌿𑌵𑌿𑌸𑍍𑌮𑌿𑌤𑌂 𑌸𑍇𑌯𑌮𑌿𑌤𑍍𑌯𑌾𑌹𑌪𑌾𑌰𑍍𑌵𑌤𑍀 ॥
𑌅𑌥𑍇𑌙𑍍𑌗𑌿𑌤𑌜𑍍𑌞𑍋𑌦𑍈𑌤𑍍𑌯𑌾𑌰𑌿𑌰𑍍𑌨𑌾𑌰𑍀𑌰𑍂𑌪𑌂𑌵𑌿𑌹𑌾𑌯𑌤𑌤𑍍 ।
𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌂𑌦𑌰𑍍𑌶𑌯𑌾𑌮𑌾𑌸 𑌪𑌾𑌰𑍍𑌵𑌤𑍍𑌯𑌾𑌃𑌸𑌨𑍍𑌨𑌿𑌧𑍌𑌹𑌰𑌿𑌃 ।
𑌨𑍀𑌲𑌨𑍀𑌰𑌦𑌸𑌂𑌕𑌾𑌶𑌃 𑌪𑍁𑌣𑍍𑌡𑌰𑍀𑌕𑌦𑌳𑍇𑌕𑍍𑌷𑌣𑌃 ॥

அம்பிகைபோன்ற அத்தகைய அழகியவுருவை அச்சுதர் எ
வாறடைந்தனரென்று பரியாலோசிக்கும்பக்ஷத்தில், அகிலலோக
திலுஞ் சிறந்த திரிபுரஸுந்தரி என்னுங் காரணப்பெயர் வாய்
எமது தாயாகிய கவுரியைக் கருதிக் காலம் பல கடுந்தவஞ்செய்
கைகூப்பிப் பணிந்து ஈச்சுவரியாரைப்போன்ற திவ்ய வடிவை அ
வம்மையார் திருவருளினாலே யடைந்தனர் எனக் கொள்க.

ஆநந்தலஹரி.

ஹரிஸ்த்வாமாராத்யப்ரணதஜநஸௌபாக்யஜநநீம்
புராநாரீபூத்வாபுரரிபுமபிக்ஷோபமநயத்-ஸ்மரோபித்வாம்நத்வா

𑌆𑌨𑌨𑍍𑌦𑌲𑌹𑌰𑍀.

𑌹𑌰𑌿𑌸𑍍𑌤𑍍𑌵𑌾𑌮𑌾𑌰𑌾𑌧𑍍𑌯 𑌪𑍍𑌰𑌣𑌤𑌜𑌨𑌸𑍌𑌭𑌾𑌗𑍍𑌯𑌜𑌨𑌨𑍀𑌂 ।
𑌪𑍁𑌰𑌾𑌨𑌾𑌰𑍀𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌪𑍁𑌰𑌰𑌿𑌪𑍁𑌮𑌪𑌿𑌕𑍍𑌷𑍋𑌭𑌮𑌨𑌯𑌤𑍍 ।
𑌸𑍍𑌮𑌰𑍋𑌽𑌪𑌿𑌤𑍍𑌵𑌾𑌂𑌨𑌤𑍍𑌵𑌾 ॥

## ஸௌந்தர்யலஹரீ.

ஸமுத்பூதஸ்தூலஸ்தநபரமுரஸ்சாருஹஸிதம்
கடாக்ஷேகந்தர்பா:கதிசநகடம்பத்யுதிவபு:
ஹரஸ்யத்வத்ப்ரஸந்திம்ஜநிஜநயம்தஸ்ஸமதுலே
பவத்யாயேபக்தா:பரிணதிரமீஷாமியமுமே.

ஸௌந்தர்யலஹரீ.

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

ஈண்டெடுத்துக்காட்டிய இவ்வகைய பலவேதுக்களால், திரு
ால் சிவசத்தியே யென்பது பெறப்பட்டது. புருஷபாகம் வலப்
றமெனவும் பெண்பாக மிடப்புறமெனவுங் கூறப்படும் நியாயத்
ால் சிவபிரானது வாமபாகத்தைத் திருமால் சிவார்ச்சனை செய்து
பற்றுக்கொண்டனர். அச் சிவகேசவரிருவரும் ஒருவடிவாய் (அர்
தநாரீச்சுரம்போல) வலப்புறம் செந்நிறமாய் மழு அபயமும், இட
புறம் பசுமையாய்ச் சக்கரவரதமுந் தாங்கி ஒரு திருமேனியுடன்
கபீடத்திற் சமானமாக எழுந்தருளியிருப்பர். அத் திருவுருவத்
தச் சங்கரநாராயணரெனச் சற்றும் பேதமின்றி ஒருமூர்த்தியாய்
பாசனார்ச்சனைகள் புரிந்து நற்கதியுற்றோராகிய கண்ணுவராதி
ரிவரர்கட்கு எண்ணில்லை. இத்தகைய இலக்கணமாக, கேசவ
னப் பாதியாக வுடைத்தாயிருத்தலின் பெருமான் கேசவார்த்தமூ
த்தியெனத் திருநாம மெய்தினர். இத்திருவுருவம் ஹரிஹரம் என்
ும் க்ஷேத்திரத்திற் பிரசித்தமாக விளங்கும்.

## ந்ருஸிம்ஹோத்தர புராணம்.

ஹரிஸங்கரயோர்நாஸ்தி யுவயோர்பேதஈஸ்வர
யேபேதபுத்யாபஸ்யந்தி தேநராயுவயோர்ஹர-இத்யாதி-

நிவாரிதும்மஹாரம்ஹௌ ஹரிஸங்கரரூபிணௌ
யுவாமேகாக்ருதிம்ப்ராப்ய ஸுரலோசநகோசரௌ
ஸ்தாதவ்யமசிராதத்ரா வைகதைவவரம்மம
இதிதஸ்யவச:ஸ்ருத்வா கர்தும்தஸ்யமநோரதம்
பஸ்யதாம்ஸர்வதேவாநாம் தாவேகாக்ருதிமாபது:
தஸ்மாத்தரிஹரக்ஷேத்ர மிதிதத்ப்ரதிதம்புவி.

[illegible]

[illegible]
[illegible]

[illegible]

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

பதினோராந்திருமுறை.

“ இடமால்வலந்தானிடப்பாறுழாய்வலப்பாலொண்கொன்றை
வடமாலிடந்துகிரேல்வலமாழியிடம்வலமா
னிடமால்கரிதால்வலஞ்சேதிவனுக்கெழினலஞ்சேர்
குடமாலிடம்வலங்கொக்கரையாமெங்கள்கூத்தனுக்கே.”

கேஸ்வார்த்தமூர்த்தயேநம:



29 பிக்ஷாடன மூர்த்தி.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

# இருபத்தொன்பதாவது

# பிக்ஷாடநமூர்த்தி.

தேவதாருவன முனிவர் சிவபக்தியில்லாராகி, யாகமே முத்தி யக்கவல்ல நற்கருமமென்று சிந்தித்து விழைவுடன் எண்ணில்லா வள்விபுரிவாராயினர். பரந்த வுலகில் நிகழும் பலவற்றையு மறிந்த ரமபதி யிதனை யுணர்ந்து, திருமாலைத் தம்பால்வரத் திருவுள்ளஞ் சய்ய, கமலைகேள்வன் கண்ணுதல் கருத்தறிந்து கயிலையங்கிரியை டைந்து, திருநந்திதேவர் விடைபெற்றுத் திருச்சந்நிதானத்தினுட் சன்று சிவபெருமானைப் பணிந்து நிற்க, விடையூர்தி விருப்புடன் ிண்டுவைக் கைப்பற்றி யெழுந்து வெள்ளிமலையை விலகி வெளி ந்து "மாதவ! முன்னொருகால் நீ கொண்ட மோகினி யுருவை யீ ளடெய்துக" என, பன்னகசயனன் பணிமேற்கொண்டணியிழை ா யப்பொழுதே யாயினன். மாலென்னும் பெயருக்கேற்பத் தமது ருவுருவைக்கண்டு மாலெய்தும்படி அம்பிகாபதியும் அவ்வரிவைக் கற்ற ஆடவசிரேஷ்டராய்வடிவேற்று, கபாலமுஞ் சூலமுங்கையிற் ்றித் திகம்பரராய்ப் பிக்ஷாடநத் திருக்கோலங்கொண்டு, முனிவர் ாசமாகிய தாருவனத்தை மோகினிப்பெண்ணுடன் நண்ணினர்.

அச்சமயத் தருந்தவத்திருந்த அந்தணர்குழாம் அரிவையைக் ண்டு அறிவழிந்து தவநெறிதவறி அவநெறிகொண்டு காமவிருப்ப மலீட்டாற் பின்றொடர்ந்து, விளக்கைக்கண்ட விட்டில்போலத் ரன்புறுவாராயினர். இத்தகையமாயையியற்றும் வலிதந்து மாய்ஞ ிய மோகினியை மகாதேவன் பிரிந்து, கையிற்கொண்ட பரிகல

த்தி லேயமேற்பார்போல முனிவரர் வீதியிற் சென்று பண்ணோசை யோடு உள்ளாளக்கீதம் பாட முனிபன்னியர் கேட்டு, அவ் வினிய வோசையுடன் பாடுவோனைக் காணவிரும்பி வீதிவாயிலில் வந்து பெருமானது பிக்ஷாடநத் திருக்கோலத்தைத் தரிசித்துக் காமத்துய ரிற் கட்டுண்டு வருந்தினர். அரிவையர் சிலர் ஐயனையணையும்படி பிரார்த்தித்தனர். பெண்கள் சிலர் பிச்சையிட்டனர். கன்னியர் சிலர் காமநோயாற் கலைவிழ்ந்தனர். மாதர்கள் சிலர் வளை கழன்ற னர். நங்கையர் சிலர் நாணமழிந்தனர். எம்பெருமானது திருவிளை யாடலால் மாமாயா சாலவித்தைபோல் அம் மாதரிடம் நாற்பத் தெண்ணாயிரம்புதல்வர் அக்காலத் துதித்தனர்.

அப்பிள்ளைகள் பிக்ஷாடநமூர்த்தியைப் பணிய, புராரி "எம் மைநோக்கித் தவஞ்செய்க" என விடுத்து, நகரின் புறம்போந்த னர். முனிவரைமோகிக்கச்செய்த மோகினிமுதல்வனையடைய, பின் வந்த பெருந்தவத்தினர் தத்தம்பெண்டிரை யவாவிச்சென்றுகண்டு நம் மனைவிமாரும் இத் திகம்பரனால் நாண் வளை முதலியவற்றைக் கழிந்தனர்போலுமென்று கருதி "நாமொரு பெண்ணாற் றவமழி ந்து காமபாசத்திற் கட்டுண்டோம். நம்பன்னியர் ஒருவன் மாயத் தாற் கற்பிழந்தனர்" என்று பேசிக் கிலேசித்து, தமது தவநிலையை மாயனால் மாய்த்ததும், தம் பன்னியர் கற்பை யழித்ததும் சங்கர னே யென்று தமது ஞானத்தாலுணர்ந்து "பெருந்தவ மழியினும் பிராயச்சித்தஞ்செய்யலாம்; கற்பழிந்ததே கற்பகாலமும் காசினி யோர் நிந்திப்பரோ" எனக் கழறி, பிக்ஷாடநர் பின்செல்லும் பெண் டிரைக்கூவி, "யாவர்பின் செல்கின்றீர்? கற்பழிந்தவர் கடுந்தழல் மூழ்கிக் காயத்தை யொழித்தல் கடன்; அன்றேல் உம தூரையடை மின்" என்றனர். காரிகைமார் கணவர் கழறிய மாற்றத்தைக் கரு த்துட்கொண்டு கண்ணுதலைப் பிரியக் காலெழாது பின்தொடரு கையில், கருணாமூர்த்தியின் திருவருளால், உம்பர்பெருமா னுரு வை யுட்கொண்டு ஒருவாறு மனந்திரும்பி ஊர் சேர்ந்தனர்.

சிவபெருமான் திருத்தெளிச்சேரி யென்னும் நகரினீங்கினர். ...ர்வர் பெருமானைக் கொல்லவேண்டுமென்றுட்கொண்டு அபிசார ...வள்விசெய்து அதனிற்றோன்றிய புலி நாகம் முயலகன் முதலிய ...ற்றைப் பிரயோகிக்க, அத்தன் அவற்றைச் சங்கரித்தும் உடை முதலியவாகத் திருமேனியி லணிந்தும் துன்புறாது, திருமாலுடன் ...யிலைசார்ந்து கமலைகேள்வனை விடைகொடுத் தனுப்பி வீற்றிருந் ...னர். அவர்கள் செய்த அபிசாரவேள்வியைப்பற்றிய விவரங்களைச் ...ார்த்தூலஹரமூர்த்தத்திற் காண்க.

தாருவன முனிவர் தவத்தையும், அவர் மனைவியர் கற்பையும் அழிக்கும்படி பெருமான் திகம்பரராய்ப்பிரமகபாலந் தாங்கிப்பலி ஏற்கச் சென்றகோலமே பிக்ஷாடநமூர்த்தமெனப் பெயர்பெறும்.

தாருவந க்ரீடாவிலாசம்.

வாஸிஷ்டலிங்கம்.

வஸிஷ்டனை நோக்கி ஈஸ்வரவாக்கியம்.

விஷ்ணுஸ்சமாயயா ப்ரஹ்மந் பார்யாபூர்மமஸுந்தரீ
தயாஸஹமஹாக்ரீடாந் க்ருத்வாவேஷந்திகம்பரம்.

[illegible]

[illegible]

[illegible]
[illegible]

காஞ்சிபுராணம்.

"அடியிற்றொடுத்தபாதுகையுமசைந்தநடையுமிசைமிடறும்
வடிவிற்சிறப்பநடந்தருளிமுழையேந்திமருங்கணைந்த
தொடியிற்பொலிதோண்முனிமகளிர்சுரமங்கையராமயல்பூட்டிப்
படியிட்டெழுதாப்பேரழகாற்பலிதேர்பகவன்றிருவுருவம்."

பிக்ஷாடந மூர்த்தயேநம:

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## முப்பதாவது

## ஸிம்ஹஸம்ஹாரமூர்த்தி.

இரணியகசிபென்னு மியற்பெயருடைய ஒருவன் அசுர குலத்திற்றோன்றி, தமது குலகுருவாகிய வெள்ளியை விளித்து "ஆசிரியனே! யாரை வணங்கித் தவஞ்செய்தால் அடைதற்கரிய வரம்பெற்று, வரம்பில்லாக்காலம் வலிமிகுந்து வாழலாம்" என, அதற்குச் சுக்கிரன் "அரவாபரணனையன்றி யத்தகைய வரத்தை யளிப்போர் யாவர்?" என்று, அப்பரமனைப்பணியும் பலமுறைமையும் பயிற்றித் தனதுலகுசார, இரணியகசிபு சிவபிரானது திருவடிகளை இதயத்திலிருத்தி எண்ணில்கால மியற்றிய தவத்திற் கிறைவர் மகிழ்ந்து "யாதுவேண்டுவது" என, அசுரன் "அண்ணலே! பிருதிவு முதலிய ஐம்பூதங்கள்-ஆயுதக்கருவிகள் - வானவர் - மாநுடர் - பறவை - விலங்கு முதலிய பிராணிகள் இவை யொன்றினாலும் இரவிலும் பகலிலும் இறவாவரம் வேண்டும்" என் றேற்ப, எம்பிரான் "அவ்வாறே யாகுக" என வரமருளினர்.

தான்பெற்ற வரத்தினாற் றருக்கெய்திய தானவன், நால்வகைச் சேனையையுங் கடல்போற் கூட்டிக் காசினி முழுதினுக்குங் காவலனானன். தேவரம்பையர் சித்தமாதர் இயக்கஸ்திரீகள் முதலானோர் சாமரையிரட்டப் பணித்து, இந்திரன்முதலிய வெண்டிசைக் காவலர் வந்து நாடொறும் வணங்கிப் பணிப்பனபுரிய வமைத்து, பிரமன் தன் பெயர்கேட்குந் தோறு நடுங்கும்படி, கருடர்-காந்தருவர்-சித்தர்-வித்தியாதரர் முதலானோர் சித்தந் திகைக்கச் செங்கோல்



30 சிம்ஹக்ன மூர்த்தி.

சலுத்தினன். அக்காலத்தில் அவனுக்கிளையா லனைவரும் (இரணி யகம:) எனக்கூறவேண்டுவதேயன்றிவேறொருவரைத்தியானிக்க படாது. இதனைப்பொருத இமையவர் விண்மூர்த்தியைக் கண்டு ளம்ப, சார்ங்கர் தனதொரு கூற்றை அவனது தவப்புதல்வனாக திப்பித்தனர். அப்புதல்வன் ஐந்துவயதடையப் பள்ளியில்விட்டுப் டிப்பிக்க எத்தனிக்கையில், உத்திரவின்படி உபாத்தியாயர் (இர ரியாயநம:) என்று போதிக்க, சிறுவனாகிய பிரகலாதன் (ஸ்ரீநாரா ணாயநம:) என, ஐயர் அரசனுக்கு அறிவிக்க, அசுரன் பலவகைத் ண்டஞ்செய்தும் பகராமையால் "நீ கூறுகின்ற பரம்பொருள் யா ரடுளது" எனக்கேட்ட பிதாவை நோக்கிப் பிரகலாதன் "இறை னெங்குமுளன்" என்று சமீபத்திலிருந்த ஓர் தம்பத்தைச்சுட்டி இத்தூணிலுமுளன்' எனக் கூறினன்.

பாகவதபுராணம்.

"சாணிலுமுளனோர்பெற்றியணுவினைச்சதக்கூறிட்ட
கோணிலுமுளன்மாமேருக்குன்றிலுமுளனின்னின்ற
தூணிலுமுளனீசொன்னசொல்லிலுமுளனிச்செய்தி
காணுதிவிரைவினென்றனன்றெனக்ககன்சொன்னான்."

கேட்ட இரணியகசிபு கோபங்கொள்கையில் நாராயணன் ரவடிவுஞ்சிங்கவடிவுங் கூடிய நரசிங்கமாகத் தூணைப்பிளந்துகொ ாடு வெளிவந்து, அத்தானவத்தலைவனைத் தன்மடியிலிருத்தி, நகங் ளால் மார்பைப்பிளந்து குடரைப்பிடுங்கி அவனுடனரும்போராற் ; இரவுக்கும் பகலுக்கும் இடையாகிய சாயுங்காலப் பொழுதில் மலிட்டு,ஒருதுளியுதிரமும்கீழ்விழாமற் கையிலேற்றும் வாய்வைத் ம்பருகி உயிர்மாய்த்தனர். (அவனைச்சங்கரித்த காலத்தையே இர ரியவேளையென்பர்) அசுர னுதிரமருந்திய வெறியால் அவனிமாக் ளைவாரி வாயிற்பெய்து, செருக்குற்றதிருமகள்கொழுநன் செயல் ண்டஞ்சிய தேவர் ஒருநொடியிலுலகமழியுமெனவுட்கொண்டோ ச்சென்று, திருக்கயிலையையடைந்து திருநந்திதேவராற் சிவபிரா

னுக்குரைப்ப, பரமசிவன் "பயப்படாதீர்கள்" என்றுபகர்ந்து, இ(
சிரமும் இணையில்லாச்சிறகும் கூரியநகமுமுடைய எட்டுக்காலு
கடுங்கோபமுங்கொண்ட சரபந்திருவுருவுடன் நரசிங்கத்தை நன்
ணிஇடிமுழக்குபோலிரைந்து உதிரவெள்ளமூற்றெடுத்தோடச் சி
கச்சிரசையும் கைகளையுங் கறித்துத்தள்ளி மேலுட்கார்ந்து சிங்க
தின் சருமத்தையுரித்துத்திருமேனிமேற் போர்வையாகக்கொண்(
வெள்ளிமலையை யடைந்தனர். விண்டு பண்டையவுணர்வு தோன்
ப்பரமனைப் பூசித்து ரசிங்கபுராண மோதி வைகுந்தமுற்றனர்.

நரசிங்கங்கத்தின் சிரத்தையறுத்துத் தலைமாலையி லணிந்
தாகவும் சரிதமுளது. இரணிய கசிபனைச் சங்கரித்த நரசிங்கத்தில
இறுமாப்பைச் சரபரூபமேற்று நாசஞ்செய்தமையாற் சிவபெ
மான் ஸிம்ஹக்நமூர்த்தியெனப் பெயருற்றனர்.

ருக்வேதம்.—அஹம்ம்ருண:ஶரபாயருஷிபந்தவே.

ஶ்ருதி:—தைத்திரீயகம்.

ஹரிம்ஹரந்தமநுயந்திதேவா: விஶ்வஶ்யேஶாநம்ருஷபம்மதீநாம்

ஸ்காந்தபுராணம்.

ஹரிம்ஹரந்தம்ஶரபம் விஶ்வஸ்யேஶாநமீஶ்வரம்
அநுயாந்திஸுராஸ்ஸர்வே நமோவாக்யைஸ்ஸஹாத்ருதம்.

காஶிகண்டம்.

புராஹிரண்யகஶிபும்தைத்யராஜம்மஹாபலம்
ஹத்வாதத்ருதிராபாந ப்ரமத்தம்ய்ாசித:ஸுரை(
ருத்ர:ஶரபரூபேண நரஸிம்ஹமபீடயத்.

ந்ருஸிம்ஹோத்தரபுராணம்.

ததோந்ருஸிம்ஹமாலோக்யசங்க்ரம்யகநஸாஹஸ:
தந்ந்ருஸிம்ஹஶிரோயாவந் நகைஶ்சேத்தும்ஸமுத்யத:! இத்யாதி
ஏவம்ஶரபலக்ஷணேந ம்ஹாரணேஸமுத்த்ருதொள
விலோக்யவிபுதாஸ்ஸர்வே மஹாபயமுபாயயு:! இத்தியாதி!
ந்ருஸிம்ஹஶரபௌத்ருஷ்ட்வா ததோப்ரஹ்மஸுரைஸ்ஸஹ
துஷ்டாவபரமப்ரீத: கௌக்ருதாஞ்ஜலிம்தத:

## ஸ்காந்தபுராணம்.

ஶைலாயுதாயஸுரப்ருந்தகமௌளிமாயா
லீலாயமாநசரணும்புஜபல்லவாய
ஹேலாவலேபபரிபூதந்ருஹிம்ஹரம்ஹோ
லீலாபராயஶரபாக்ருதயேநமோஸ்து..

## ப்ரஹ்மாண்டபுராணம்.

க்ஷய:—கதம்தேவ: ஸர்வஜகத் ஸ்ருஷ்டிஸ்தித்யந்தகாரக: ஶரபா பம்மஹாகோரம் விக்ருதம்ரூபமாஸ்தித: ஸூத:-ஶ்ருணுவந்துருஷ ஸ்ஸர்வே - இத்யாதி - ஏதாவதுக்த்வா பஶுவாந்ஸவ்ரீடம்நரகேஸரீ பரமேககரணே: ஸமாப்யாத்யம்திகம்ஹரி: தத:ஸாத்யக்தவாந்விஷ்ணுர் ஜீவிதம்ஸ்வாபராதத: தத்வக்த்ரம்தஸ்யக்ருத்திஞ்ச ஹ்ருத்வாஶ ரபவிக்ரஹ: அகேந்த்ரியத்வயகமத்வீரபத்ர: க்ஷணத்தத:

[illegible]
[illegible]
[illegible]

[illegible]

[illegible]
[illegible]

[illegible]

[illegible]
[illegible]
[illegible]

[illegible]

[illegible]
[illegible]

𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿,

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

[illegible]

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

[illegible]

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

**காஞ்சிபுராணம்.**

"நன்னாலிரண்டுதிருவடியுநனிநீள்வாலுமுகமிரண்டுங்
கொன்னார்சிறகுமுருத்திரமுங்கொடும்பேரார்ப்புமெதிர்த்தோற்றச்
செந்நீர்பருகிச்செருக்குநருமடங்கலாவிசெகுத்துரிகொண்
டொன்னார்குலங்கண்முழுதழித்தவுடையான்சரபத்திருவுருவம்."
ஸிம்ஹக்நமூர்த்தயேநம :



31 சண்டேசாநுக்ரஹ மூர்த்தி.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முப்பத்தொன்றாவது
# சண்டேசாநுக்ரஹமூர்த்தி.

சோழவளநாட்டிலே,பூர்வம் குமாரக்கடவுள் சூரபன்மனைச்
ங்கரிக்கு நிமித்தந்தென்றிசைநோக்கிச் செல்லுகையில், பரமபதி
ாகிய சிவபெருமானை யருச்சித்த தலங்களு ளொன்றாயும்,ஆசாரிய
வாமிகளின் தேவாரத் திருப்பதிகம் பெற்றுள்ளதுமான திருச்சே
நலூரில் வேதியர்குலத்திற் காசிபகோத்திரத்தில் ஜனித்த யஜ்ஞ
ந்தன் என் ஒருவனுளன். அவன் மனைவி பெயர் பத்திரை. அவ்
ிருவருக்குஞ் சற்புத்திரராக விசாரசருமர் என்பார் திருவவதாரஞ்
சய்தனர். அவர்க்கு ஜன்மாந்தர அறிவுத் தொடர்ச்சியால் வேத
வதாகமங்களை யாவர்பாலு மோதா துணரு மறிவு ஜனித்தது. அவ
க்கு எழுவயதிலேயே, தாய் தந்தையர் உபநயனஞ் செய்வித்து,
க்க ஆசிரியனைக் கொண்டு வேதமுதலிய கலைகளைக் கற்பிக்குமுன்
ாமே யறியுந் திறமுடையோரா யிருத்தல் கண்டு வியப்புற்றனர்.

அவ்விசாரசருமர் அளவில்லாத வேதாகமங்களிற் கூறப்படு
உண்மைப் பொருளெல்லாம் சர்வலோக சரண்யராகிய சிவபெரு
ானது திருவடிகளேயென்றும், சிருட்டி-திதி-சங்காரம்-திரோபவ
-அநுக்கிரக மென்னும் பஞ்சகிருத்திய காரணமாக ஆநந்தத்தாண்
வம் புரியும் எம்பெருமானே நம்மை யாளாக வுடையா னென்றும்
ண்மையறிவு தோன்றுவதால், சர்வான்மாக்களிடத்தும் அன்பின்
வழி யொழுகிவருங்காலத்தில், ஒருநாள் அவர் தம்மோடு வேதாத்தி
யனஞ்செய்யும் அந்தணச் சிறுவரோடு அவ்வூரார் பசுநிரைகளுட
ன்கூடிச் செல்லுகையில், ஒரீற்றுப்பசு வொன்று அதனை மேய்ப்

பானைக் குத்தப்போக, அவ்வாயன் சிறிதும் அஞ்சாமற் கோலினு
அதனை நன்ருய்ப் புடைத்தான். அதுகண்ட விசாரசருமர் சாஸ்தி
ங்களிற் கூறிய விஷயங்களை ஐயம்-திரிபு - அறியாமையாகிய மூ
குற்றங்களுநீங்கத்தெளிந்தோராதலின்மனம்பொருராகிஅவ்வி
யன்பாற் சென்று, பசுக்கள் சமஸ்த தேவர்களும் - தீர்த்தங்களு
முனிவர்களும்-கணங்களும் பிரியாது சூழ்ந்திருக்கும் உறுப்புக்க
யுடையனவென்றும், சிவபெருமானுக்குத் திருமஞ்சனத்திற் குரி
பஞ்சகவ்வியங்களைக் கொடுப்பவை யென்றும், சிவசாதனமாகி
திருவெண்ணீற்றுக்கு மூலம் அவற்றின் சாணமென்றுங் கூறி, அ
பசுக்களைத் தாமே மேய்க்க விரும்பி, அவ்வாயனை நோக்கி "நீ யி
பசுநிரையை இனி மேய்க்கவேண்டாம்; யானே மேய்ப்பேன்" எ
ருர். ஆயன் அஞ்சி வணங்கிச் செல்ல, விசாரசருமர் அவ்வப் பசுக்
ளின் உரியாரநுமதிபெற்று, சமீபத்திலுள்ள மண்ணியாற்றங்க
யிலும் நிறைவாகிய புல்லுள்ள விடங்களிலும் மேய்த்து, நீர்காட்டி
வெயில்வேளையில் நிழலிலிருக்கச்செய்து, அருணன் அஸ்தமயமா
முன் அவரவர் வீட்டிற்கனுப்பித் தம் வீடுசேருவர். இதனுல் பசு
கள் அழகோடு பெருகி மிகுதியாகப் பால் பொழிந்தன: பசுக்க
குரியார் முன்னிலும் அதிகங் கறத்தல் கண்டு களித்தனர். அ
விசாரசருமரைச் சிறிதேனும் பிரியமாட்டாதனவாயும் அவரை
கண்டவுடன் மடி சுரந்து பால் பொழிவனவாயுமிருந்தன.

அதன்பின்னர், சிவபெருமானுக்குத் திருமஞ்சனமாகுந் த
தியுடைமையைக்கருதி, அப்பெரியார்க்குச் சிவார்ச்சனையில் அதி
யந்த ஆசை தலைப்பட்டது. உடனே மண்ணியாற்றங்கரையிலுள்
ஓர்மணற்றிட்டையில்ஆத்திமரத்தின் கீழ்மணலினுலே ஒருசிவலிங்
ங்குவித்து, கோயில் - கோபுரம்-மதில் முதலியவை வகுத்து, பல
கைப் பத்திர புட்பங்களைக்கொய்து சிவார்ச்சனைசெய்து,புதுக்கு
ங்கள் கொண்டுபோய்ப் பசுக்கள் மடியைத்தீண்ட அவை கனைத்
ப்பால் பொழியும்; அதனை யபிடேகஞ்செய்வார் ; தனக்குக் கிடை

த பூஜாவுபகரணங்களை மாநஸிகமாகச் செய்துமுடிப்பார்; இப் சையைப் பெருமான் அவ் விலிங்கத்தினின் றன்போ டங்கீகரிப் ; பசுக்கள் இதனுற் குறையாமல் முன்போலவே வீட்டுக்கும் ல்கொடுத்துவந்தன. இதனைப்போலவே விசாரசருமர் நெடுநாள் வார்ச்சனை செய்துவருகையில் ஒருவன் பார்த்து ஊராருடன் சால்ல, அவர்கள் சபையார்க்கறிவிக்க, சபையார் யஜ்ஞதத்தனை ருவித்து "உன்பிள்ளை பாலைக்கறந்து வீணே மணலிற் சொரிந்து ளையாடுகின்றனும்" என, யஜ்ஞதத்தன் "நான் அறியேன்; இனி வ்வாறு நடந்தால் அக்குற்றம் எனதே" என்று வீடுசென்று, மறு ள் உதயத்தி லதைச் சோதிக்கவெண்ணி, விசாரசருமர் பசுமேய் கச் செல்லுகையில், அவர் அறியாமல் பின்றொடர்ந்து சென்று, வர் மண்ணியாற்றின் மணற்றிட்டிற் போனது கண்டு, அருகிரு ச குராமரத்திலேறி யொளித்திருந்தான்.

விசாரசருமர் வழக்கம்போல ஸ்நானஞ்செய்து, சிவலிங்கமுத யன வகுத்து, திருப்பள்ளித்தாமஞ் சேகரித்துவைத்து, பசுக்களி ங் குடங்கொண்டு செல்ல, அவை சொரிந்த பாலைக் குடத்தோடு வைத்து, சிவார்ச்சனை முடித்து, பாற்குடங்களை யபிடேகஞ் செய் னர். குராமரத்திலிருந்த யஜ்ஞதத்தன் அதுகண்டிறங்கி விரைந் தாடிவந்து பல கொடுஞ்சொற்கள் கூறி, விசாரசருமர் முதுகிலடி தனன். அவர் மனம் சிவார்ச்சனையி லழுந்தியிருந்ததால் அவருக் ப் புலப்படவில்லை. யஜ்ஞதத்தன் தான் பலமுறையடித்தும் அவ ணராமை சிவார்ச்சனையாலென் றறியானுகி, மிகக் கோபித்துப் ாற்குடங்களைக் காலா லிடறிச் சிந்த, உடனே விசாரசருமர் அது ண்டு செய்தவன் பிதா-குரு-பிராமணன் என்ப தறிந்தும், அவன் செய்தது சிவாபராதமாதலின், அவன் காலைத் துணிக்கக்கருதி அரு ருந்த ஓர் கோலை யெடுக்க, அது மழுவாக, அதனுற் கால்களைவெ டிச் சிவபூசையின் சேடத்தையு முடித்தனர். சிவபெருமான் இட ாருடராய் உமாதேவியுடன் தோன்றினர். விசாரசருமர் பேரான

ந்தமுட் டதும்பி இருவிழி வழித்தாய் ஆநந்த நீரருவி வார்தர மெ
ம்மறந்து பணிந்தனர். பெருமான் திருக்கரங்களாலெடுத்து "ந
பொருட்டுப் பிதாவை வெட்டினுய்! உனக்கு நாமே பிதா" என்
திருவாய்மலர்ந்து அணைத்து, உடலைத் தடவி, உச்சிமோந்து "ந
முடைய தொண்டர்களுக்கெல்லாம் உன்னைத் தலைவனுக்கி நா
ஏற்றுக்கொண்ட அமுதும் பரிவட்டமும் புஷ்பமும் உனக்கே த
தோம்' என்று தமது சடையி லணிந்திருந்த கொன்றைமாலை
அவருக்குச் சூட்டிச் சண்டேசுரபதவி தந்தருளினர். அவரா
தண்டிக்கப்பட்ட யஜ்ஞதத்தனும் சிவபதமடைந்தனன்.

விசாரசருமருக்குச் சண்டேசுர பதவியை அநுக்ரஹித்
அவசரமே சண்டேசாநுக்ரகமூர்த்தமெனச் சாற்றப்படும்.

## திருத்தொண்டர்புராணம்.

"தொடுத்தவிதழிசூழ்சடையார்துணைத்தாளிழற்கீழ்விழுந்தவனை
யெ த்துநோக்கிநம்பொருட்டாலீன்றதாதைவிழவெறிந்தா
யடுத்ததாதையினியுனக்குநாமென்றருள்செய்தணைத்தருளி
மடுத்தகருணையாற்றடவியுச்சிமோந்துமகிழ்ந்தருள.

அண்டர்பிரானுந்தொண்டர்தமக்கதிபனுக்கியணைத்துநா
முண்டகலமுமுடுப்பனவுஞ்சூடுவனவுமுனக்காகச்
சண்டேசனுமாம்பதந்தந்தோமென்றங்கவர்பொற்றடமுடிக்கு
துண்டமதிசேர்சடைக்கொன்றைமாலைவாங்கிச்சூட்டினர்."

சண்டேசாநுக்ரஹமூர்த்தயேநம:

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முப்பத்திரண்டாவது

# தக்ஷிணாமூர்த்தி.



சிவபெருமான் ஸ்ரீகயிலையங்கிரியிற்சகலதேவர்களும்நிறைந்து கடங்கள் இஷ்டகாமியங்களை விரும்பியாங்குப்பெறும்படி திரு ாலக்கங்கொண் டெழுந்தருளியிருக்கையில்,இறைவியார் எழுந்து னையிணையடிபணிந்து "எம்பெருமானே! எனக்குற்ற தாக்ஷா ணி யென்னும் பெயரும், தேவரீரைப்பணியாத அத்தக்ஷனற் போ ந்தவந்தவுடலும் மாறும்வண்ணம் வரம்வழங்குக" என விண்ணப் க, மஹாதேவர் மகிழ்ச்சியுற்று "மாதே! மலைமன்னன் மகளாக னைப் பெறக் கருதி நெடுநாளாய் விடாத்தவம் புரிகின்றான். ன்பா லுற்று வளர்க. யாம்வந்து மணஞ்செய்வோம்" என்றரு ெசய்தனர்.

அம்மையார் அரவாபரணரது அடித்தாமரையைப் பணிந்து டளையைச் சிரமேலேற்று,விடைபெற்று இமயமலையையடைந்து வாறே அருந்தவமாற்றும் அசலமன்னன் அவாநிரம்ப ஓர்தடாகத் , தாமரைத்தவிசின்மேற் குழந்தைவடிவுகொண் டிருந்தனர். பர் ராசன்பார்த்து மகிழ்ச்சியுற்றுத் தவப்பலன்கைகூடியதென்றுட் ாண்டு, அக்குழந்தையை யெடுத்துக்கொண்டு மனையையடைந்து வி யாகிய மேனையினிடத்துக் கொடுத்து வரலாற்றைக் கூற, னைபோஷித்துவந்தனள். அம்மையார் ஐந்துவயதுமுதல் தவச் பவிலிருந்து சங்கரனை மணந்தனர். (வித்தாரம் கல்யாணசுந்தர ற் காண்க). இதுநிற்க:

அ

எமதன்னையூ ரிவ்வாறு தவத்திருக்கையில், பிரமபுத்திரர்களா கிய சநகன் - சநந்தனன் - சநாதனன் - சநற்குமாரன் என்னும் முநி வர் நால்வரும் வேதவாராய்ச்சிசெய்து முடித்து, பலவகைத்தவங்களை யாற்றி, மீண்டும் வெள்ளிமலையை யணுகி ஆண்டு முதற்பெருங்காவ லாகவுள்ள திருநந்திதேவரைப்பணிந்து விடைபெற்றுத் திருச்சந்நி தியுட்சென்று, கண்களாரக் கண்ணுதலைத் தரிசித்து, சாஷ்டாங்க மாகத்தண்டஞ்செய்து, கரமிரண்டையுஞ் சிரமேற்சேர்த்து, "அருட் கடலே! அநந்தவகையாகிய ஆரணப்பொருளை ஆராய்ச்சி செய்தும் அடியேங்கள் அகம்அலைந்துகொண்டிருக்கின்றன; அவையடங்கி யா ங்கள் கடைத்தேறும்படி அவ்வேதத்தின் உட்கிடையாக வுள்ள பொருளை உபதேசித்தருளவேண்டும்" எனப் பிரார்த்தித்தனர். அங் கவர்க்கிசைந்த சங்கரர் "இங்கிருத்திர்" என்றியம்ப, அவர்கள் அண் ணலாரது பங்கயப்பதத்தின்கீழ்த் தங்கியிருந்தனர்.

அப்பொழுது அரவாபரணர் நந்திபகவானைவிளித்து "எம் மைத்தரிசிக்க எத்தகைய தேவர்முதலானோ ரெய்தினும், சந்நிதானத் துள் விடவேண்டாம். மதனன் வரில் வரவிடுக" என வாய்மலர்ந்து வாயிலிற்செல்ல விடையளித்தனுப்பி, விடையூர்தி முநிவர் விருப் பின்படி சிவாகமங்களிற் கூறப்பட்ட திரிபதார்த்தங்களாகிய பதி - பசு-பாசலட்சணங்களைவிளக்கி வெளியிட்டனர். சநகனாதியர் "சங் கரா! எங்கள்மனம் விரிந்திருப்பதால்அவையொடுங்கும் அடைவாக ஞானோபதேசம் செய்யவேண்டும்" என விண்ணப்பித்தனர். திரிய லர்புரங்கள் எரிபடப்பொடித்த பரசிவன் குறுநகைகோட்டிக் கூறு வதொன்றுமிலராய் "அப்பொருள் இவ்வாறிருக்கும்" என்று, சடா டவிதாங்கிய முநிவர்கட்குச் சாற்றவேண்டி, திருக்கர மொன்றைத் திருமார்பிற்சேர்த்து சிந்முத்திரை காட்டி முநிவர்போல் ஓர் க்ஷண ப்பொழுது நிஷ்டைகூடி நின்றனர். அதனால் அவர்கள் நால்வரும் மனமொடுங்கி ஞானநிலையுணர்ந்து, பேரின்பப்பெருக்கிலழுந்தி, தங்

ள் செயலொன்று மில்லாதிருந்தனர். (அதுகாலையில் அமரர் மன்மனையனுப்ப அவன் ஐயன்மேல் மலர்க்கணை தூய்ச் சாம்பராய் மாய்ந்தனன். வித்தாரம் காமதகனத்திற்காண்க.)

சிவபெருமான் யோகுநீங்கி "முநிவிர்காள்! நீங்கள் முன்னிய வகையே நிஷ்டை யனுஷ்டித்து நீடுழிவாழுதிர்" என்று தம திச்சைபடி பேகவிடுத்தனர். இறைவர் தக்ஷிணதிசையைநோக்கிச் சநகாதி நான்கு மஹாருஷிகட்கு உபதேசித்த அவசரம் தக்ஷிணாமூர்த்தமெனப் பெயர்பெறும்.

**கந்தபுராணம்.**

"இருவருமுணராவண்ணலேனவெள்ளெயிறியாமை
பெரியாயநந்தகோடிகிளைத்திடுமுரத்திற்சீர்கொள்
கரதலமொன்றுசேர்த்திமோனமுத்திரையைக்காட்டி
யொருகணஞ்செயலொன்றின்றியோகுசெய்வாரினுற்றான்.

இனையதோர்தன்மைகாட்டியெம்பிரானுணர்த்தக்கண்டு
சனகனேமுதலர்வுள்ளோர்தவலருஞானபோதம்
பனுவலினளவன்றென்னும்பான்மையைத்தெரிந்துமுக்கட்
புனிதனதருளாற்றத்தம்புந்தியினொடுக்கம்பெற்றார்.

தற்பரனினையவாற்றாற்றாபதருணருந்தன்மை
யற்புதஞானபோதமளித்திடுங்கணமதொன்றின்
முற்படுகமலப்புத்தேண்முதலியவமரர்க்கெல்லாம்
பற்பலயுகங்கள்சென்றபிறர்க்கினிப்பகர்வதென்னே."

**தக்ஷிணாமூர்த்தயேநம:**

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முப்பத்துமூன்றாவது

# யோகதக்ஷிணாமூர்த்தி.

சிவபெருமான் தக்ஷிணாமூர்த்தமாகச் சநகன்-சநந்தனன்-சநாதனன்-சநற்குமார னென்னும் மகருஷிகள் நால்வர்க்கும், பதி- பசு- பாசலக்ஷணங்களை யுபதேசித்தஞான்று, அம்முநிவர் "அடிகளே! அடியேங்கள் அகமகன்றிருத்தலி லவையொடுங்கும்வண்ணம் அருள்புரியவேண்டும்" என்று விண்ணப்பிக்க, அருளாளர் "அந்தணரோ! உடல்முதலியயாவும்அழிபொருளெனவும் ஆன்மா ஒன்றே அழியாப் பொருளெனவுமறிந்து,ஞானத்தைக் கிரகிக்கவேண்டுவோர் மோட்ச சாதனமாகிய சாஸ்திரங்களைக் கேட்டலும், சிந்தித்தலும், அவ்விஷயங்களைத்தெளிதலும், அஷ்டாங்கயோகங்களைச்செய்தலும் வேண்டும். சிலர்யோகமாவது ஞானேந்தியகன்மேந்தியங்கள் ஒன்றோடொன்று கலத்தலெனவும், மற்றுஞ் சிலர் ஆன்மாவுடன் கூடுதலெனவும், வேறு சிலர் பிராணவாயுவும் அபானவாயுவுஞ் சேருதலெனவுஞ் செப்புவர். ஈண்டெடுத்து விவகரித்த இவையெல்லாம் முடிவில்லாத யோகசாதன மாகமாட்டா ; ஆனல் சீவான்மாவும் பரமான்மாவும் இரண்டறக்கலத்தலேயோகம்.அஃதெவ்வாறெனில்,புறக்கரணங்களை அந்தக்கரணங்களி லொடுக்கி மனத்தை ஆன்மாவிலொடுக்கி உத்தமமாகிய ஆன்மாவைப் பரத்திற்சேர்ப்பிப்பது. யோகப்பயிற்சியிற் பழகினலன்றிப் பரம்பொருளைக் காணமுடியாது. தசவாயுக்களைப் பந்தித்தாலன்றி மனம் ஒருவழிநில்லாது. சடங்க யோகசாதனத்தாலன்றிச் சத்தியத்தை யுணர்தலருமை. ஆதலின் அத்தகைய யோகத்தைச் சாற்றுவோம் கேட்பீராக ;—



33. யோகதக்ஷிணாமூர்த்தி.

இயமம்-நியமம் - ஆதனம் - பிராணாயாமம் -பிரத்தியாகாரம்
தாரணை - தியானம் - சமாதி என அஃது எண்வகைத்து. அவற்றுள்,

இயமம்—கொல்லாமை - சத்தியவசனம் - கள்ளாமை - பிறர்
பொருளிச்சியாமை - பஞ்சேந்தியமடக்கல்.

நியமம்—தவம்- பரிசுத்தம் - தத்துவநூலாராய்ச்சி - மனமுவந்
திருத்தல் - கடவுள்வழிபாடு.

ஆதனம் எண்வகைத்து. அவையாவன:—தொடைக்கும் முழங்
காலுக்கும் நடுவே யிரண் டுள்ளங்காலையுஞ் சேர்த்து இறுமாந்தி
ருத்தலாகிய சுவத்திகம் - சகநப்பக்கத்தி லிருகாற்பரட்டையு மாற
வைத்து அவ்விருகாற் பெருவிரலையுங் கைப்பிடித்திருத்தலாகியகோ
முகம்- இருதொடைமேலும் இரண்டுள்ளங்காலையும் மாறித் தோன்ற
வைத்தலாகிய பதுமம் - வலத்தொடையில் இடக்காற் பரட்டைச்
சேர்த்தி யிறுமாப்புற் றிருத்தலாகிய வீரம் - பீசத்தின்கீழ்ச் சீவனிட்
த்திற் பரட்டைவைத்திட முழங்கையை முழந்தாளில்வைத்து அவ்
விருபதத்தையு மிருகையால் இறுகப்பிடித்து அசையாதிருத்தலா
கிய பத்திரம் - இடக்காற்பரட்டாற் சீவனியையழுத்தி வலக்காற் ப
டு அப்பரட்டின்கீ ழூந்த விருத்தலாகிய முத்தம் - முழங்கைகளிர
ண்டும் உந்திப் புறத்தி லழுந்த, புவியிற் கையூன்றிக் கால்நீட்டித்
லைநிமிர்ந்திருத்தலாகிய மயூரம்-சுகமும் திடனும் எவ்வாறிருக்கின்
ய்துமோ அவ்வாறிருத்தலாகிய சுகம் என்பனவாம்.

பிராணாயாமம்— பிராண வாயுவை இரேசக பூரக கும்பஞ்
செய்தல்.

பிரத்தியாகாரம்— உபாதியைநீக்கி உண்ணோக்குவது.

தாரணை— கண்டம் - இதயம் - நெற்றி - கபாலம் - நாபிஇவற்றி
லொன்றிற் சந்ததஞ் சிந்தைவைப்பது.

தியானம்—ஐம்புலங்களை யடக்கி யோகஞ்செய்வது.

**சமாதி,—** மேற்கூறிய இமய நியமாதிகளைப் பொருந்தி, சுழு முனை முதலாகிய நாடிகட்குக் காரணமாகிய நாபிக்குக் கீழுள்ளதாய, கிழங்கின் நடுவிலிருக்கும் எழுபத்தீராயிரம் நரம்புகளில், வலமும் இடமும் பிரிந்த இரண்டாகிய இடைகலை பிங்கலைகளைச் சுழுமுனை யில் அடக்கி, அச் சுழுமுனையைக் கீழிருந்து தேகமத்தியமாகிய கந் தஸ்தானம் வரையில் இரு கிளையாகவும், அதற்குமேல் பிரமரந்தி ரம் வரையில் ஒரு கிளையாகவும், மூலாதாரம் - சுவாதிட்டானம் மணிபூரகம் - அநாகதம்-விசுத்தி-ஆஞ்ஞையாகிய **ஆறதார சக்கிரங்** களையும்,அதற்குமேல் நாலுசக்கிரங்களையும் வியாபிக்கச்செய்து,பிரம ரந்திரம்வரையில் **ஆதார தேவதைகளைச் சகள** மாகவும், அப்பால் துவாதசாந்தத்தில் அசல ராகியும் அமேய ராகியும் அதுல ராகியும் சூட்சுமராகியும் மஹா ஞகியும் ஞானக் கிரியாசத்தி சரீரி யாகியும் வியாபக ராகியும் சத்திமா ஞகியும் மலரஹிதராகியு முள்ள **பரசிவ மூர்த்தியை நிஷ்கள** மாகவும் தியானித்தலே சிவயோக மென்னுஞ் சமாதியாம்" என் றிவ்வகையாகத் திருவாய்மலர்ந்தருளி, இறைவர் அம்முநிசிரோஷ்டர்கள் அறிந்துகொள்ளும்படி திருவுள்ளங்கொண்டு தாமே சிறிதுபொழுதுஅத்தகைய நிலையினின் றுஉணர்த்துவித்தனர்

அதனல் உள்ளம் விரிவொழிந்து ஒடுங்கப்பெற்ற சநகன்-சந ந்தனன்-சநாதனன் - சநற்குமாரனென்னும் முநிவர் நால்வரும் முன் னேனது முண்டகப்பதத்தை வணங்கி விடைபெற்றுத் தம்விருப் பின்படி சென்றனர். சிவபெருமான், பிரமபுத்திரர்களாகிய இருடி யர் நால்வரும் எளிதிலுணரும் வகையாக யோகமுறையைப் பயிற்றி னமையால், யோகதக்ஷிணமூர்த்தியென்பதோர்திருநாமமெய்தினர்.

யோகதக்ஷிணமூர்த்தயேநம:

---



34. வீணாதக்ஷிணாமூர்த்தி.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

# முப்பத்து நான்காவது

# வீணாதக்ஷிணா மூர்த்தி.

சிவபெருமான் பக்தாநுக்கிரக காரணமாகத் திருக்கயிலாயகிரியில், தக்ஷிணாமூர்த்தங்கொண்டெழுந்தருளி யிருக்கையில், தும்புருநாரதர் சுகர்முதலிய ருஷிசிரேஷ்டர்கள் இசைஞானத்தை நன்குணரவும், சாமவேதத்தை வீணையிலேற்றுப்பாடவும், தங்கட்குஅருள்புரியவேண்டும் என்னுங் கருத்துட் கொண்டோராய், கயிலைமலையையடைந்து கருணாமூர்த்தியைப்பணிந்து கைகூப்பிக் "கடவுணாயகா! அடியேங்கட்கு வீணாகானத்தை விளக்கியருளவேண்டும்" என்று விண்ணப்பித்தனர்.

அம்பிகாபதி "அந்தணரோ! அவ்வாறே யாகுக இருத்திர்;" எனப்பின்வருமாறு அருளிச்செய்யத் தொடங்கினர்.

"நீரிலே நிற்ற லழுகுதல் வேத னிலமயக்கும்
பாரிலே நிற்ற லடிவீழ்த னேய்மரப் பாற்படல்கோ
ணேரிலே செம்பகை யார்ப்பொடு கூட மதிர்வுநிற்றல்
சேரினேர் பண்க ணிறைமயக் கப்படுஞ் சிற்றிடையே" —

என்றபடியே மேற்கூறிய விலக்கத்தக்க மரங்கள் வீணாதண்டத்திற்றாகா. அவற்றைக்கொண்டால் நால்வகை இசைக்குற்றத்தை யுண்டுசெய்யும். நால்வகைக் குற்றமாவன:—

"செம்பகையார்ப்புக்கூடமதிர்வு.

அவற்றுள்,

செம்பகை யென்பது பண்ணோடுளரா
வின்பமில்லோசை யென்மனார்புலவர்.

ஆர்ப்பேனப் படுவ தளவிறந்திசைக்கும்.
கூட மென்பது குறிவுறவிளம்பின்
வாய்வதின்வாராது மழுங்கியிசைப்பதுவே.
அதிர்வேனப்படுவெதிழுமெனலின்றிச்
சிதறியுரைக்குந ருச்சரிப்பிசையே."—எனப்பெறும்.

**பஞ்சபாரதீயம்.**

"இன்னிசைவழியதன்றியிசைத்தல்செம்பகையதாகும்
சொன்னமாத்திரையினேங்கவிசைத்திடுஞ்சுருதியார்ப்பே
மன்னியவிசைவராதுமழுங்குதல்கூடமாகும்
நன்னுதால்சிதறவுந்தலதிர்வெனநாட்டினுரே."—

ஆதலின் மேற்கூறிய குற்றங்களைப் பயக்கவல்லவாகிய விலக்கு மரங்களை நீக்கி உத்தமமாகிய விதிக்கப்பட்ட மரங்களால் வீணைதண் டஞ்செய்யவேண்டும்.

"செல்லிய கொன்றை கருங்காலி மென்முருக்கு
நல்ல குமிழுந் தணக்குடனே—மெல்லியலா
யுத்தம மான மரங்க ளிவையென்றார்
வித்தக யாழோர் விதி."

"தளமாய்ச் சமநிலத்துத் தண்காற்று நான்கு
மூளதா யொருங்கூன மின்றி—யளவு
முதிரா திளகாது மூன்றுங்கூ டுய
வதுவாகில் வீணைதண் டாம்."

"பதுமங்கழல்குடந்தாடியொடுள்ளிபண்பூண்டுநின்ற
விதியமர்தண்டுகுடையேகுமிமெய்க்கோட்டுறுபின்
மதியமர்போதிகைபுட்டின்முகஞ்சுவர்மன்னெருத்தம்
விதியமர்பத்தர்க்குறுப்பென்றுரைத்தனர்மின்னிடையே."—

என்றபடியே நலமுடைய மரங்களைக் கொண்டு, நல்ல விலக்கண சம்பந்தமாகவே நால்வகைய யாழையுஞ் செய்யவேண்டும், நால்

கை யாழாவன :—பேரியாழ் - மகரயாழ் - சகோடயாழ்-செங்கோ
டியாழ் என்பனவாம்.

"பேரியாழ் பின்னு மகரஞ் சகோடமுடன்
சீர்பொலியுஞ் செங்கோடு செப்பினர்—தார்பொலிந்து
மன்னூர் திருமார்ப வண்கூடற் கோமானே
பின்னு முளவே பிற" என்றபடியே நால்வகையாழுஞ் செ
கையில்,பேரியாழுக்கு நரம்பு இருபத்தொன்றும், மகரயாழுக்கு நர
பு பதினேழும், சகோடயாழுக்கு நரம்பு பதினுறும், செங்கோட்டி
மூக்கு நரம்புஏழுந் தொடுக்கவேண்டும்.

"ஒன்று மிருபது மோரேழ்மேற் பத்துடனே
நின்றபதி னுறேழு நேடுங்காற்—குன்றாத
நால்வகை யாழிற்கு நன்னரம்பு சொன்முறையே
மேல்வகை நூலோர் விதி." என்னு மிலக்கணத்தின்படி யா
ற்கு நரம்பெண்ணித் தொடுக்கையில், "கொடும்புரி மயிர்தும்பு
றுக்கிவை நான்கு நடுங்கா மரபிற்பகையென மொழிப" எனக்கூ
பகுற்றம் நீங்கி, நரம்புகளைத்தொடுத்து, பண்ணல் - பரிவட்டணை-
ராய்தல் - தைவரல் - செலவு-விளையாட்டு-கையூழ் -குறும்போக்கு
ஐய கலைத்தொழி லெண் வகையா லிசை யெழுப்பவேண்டும்.
வையாவன :—பண்ணல் - பாடநினைத்த பண்ணுக்கு இணை கிளை
கை நட்பான நரம்புகள் பெயருந்தன்மை மாத்திரையறிந்து வீக்கு
ல், பரிவட்டணை - அவ்வீக்கின நரம்பை அகவிரலாலும் புறவிரலா
ல் கரணஞ்செய்து தடவிப்பார்த்தல், ஆராய்தல் - ஆரோகண அவ
ரோகணவகையால் இசையைத்தெரிதல், தைவரல் - அநுசுருதியேற்
தல், செலவு - ஆளத்தியேநிரம்பப்பாடுதல், விளையாட்டு-பாடநினை
த வண்ணத்திற் சந்தத்தை விடுதல், கையூழ் -வண்ணத்திற் செய்த
டலெல்லாம் இன்பமாகப்பாடுதல்,குறும்போக்கு-குடகச்செலவுந்
ள்ளற்செலவும் பாடுதல் என்பன.

மேற்கூறிய எண்வகைத்தாகியகலைத்தொழிலால் இசையெழு ப்பி, வார்தல் - வடித்தல் - உந்தல் - உழற்றல் - உருட்டல் - தெருட டல் - அள்ளல் - பட்டைஎன்னும் எண்வகைப்பட்ட இசைக்கரண த்துடன் உடற்குற்ற முதலியவை நீங்கப் பண்பாடவேண்டும். உட குற்றமாவன :—

" கண்ணிமையா கண்டங் துடியா கொடிறசையா
பண்ணளவும் வாய்தோன்ற பற்றெரியா—வெண்ணிலவை
கள்ளார் நறுந்தெரியற் கைதவனே காந்தருவர்
உள்ளாளப் பாட லுணர்" என்றகுற்றநீங்கிய வகையாகப்ப

டுகவென்று அவற்றின் உட்பிரிவுகளோடு நன்கு விளங்கத் திருவா மலர்ந்தருளி, யாழ்வாசிக்கும்முறையிலக்கணங்களை உபதேசித்தமை கேற்ப, இலக்கியமாகத் தாமே தமது திருக்கரத்தில் யாழேந்தி, திரு தோளிலணைத்து நின்று இசையெழுப்பி வாசித்துக்காட்டினர். அ கேட்டமுனிவர் உள்ளங்களி கூர்ந்தனர். தேவர் - மனிதர் - விலங் புள்முதலிய பிராணிகளெல்லாம் இன்பமிக்கு வாழ்ந்தன. முனி முன்னேனை வீணுகானத்தாற் சாமகீதம்பாடித் துதித்தனர்.

சிவபெருமான் வீணையினிலக்கணத்தை யுணர்த்தித் தமதுதி க்கரத்து வீணையேந்தி வாசித்துக்காட்டிய திருவுருவமே வீணுதக ணுமூர்த்த மெனப்படும்.

வீணுதக்ஷிணு மூர்த்தயேநம :

---



35. காலாந்தகமூர்த்தி.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முப்பத்தைந்தாவது

# காலாந்தக மூர்த்தி.



மிருகண்டுமுனிவர் என்பவர் முற்கலமுனிவர் தவப்புதல்வியா
மருத்துவதி யென்னும் கன்னியை மணந்து, நெடுங்காலம் புத்
ின்மையாற் காசிக்ஷேத்திரத்தை யடைந்து மணிகன்னிகையில்
னஞ்செய்து சிவபெருமானை நோக்கிப் புத்திரப்பேற்றினை யவா
தவஞ்செய்ய, பெருமான் பிரத்தியட்சமாகி, "முனிவனே!
ணம் - ஊமை - செவிடு - குருடு - முடம் - தீராப்பிணி - அறி
மையாகிய இவற்றோடுகூடிய நூறுவயதுயிர்வாழும் புதல்வன்
டுமோ? அல்லது அழகு; நல்வடிவு - நோயின்மை - எமதன்பு
லியவற்றைப்பெற்றுப் பதினாறுவயது ஜீவித்திருக்கும் மைந்தன்
டுமோ? சொல்" என, முனிவன் "வயதுகுறைந்து வாழ்வானு
ஞ் சற்புத்திரனே விரும்புகிறேன்" என்று விண்ணப்பிக்க, அவ்
ற வரமளித்து அந்தர்த்தானமாயினர். பிறகு சிறிதுநாளில் அம்
வன் மனைவி கருப்பமுற்று நல்லசுபமுகூர்த்தத்தி லோர்மைந்த
த் தந்தனள். தேவர் புஷ்பமாரி பொழிந்தனர். தேவதுந்துபிமுத
னமுழங்கின. பிரமதேவன் அச்சிறுவனுக்கு **மார்க்கண்ட**னென
கரணஞ்செய்தனன். உபநிட்டானம் - சந்திமிதித்தல்- அன்னப்
சன முதலியவற்றை முறைப்படிசெய்து ஒருவருடத்திற் றலைம
ளைந்து இரண்டாம்வருடங் கர்ணவேதமியற்றி, ஐந்து வயதில்
யனம்நடத்தி வித்தியாப்பியாசஞ் செய்வித்தனர். மார்க்கண்
பர் வேதாகமமுதலிய நூல்களிற்றேர்ந்து சிவபெருமானே உண்
ப்பொருளென் றுணர்ந்து சிவபக்தியுஞ் சிவனடியாரிடத் தன்பு

மதிகரித்தனர். அவ்வாறிருக்கையில் வயதுபதிஞறுகவே தாய்தந்
யர் இவரைப்பற்றி யெப்போதுந்துன்புற்றிருந்தனர். அதனை யுண
தென்னெனக்கேட்க, உண்மையுரையாராகிக் கடைசியிற் சிவபெ
மான் தனக்களித்தவரத்தைத் தந்தைசொல்ல " எந்தையே ! யா
சிவார்ச்சனைசெய்து பெருமானது பேரருளால் இயமனைவென்று
கிறேன் அஞ்சவேண்டாம்." என்றுகூறி விடைகொண்டு,காசிக்ஷே
த்திரத்தில்மணிகன்னிகைக்கருகே சிவலிங்கப் பிரதிட்டைசெய்து
சைபண்ணி எம்பெருமானுல் " இயமபயம் நீங்குக" என்னும் வர
பெற்று, மீண்டும் பூசாகாலந்தவறுது பூசித்துவருகையில் மரண
லங்குறுகவே,இயமன் துகட்டளைப்படி ஓர் தூதன்வந்து அவரதுபூ
பலத்திஞற் சமீபிக்கக்கூடாதவனுய்ச் சயமினிநகரஞ்சேர்ந்து த
தலைவனுக்குச் சாற்ற, அவன்கோபித்துத் தன்கணிகராகிய சித்தி
குத்திரனை வரவழைத்து அவர் கணக்கைவிசாரித்தறிந்து தன்ம
திரியாகிய காலனையனுப்ப, காலன்போய்ப் பார்த்துத் தன்னுலொ
றுஞ் சாயாத்வனுய்த் திரும்பிவிட, இயமன் ஆலகாலம்போற் வெ
தித்துத் தன் மகிஷவாகனத்தை யழைப்பித்துத் தானே அதின்
தேறி மழு - தண்டம்- பாசம் - சூலம் இவற்றையேற்று, குடையு
கொடியுந் தூதர்தாங்கிவர, மார்க்கண்டேயரைக் கிட்டியழைக்
அவர் வராமையால் வெகுண்டு, நெருப்பெழச்சிரித்துப் பற்களைக்க
த்துச்சிரத்தையசைத்து,"பிரமாதிதேவர்களும் யானுமே ஒருகால
திறப்போமானுல் நீயோ வரமாட்டாதவன்" என்று கோபத்துட
நீலமலைபோல நின்று கழுத்திற்பாசத்தைவீசி யிழுக்க எத்தனிக்
யில்,மார்க்கண்டேயர் பயந்து சிவலிங்கக்குறியைத் தழுவிநின்றன
அதுபொழுதில் ஆபத்சகாயராகிய சிவபெருமான் " அஞ்சாதிரு
என்றருளிச் செய்து அச்சிவலிங்கமூர்த்தத்தி னின்றுந் தோன்றி
தமது இடதுகாலாலுதைக்க இமைப்பொழுதில் இயமன் உயிர்நீங்
னன். பின்னர்ப் பூமியில் மரணவத்தையின்மையாற்பூதேவி சுமை
பாற்ருளாய்க் குறையிரப்ப, அருட்பெருங்கடல் மீண்டும் அவனை

...ப்பினர். மிருகண்டு புத்திரராகிய மார்க்கண்டேயரைச் சிர
...யாக்கிக் காலனை யடக்கியகோலமே காலாந்தகமூர்த்தமெனப்
...ர்பெறும்.

### கட்டளைக் கலித்துறை.

" பூமன்சிரங்கண்டியந்தகன்கோவல்புரமதிகை
மாமன்பறியல்சலந்தரனிற்குடிமாப்பழூர்
காமன்கொறுக்கையமன்கடவூரிந்தக்காசினியிற்
றேமன்னுகொன்றையுந்திங்களுஞ்சூடிதன்சேவகமே."

பிரஹ்மசிரச்சேதம் திருக்கண்டியூரிலும், அந்த காசுரவதம் திரு
...வலூரிலும், திரிபுரதகனம் திருவதிகையிலும், தக்ஷசம்ஹாரம்
...பறியலூரிலும், ஜலந்தரவதம் திருவிற்குடியிலும், கஜாசுரசம்
...ம் திருப்பழூரிலும், காமதகனம் திருக்கொறுக்கையூரிலும், கா
...ஹாரம் திருக்கடவூரிலும் நிகழ்ந்தனவெனக் கூறப்பட்டிருப்ப
..., இயமனையுதைத்தது திருக்கடவூரெனக்கூறுநரு முளர்.

### கந்தபுராணம்.

...மதத்தான்மிக்கான்மற்றிவன் மைந்தனுயிர்வவ்வப்
...பதைத்தானென்னவுன்னிவெகுண்டான்பதிமூன்றுஞ்
...சிதைத்தான்வாமச்சேவடிதன்னாற்சிறிதுந்தி
...யுதைத்தான்கூற்றன்விண்முகில்போன்மண்ணுறவீழ்ந்தான்."

காலாந்தகமூர்த்தயேநம:

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முப்பத்தாறுவது
# காமதகனமூர்த்தி.

சர்வாண்டங்களையும் பெற்ற தாயாகிய உமாபிராட்டியார் வதராஜன் புத்திரியாகத் திருக்கோலங்கொண்டு இமோற்கிரி தவஞ்செய்துகொண்டிருக்கையில், சிவபெருமான் சநகனுதிமு கட்காகக் கணப்பொழுது யோகத்திருந்தனர். அப்பொழுது அ மாக்கட்கும் அமரருக்கும் அநேகயுகங்களாயின. 'அரசனெவ் யவ்வழியக்குடி' என்றாற்போலும் 'அவனைசைந்திடி லுலகசைந்தி என்றாற்போலும், எம்பெருமான் யோகத்திருத்தலால் எவ்வ ஜீவான்மாக்களும் ஞானத்திற்கூடி நின்றன. அதுகண்ட அமரர் 'அரவாபரணன் அன்னையோடு கூடாது யோகத்துற்று மு போன் றிருத்தலின், எவரும் ஏந்திழையார் இணக்கமின்றி இ வர்போலவே யிருக்கின்றனர். பிரமன் சிருட்டியும் பிறழ்ந்தது. வுமன்றிச் சூரபன்மனுல் துன்புற்றுச் சுவர்க்கலோகத்தைத் தோம்; என்செய்வோம்' என்று, திருக்கயிலையடைந்து எம்பெ னைத் தரிசிக்கச் சமயமில்லை என்று' திருநந்திதேவர் பணித்த யாற் சிவத்தியானஞ்செய்து தவத்திருந்தனர். சிவபெருமான் ரன் கனவிற்றோன்றி "வாசவ! வருந்தாதே; விரைவில் பார்ப்பதி மணந்து புத்திரனொருவனுல் உங்கள் துயரையொழிப்போம்" எ திருவாய்மலர்ந்து மறைந்தருளினர்.

சிவபெருமான் நெடுநாள்யோகத்திருந்தமையால்வாசவ "தேவருடன்போய்ப் பதுமனுக்குக்கூற, பிரமன் யாவரையுங்கூட்



36. காமதகனமூர்த்தி.

ஞ்டு விண்டுவைக்கண்டு விளம்ப, திருமால் "இறைவர் யோகம்
இமாசலமன்னன் புதல்வியாகவந்த இறைவியை மணந்து ஒரு
ப்பெறும்படி மன்மதனைவிடுக" என மறுமாற்றங்கூற, மல
ன் மதனனை மனத்தில்நினைக்க, கருப்புவில்லி கணத்தில்வந்து
யோனியின் கழல்வணங்கி "என்னைச் சிந்தித்ததென்" என,
றுதல் யோகு நீங்கிக் கவுரியை மணம்புரியும்படி மலர்க்கணை
"எனக்கேட்ட **மதனன்** "சிவசிவசிவசிவ" என்று செவியைக்
தாற்பொத்திக்கொண்டு, எண்கணனை நோக்கி "இசையேன்"
மறுக்க, சதுர்முகன் "தடுத்தாற்சபிப்பேன்" எனச்சாற்ற,அங்க
செங்கைகுவித்துத் திசைநோக்கி "உன்சாபத்தாலுயிரிழந்தொ
னும், பரமன்மேற் பாணப்பிரயோகஞ் செய்திறப்பது நலம்"
க்கூறித் தனதுலகுசார்ந்து, தன்மனைவியாகிய இரதிதடுக்க, அவ்
திரையைத் தேற்றி, அம்பறுத்தூணிகட்டி, சுப்பிரயோகம் -
பிரயோகம்-சோகம்- மோகம் மரணமாகிய பஞ்சாவஸ்தைகளையு
றயே உண்டுசெய்யும் தாமரை-மா-அசோகு-முல்லை - நீலமென்
ஐந்துமலர்க்கணைகளும், சுருப்புநாண்பூட்டிய கருப்புவில்லும்
களிராகிய வாளும்,எக்காளமாகியகுயிலும், மூரசமாகிய கடலொ
ம், மீனமாகிய கொடியும்,சந்திரனாகிய குடையுங்கொண்டு கிளிக
ய குதிரைகள்பூட்டிய தென்றலாகிய தேரின்பேரில் இரதியுட
றி, எண்ணில்லா மாதர்சேனை புடைசூழத் திருக்கயிலாயகிரியை
டந்து பணிந்து, பரிசனங்களை நிறுத்தித் தேரினின்று இரதியுட
ங்கிமலையின்மேலேறி விலங்குபுள்முதலியவை மோகங்கொள்ள
க்கவெவ்விய பாணங்களைவிட,திருநந்திதேவர் சீற்றத்தால் அவை
ரத்திலேயேவெந்தகன்றன. காமன் நந்தியெம்பிரான் கழல்பணி
"சந்நிதானத்தினுட்செல்ல விடைதரவேண்டும்" எனச்சாற்ற,
பிரான் தமக்குமுன்கட்டளைசெய்தவகையே "மேற்புறவாயிலாற்
க" என்ற மேலோனைப்பணிந்து,கொம்பனையுடன்குடவாயிலாற்
வேசித்துக் குழகன் யோகிருத்தல்கண்டு கண்கூசி நடுநடுங்கி மூர்



37. லகுளீஸ்வரமூர்த்தி.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

# முப்பத்தேழாவது

# லகுளேசுவரமூர்த்தி.

---

இலகுளேஸ்வரர் வரலாற்றினை விளக்குவதற்குமுன்னர் அவ
…ழுந்தருளியிருக்கும் புவனத்தைக் கூறுதல் இன்றியமையாத தாத
…ன், அவ்வுலகவளவைச் சிறிது கூறுகின்றேன். அணு எட்டுக்கொ
…டது திரிசரேணு; அது எட்டுக்கொண்டது இலிக்கை; அது எட்டுக்
…ண்டது யூகை; அது எட்டுக்கொண்டது யவை; அந்த யவை
…க்காக எட்டுக்கொண்டது மானங்குலம். அது இருபத்துநான்கு
…ண்டது முழம்; அது நான்குகொண்டது வில்; அது இரண்டு
…ண்டது தண்டம்; அது இரண்டாயிரங்கொண்டது குரோசம்;
…து இரண்டுகொண்டது கெவியூதி; அக்குரோசம் நான்குகொண்
…து யோசனை; அந்த யோசனை நூறுகோடி கொண்டது பிருதிவி
…துவத்திலுள்ள வோரண்டத்தின் விரிவு. உயரமும் அவ்வளவின
…யாகும்.

பிருதிவிதத்துவத்தில் ஆயிரகோடி அண்டங்களுண்டு. இதைக்
…ந்த அப்புதத்துவம் பதின்மடங்கு விரிவுமுயர்ச்சியு மேற்றுங்கொ
…டிருக்கும். அப்புதத்துவத்தைப்பற்ற, தேயமுதற் பிரகிருதியீறாக
…ண்டங்கள் பதின்மடங்குவிரிவு முயர்ச்சியு மிருந்திருக்கும். முன்
…ய பிரகிருதியைப்பற்ற, இராகம் நூறுபாகம் விரிவுமுயர்ச்சியு மே
…ங்கொண்டிருக்கும். அவ்விராகத்தைப்பற்ற, வித்யாதத்துவம் நூறு
…ங்குவிரிவுமுயர்ச்சியுங்கொண்டிருக்கும். அவ்வித்தையைப் பற்ற
…திதத்துவம் நூறுமடங்கு விரிவுமுயர்ச்சியுங் கொண்டிருக்கும்.

அங்கியதியைப்பற்ற, காலதத்துவம் நூறுமடங்கு விரிவுமுயர்ச்சியு கொண்டிருக்கும். முன்கூறிய காலத்தைப்பற்ற, கலாதத்துவம் ந ஞெரு பதினுயிரம் விரிவுமுயர்ச்சியுங் கூடும். அதன்மேல் மாயை சுத்தவித்தை - ஈசரம் - சாதாக்யம்முதலிய தத்துவங்கள் ஒன் கொன்று முறையே கோடி - கோடியே பதினுயிரம் - இலக்ஷம்-( ண்டிலக்ஷம் - மூன்றிலக்ஷமுதலிய பாகங்கள் அதிகப்பட்டு நிற்கு

இங்ஙனமிருக்கு மண்டவிரிவில்,பிரிதிவிதத்துவமாகிய நி த்திகலையின் ஒருதட்டில்,தேங்காய் விளங்காய் பரப்பினதுபோல ரகோடி யண்டமுண்டு. அவை பொன்மயமாய் அருக்கர் பதினுயி உதயமானுற்போல, கோழிக்குடாண்டம்போலிருக்கிற அண்டகடா புறம்பே இந்திரதிக்குமுதலிய பத்துத்திக்கினுமுள்ள நூறுபுவன னும் நூறுஉருத்திரரும், அவர்கள் புவனத்திற்குமேல், காலாக்கி யுருத்திரர் முதலியோர் புவனமாறும், அவற்றின்மே லிரண்டொ அக்கலையில் நூற்றெட்டுப் புவனங்களுண்டு. அவை:—பத்திரகாள வீரபத்திர - திரிலோசன - விப்ஸுரூப - விவாஹ - ஸம்வாஹ-தி சேச - திரியக்ஷ - கணுத்யக்ஷ - விபு சம்பு-தமஷ்ட்ரீ - வஜ்ர - ப ந்திர - உதும்பரோச - கிரஸன - மாருதாசன - குரோதன - அநந் விருஷதர - விருஷ - ப்லிப்பிரிய - பூதபால - ஜியேஷ்ட - சர் சுரோச - வேதபாரக - ஞானபுக் - சர்வஞ்ஞ - ஈச - வித்யாதிப - காமத - பிரசாதக - சிரீத்ருக்கு - ரத்நத்ருக்கு- லக்ஷ்மீத்ருக்கு-ஜ தர - ஸௌம்யதேஹ - தன்னிய - ரூபவான் - நிரீச - மேகவாஹ கபர்த்தி - பஞ்சசிக - பஞ்சாந்தக - க்ஷயாந்தக - தீக்ஷண - குக்ஷ வாயுவேக - லது - சீக்கிர - ஸுநாத - மேகநாத - ஜலாந்தக - தீ பாகு - ஜயபத்திர - ஶ்வேத - மஹாபல - பாசஹஸ்த-அதிபல-ப தமஷ்ட்ரீ-லோஹித - தாம்ரக - விருபாக்ஷ - ஊர்த்துவசேப - ப நக - க்ரூரத்ருஷ்டி - விக்ந - ஹந்துரு - மாரண - நிருதி - தர்மப தர்ம - வியோக்த்ரு - ஸம்யோக்த்ரு - கர்த்ரு - விதாத்ரு - தாத்ரு ஹாம்-மிருத்யு - யாமிய - க்ஷயாந்தக - பஸ்மாந்தக - பப்ரு - தஹ

புவலன - ஹாகாதக - பிங்கள - ஸுதாசன - அக்கிருத்ர - திரித
திப - பிகாசி - சாஸ்த்ரு - அவ்யய - விபூதி - பிரமரத்ந - வஜ்ர
தக - புத்த-அஜ - கபாலீச - ரௌத்திர - வைஷ்ணவ - பிராஹ்ம-
ாடக - கூஷ்மாண்ட - காலாக்கினிமுதலிய மேற்கூறிய புவனங்
ள் நூற்றெட்டனுள் முதலிற்கூறியஇரண்டுபுவனங்களும்பிரமாண்
த்தின்மேலிருக்கும். அவையொழியப் பத்துப்புவனங்கள் பூமியின்
மலுயரவிருக்கும். அவையொழியப் பத்துப்புவனங்கள் பூமியின்
தோமுகத்திருக்கும்.அவையொழியப் பத்துப்புவனங்கள் பூமியின்
பாகத்திலிருக்கும். மற்றவை பூமியின்வடக்கிலும், வாயுமூலையிலும்
மற்கிலும், நிருதிதிக்கிலும், தெற்கிலும், அக்கினிதிக்கிலும், கிழக்கி
ம் முறையே பப்பத்துப்புவனங்களும், ஒழிந்த ஆறுபுவனமும் கா
ாக்கினி தத்துவத்திலு மிருக்கும். இவை முறையே நிவர்த்திகலையி
ருப்பனவாம்.

இதன்மேற் பிரதிஷ்டாகலையில்;ஸ்ரீகண்ட-ஔம-கௌமார-
வஷ்ணவ - பிராஹ்ம - பைரவ - கிருத - சுகிருத - வென்கிற பிர
ருதியினுங் குணதத்துவத்தினுமிருக்கும் எட்டுப் புவனங்களுக்கும்,
ராஹ்ம - பிராஜேச - சௌம்ய - ஐந்திர — காந்தர்வ - யக்ஷ - ரா
க்ஷச - பைசாசமுதலிய புத்திதத்துவத்தி லிருக்கும் எட்டுப்புவனங்
ளுக்கும், அகங்காரதத்துவத்திலிருக்கும் ஸ்தூலேஸ்வரபுவனத்திற்
ும், மனஸ்தத்துவத்திலிருக்கும் ஸ்தலேஸ்வரபுவனத்திற்கும், ஞா
னந்திரியத்திலிருக்கும் ஸங்குகர்நபுவனத்திற்கும், கன்மேந்திரியத்
விருக்கும் காளஞ்சரபுவனத்திற்கும், மண்டலேஸ்வர—மாகோட -
விரண்ட - சகலாண்டமுதலிய பூததன்மாத்திரையிலிருக்கும் எட்
ப் புவனங்களுக்கும், ஸவர்ணாக்ஷ - பத்திரகர்ண - கோகர்ண- மகா
ய - அவிமுக்த - ருத்திரகோடி-வஸ்திரபாதமுதலிய ஆகாயதத்து
த்திலிருக்கும் எட்டுப்புவனங்களுக்கும், பீமேஸ்வர-மகேந்த்ர-அட்
-ஹாஸ - விமலேஸ்வர - நகலாய - நாகலாய - குருக்ஷேத்ர - கயமூ

தலிய வாயுதத்துவத்திலிருக்கும் எட்டுப் புவனங்கட்கும், பைரவ-கேதார-மஹாகாள-மத்தியமேச-ஆம்ராதக-ஜலபேச-ஸ்ரீசைல-ஹரிச்சந்திரமுதலிய தேஜஸ்தத்துவத்திலிருக்கும் எட்டுப்புவனங்கட்கும், இடையில் அப்புதத்துவத்தில் பாரபூத-டிண்டி முண்டி-ஆஷாட-புஷ்கர-நைமிச-பிரபாச-அமரேஸ்வரபுவனங்களின்மத்தகத்தில் இலகுளேஸ்வரபுவனம் ஜோதிமயமுற்றதாய்ப்பிரகாசித்துக்கொண்டிருக்கும். அதில் அவரெழுந்தருளியிருக்கும் ஆலயத்தின் யோசனை அநேககோடி-அவர் திருமேனியின் பிரகாச யோசனை அநேக கோடி சிங்காதனத்தின் யோசனை அநேககோடி--அவர் வலப்புறம் மழு-சூலமும், இடப்புறம் கலசமும் எடுத்த திருக்கரமுந்தாங்கி அப்புவனத்திலுள்ள ஆன்மாக்கட்குப் பாசநீக்கத்தின்பொருட்டு ஆணவாதி மும்மலங்களைப்போக்கி, நற்கதி அநுக்கிரகிக்க ஆசாரியமூர்த்தியாய் வீற்றிருப்பர். இத்தகைய பெருமைகொண்டு ஒவ்வொரு புவனத்தும் ஒவ்வொரு மூர்த்தியாயெழுந்தருளியிருந்து ஆண்டுள்ள ஆன்மாக்களின் பரிபாகத்திற்குத் தக்கபடி யநுக்கிரகிப்பதுபோலீண்டு எழுந்தருளியிருக்குஞ் சிவபேதமே இலகுளேஸ்வரமூர்த்தமெனப் பெயருறும்

## காஞ்சிப் புராணம்.

"அடுத்தங்குடனும்பரம்பொருளையன்றேவிரவவொட்டாமல்
தடுத்துமுக்கூற்றுயிருணர்வைத்தகையுமவிச்சைமுழுதிரிய
மடுத்தகருணைத்திருநோக்கின்மாணுக்கருக்குப்பொருளுணாப்
எடுத்தகரத்தான்வீற்றிருக்குமிலகுளேசன்றிருவுருவம்."

இலகுளேஸ்வரமூர்த்தயே நம:

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

———

## முப்பத்தெட்டாவது.

# பைரவமூர்த்தி.



அமரர்கள் அஞ்சத்தக்க அந்தகன்போன்ற **அந்தகன்** என்
ம் அசுரன் கரியமேகம்போன்ற பெரிய உடலும்,சுருண்டு நெரிந்து
சங்கிறம் வாய்ந்த தலைமயிரும்,யானைத் துதிக்கை யனைய கரங்களும்,
யைச்சொரியுஞ் செவ்வியகண்களும்,பிறைச்சந்திரன்போன்ற வக்ர
ந்தங்களும்,கண்டோரதுகண்கூசத்தக்ககாட்சியுமுள்ளவன்.அவன்
வபெருமானைத் தியானித்து,பஞ்சாக்கினிமத்தியிற் பலகாலங் கடு
தவஞ் செய்தனன். அவனது அன்பின் முதிர்ச்சிக்கு அகமகிழ்ந்த
ம்பிகைபாகர் இடபாரூடராய் இறைவியாருடன் காட்சியளித்து
பாது வரம்வேண்டும் ; ஓதுக" எனத்திருவாய்மலர்ந்தருள, அசுரன்
அருள்வள்ளலே! அரி அயன்முதலிய அமரர்களால் ஆவிசோரா
மயும், அகற்றவொண்ணாத ஆற்றலும், அடியேனுக்கு அருளவேண்
ம்" என வரம்வேண்ட,பத்திவலையிற்படுவோராகிய பரமபதி "அவ்
றேயாகுக" என அவனுக்குப்பிரசாதித்து அந்தர்த்தானமாயினர்.

கந்தரங்கறுத்தகண்ணுதலளித்த இந்தநல்வரத்தால்எவரையு
யாது, அந்தமில்லாத அகந்தைபெற்ற **அந்தகாசுரன்**, அம்புயத்த
னையும், ஐம்படைக் கிறையையும், மகபதி முதலிய வானவர் குழு
வையும், அநந்தரம் அல்லல்படுத்தி அமர்செய்து துன்புறுத்திவந்தான்.
த்தியோனைச் செருச்செய்து செயித்தோர் தேவாசுரரி லொருவரு
லர். இவ்வசுரனால் இடையறாது எய்தும் இடருக்கு என்செய்வோ
ன்றேங்கி மனமிளைத்தவானவர் மானமற்று மாலை முன் செல்ல்

விடுத்து, தாம் யாவருங்குழுமிப் பின்சென்று அந்தகனையணுகி, "அர
சே! உன்னையன்றி உம்பரைப்புரப்போர் உலகத்திலொருவருளரோ?
இனி நீ பணித்தகட்டளையைச் சிரமேற்கொண்டு நீ அறைந்தவண்ண
மே தொழிலாற்றுவோம்; எங்களைக் காக்கவேண்டும்" எனக்கூறினர்.
அதுகேட்ட அந்தகாசுரன் தனது தலையையசைத்து, தடம்புயத்
தை நோக்கி, புன்முறுவல் பூத்து, கண்ணிணையாற் பண்ணவர்களைப்
பார்த்து, "ஆகாயவாசிகளே! ஆர்ப்பரிக்கின்ற போர்ச்செயலில் ஆண்
சிங்கத்தை யனையவன் யானொருவனே; ஆதலின் நீங்கள் இதுமுதல்
நேரிழையாரை நிகரவ்வடிவுற்றிருங்கள். கண்களில் மைதீட்டி, சேடி
யர்போலச் சேலைதரித்து, மாதர்கட்குரிய மணிபணி யணிந்து, வாழ்
நாள் கழிக்கக்கடவீர்; அவ்வாறன்றி உங்களில் யாவராயினும் ஆடவ
வடிவாய் என் கண்முன் அகப்படின் அன்றே யழிந்து பெயரொழி
வீர்; அதிதூரதேசத்திற் ககலுமின்" எனச்சொல்ல, அந்தரர் அந்த
கன்பால் அத்தகைய உத்திரவுபெற்றதே சாலுமென்று அகமகிழ்ந்து
நாணற்று நங்கைய ருருவேற்றனர்.

வானவர் வனிதையர்வடிவமேற்றபின், மானமற்றவரொனமதி
த்துமவர்களை, அல்லற்படுத்தும் அந்தகன்செயலுக்கு ஆற்றகில்லாது
ஸ்ரீமந்தரமலையை யடைந்து, மஹாதேவனைப் பணிந்து மால்-மல
ரோன் - மகபதிமுதலிய யாவரும் மாதர்வடிவுடன் வளையணிந்தகை
யால் மலர்கொண்டு சிவலிங்கார்ச்சனை யியற்றினர். அவ்வந்தரத்தோ
ரது அன்பின் மிகுதிக்கு அகங்களி துளும்பிய அரவாபரணர் அறவி
டையூர்ந்து அன்னையாருடன் காட்சிதந்தருளினர். அதுகண்ட அச்
சுதன் - அலரோன் - அயிராணிகேள்வனாதி யமரர்கள் உள்ளத்திலா
னந்த வெள்ளமுதித்து, "பரமபதியே! பாவியாகிய அந்தகன் படுத்
திய பாட்டிற்குப்பதறிப்பரதவித்திருந்தோம்! பின்னொருதினத்தில்
அன்னவற்பணிய, பண்ணவரோ பாவையர்வடிவா யாவருமிருப்பின்
இன்னல் செய்கிலேனென்றனன். அன்னது மேற்கொண் டரிவை

நுவமாகியும், அநந்தரம் அல்லல் புரிகின்றனன்; ஆதலின் அடியேங் நுயிர்க்கிரங்கி அவனது உயிரையொழித்து, எங்கள் முதுகிலெய்திய ன்னைப் போக்கியருளவேண்டும். அவ்வாறு தேவரீர் திருவுள்ள ரங்காவிடின் யாங்கள் துன்பக்கடலினின்று கரையேறுத லில்லை ரகும்" என்று பலவகையாகப்பணிந்து துதித்தனர்.

சிவபெருமான் தம்மையாசித்ததேவர்கட்குத் திருவருள்புரிய திருவுள்ளங்கொண்டு, "இமையவரோ! இனி நீங்கள் நண்ணிய பெ ணுருவுடனே இமயவல்லியின் தோழியர்களாகிய கணங்களோடு ழ்ந்திருங்கள். உங்களை எதிர்ப்பானுகில் ஓரிமைப்பொழுதில் அவ ற்றலைப் பாற்றுதும்; அஞ்சன்மின்" என்றருளிச்செய்து அவர்கட்க ளுந் ததியிலிருந்தனர். அதனை யறியா அந்தகன் அவ் வானவரைங் ண்டுபோற் போர்செய்தொறுக்கும்படி வெள்ளமாகிய சேனையுடன் மவித் துன்புறுத்தினன். அவன் துன்பிற்குச்சகியாத சேஷசயனன் தலிய தேவர்கள் இமைப்பொழுதில் மந்தரமலையை யகன்று திரு யிலாயகிரியையடைந்து, திருச்சந்நிதானத்தின் திருவாயிலுட்பிர வசித்துச் சிவத்தியானஞ்செய்து முறையிட்டனர். அருட்பெருங்க லாகிய அண்ணல் தம்முன் நின்ற பைரவக்கடவுளுக்குத் தேவர் யர்தீர்க்கும்படி அவ்வந்தகனது வலிமையும், அவனை யுயிர்போக்கும் திியையும், திருவாய்மலர்ந்தருளினர். இறைவ ரிசைத்தவற்றைச் சவிசாத்திய எமது பைரவப்பெருமான் கோபாக்கிர சித்தமுடைய ராய் வாள்போலும் பற்களையுடைய அந்தகாசுரனது ஆவியை யரு நம்படி, நெருப்புப் பொறிகளைச்சொரிந்து சுழல்கின்ற கண்களையு டைய கணங்களோடுங் கணமொன்றில் யுத்தசன்னத்தராய்ப் புறம் பாந்தனர்.

தேவாசுரர்கட்குக் காலன்போன்றகடியோன், அண்ணல் வரு தகண்டு, அளவில்லாச் சினங்கொண்டு, கண்ணில் நெருப்புவிண்டு, கயிலெடுத்த தண்டுடன் வலசாரியிடசாரிசுற்றி எதிரோடிவர, இரு

வர்சேனையுஞ் செருவேற்றன. அமரரும் அசுரரும் அநந்தவகையாகப் போர்செய்தனர். அதில் அந்தகன் சேனைமுறிபட்டது. தண்டு - சக்கிரம் - பிண்டி - பாலம் - வாள் - பல்லயம் - தோமரம் - ஈட்டிமுதலிய எண்ணில்லா ஆயுதங்கள் பொடிபட்டன. மண்படு தூளி விண்ணிடையுலவித் தினகரன் தேரிற்பூட்டிய எழுபுரவிகண்களை மறைத்தன. கடலெனச் சோரிநீர்பரவியது. திசைகள் மயங்கின. நக்ஷத்திரங்களுதிர்ந்தன. உலகமதிர்ந்தது. அண்டகடாகம்பிளந்தது. இவ்வாறு பைரவக்கடவுளும் அந்தகனும் போர்புரிகையில், அசுரகுருவாகிய வெள்ளி செபித்த அமுதசஞ்சீவினி மந்திரத்தால் அசுரச்சேனை ஆருயிர்பெற்று மீண்டும் வெகுளிகொண்டு சமர்செய்யத்தலையெடுத்தது. அஃதுணர்ந்த சிவபெருமான் அவ்வெள்ளியை விழுங்கினர். கண்ணுதல் விடுத்த வயிரவப்பெருமானது கணங்கள் கணமொன்றில் அந்தகன் சேனையை யழித்தன.

உலகிலுள்ள உயிர்களெல்லாம் நடுங்க, ஊழிக்காலத்தி லுதித்த சமுத்தசாகரம்போல இரைந்துவந்து, வடவாமுகாக்கினியைச் சிந்தும் வலியோனாகிய அந்தகாசுரனை ஐயன் தமது அருமைத் திருக்கரத்தேந்திய முத்தலைவேலின் முனையிற்குத்தி, மேலேதூக்கி யெடுத்தனர். பத்தாயிரகோடி வருடமளவும் இரத்தவெள்ள மொழுகியது. பிறகு பைரவக்கடவுள் அந்தகனைக் கழுவேற்றியதுபோலச் சூலத்துடன் திருக்கரத்திற்றூங்கி, கருணாமூர்த்தியின் திருச்சந்நிதியடைந்தனர். அந்தகன் அகந்தை நீங்கி, அநந்தவகையாகத் துதி புரிந்தனன்.

சோமசூரியாக்கினிகளையே திரிநேத்திரங்களாகவுடைய பரஞ்சோதி "யாது வேண்டும்" என அந்தகனை வினவ, அந்தகன் "பூத கணங்கட்கு நாதனாகவேண்டும்" என வேண்டினன். கருணாமூர்த்தியாதலின் பெருமான் அவனுக்கும் மனமிரங்கி,வயிரவக்கடவுளது சூலப்படையினின் றிறக்கியருளி, பூதகணங்கட்கோர் தலைவனாக நியமித்தருளினர். பரமன் வயிற்றி லகப்பட்ட பார்க்கவன்

கிலத்துடன் தரணிமேற்றோன்றிச் சுக்கிரன் எனப் பெயரெய்தி
ன். தேவர்கள் தங்கட்குற்ற துயர்தொலைந்து சேயிழைவடிவை
ாழிந்து தமது புத்திரமித்திருடன் சகலசுகமும்பெற்று விழைந்
வகையே சிவார்ச்சனை முதலியன செய்து தத்தம்பதவியில் குறை
ன்றி வாழ்ந்திருந்தனர்.

இரணியாக்ஷன் குமாரனாகிய அந்தகாசுரனைச் சங்கரித்துத்
வர் துன்பகற்ற எழுந்தருளிய அவசரம் பைரவமூர்த்தமெனப்
ரப்படும்.

## உபதேசகாண்டம்.

"பத்தாயிரகோடியெனும்பருவங்கடந்த
முத்தாளையயிற்படைகொண்டனன்மொய்த்தசோரி
நெய்த்தாயுணங்கியொழுக்குறநின்றநீதி
பொய்த்தானையுணக்கினன்பூதநாதன்.

முதலிக்கனைநெற்றிவிழிக்கனன்மூட்டிவென்ற
குதலைக்கொடிபங்கனிடத்தெதிர்கொண்டுசென்றான்
விதலைப்படுவெந்திறலந்தகவெய்யனைக்கார்க்
கதலிக்கொடியாமெனமுன்னரிற்காட்டினானால்.

கைகாலிடைதூங்குறவீங்குகடற்கடுங்கார்
மைகான்மணிகண்டனையந்தகன்வாய்வழுத்த
நெய்காலெனடுமூச்சிகைச்சூற்படைநீக்கிநோக்கி
யுய்காரணம்வேண்டுவையாகொலுரைத்தியென்றான்.

மாதுக்கொருபங்கனையங்ஙன்வணங்கியைய
பூதர்க்கொருநாயகனாகுதல்போற்றிநின்றே
னீதக்கதெனப்பணியென்றுநிகழ்த்தினானைப்
போதத்தலையன்னவற்காதுபுரிந்துநின்றான்."

பைரவமூர்த்தயேநம:

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

முப்பத்தொன்பதாவது

# ஆபதோத்தாரண மூர்த்தி.



சர்வமங்கள தேஜோமயமாகிய சிவபெருமானே சகலஜீவா மாக்களுக்கும் ஆங்காங்கு நேர்ந்த இடுக்கண்களைக் களைவாரன்றி வே றொருவர் துணையாதற் குரியரல்லர்.

பாராசரபுராணம்.

ராஜாதிராஜாஸர்வேஷாம்த்ரியம்பகஸ்த்ரிபுராந்தகः
தஸ்யைவாமசராஸ்ஸர்வேப்ரஹ்மவிஷ்ண்வாதயாஸ்ஸுரா:

పరాశరపురాణము.

రాజాధిరాజాసర్వేషాంత్రియంబకస్త్రీపురాంతకః ।
తస్యైవామచరాస్సర్వేబ్రహ్మవిష్ణ్వాదయస్సురాః ॥

அத்தகைய அருள்வடிவாகிய அண்ணல் அநந்தரம் அளவி லாத அமரர்கள் தம்மை நாற்புறமும் புடைசூழ்ந்து நிற்கவும், அ ரர்-சித்தர்-அசுரர்-தைத்தியர்-கருடர்-கிந்நரர் - கிருதர்-கிம்புருடர் கந்தருவர்-யக்ஷர்-விஞ்சையர் -பூதர்-பைசாசர் - அந்தரர் - முனிவர் உரகர்-ஆகாயவாசிகள் - போகபூமிய ரென்னும் பதினெண்கண ளும், பரஞானம் அபரஞானமாகிய இருவகை மதங்களையும் அரு யாறுபோற் சொரியும் ஐந்து திருக்கரங்களையும் யானைமுகத்தையு டைய விநாயகமூர்த்தியும், அசுரர்பயமொழித்துஅயிற்படையேந்தி அமரர் சேனபதியாகிய அறுமுகப்பெருமானும், அபிராமி - மாகே ஸ்வரி- கௌமாரி-நாராயணி - வராகி - இந்திராணி-காளி யென்னு



39. ஆபதோத்தாரணமூர்த்தி.

நாமங்களையுடைய சத்தமாதர்களும், சங்கு-சக்கிரம்-கதை - கட்
- கோதண்டமாகிய பஞ்சாயுதங்களைத் தாங்கிய பதுமநாபனும்,
லாசனத்திருந்து ஜீவான்மாக்களையெல்லாஞ் சிருட்டிசெய்யும் பிர
தவனும், எண்ணில்லாத தெய்வமங்கையர்குழாமும், சூரியன் - சந்
ன்-அங்காரகன்-புதன்- பிருஹஸ்பதி-சுக்கிரன்-சனி - இராகு-கே
வென்னும் நவக்கிரகங்களும், முப்பான் மூன்றுகோடி தேவர்க
ம், அகஸ்தியர்-ஆங்கிரசர்-கௌதமர்-காசிபர்-புலத்தியர் - மார்க்க
டேயர் - வசிட்டராகிய சத்தருஷிகளும், நாற்பத்தெண்ணாயிரவ
ன முநிவர்களும், பக்கங்களிற் கும்பல் கும்பலாகக் கூடிப் பணிந்
தங்களுக்கு இடையூறு சம்பவித்தகாலத்தில், திருவருட்சகாயம்
றக் கருதித் துதித்து நிற்கவும், நவரத்தினங்க ளிழைத்த பொற்
ங்காதனத்திற் சர்வாடம்பர சம்பந்நராய் வீற்றிருந்தருளி, அமரர்க
ாற் கூறக்கேட்ட குறைகளைக் களைவர்.

அவர்கள் விரும்பியவண்ணம் துயர்தொலைக்கத் திருவுள்ளங்
காண்டு மானுடச்சட்டை சாத்தி இரண்டு திருக்கரங்களோடு தண்
மும் கபாலமுமேற்று வீற்றிருப்பினும், அவ்வச் சமயங்கட் கேற்ப
ஞவகையாகிய திருவுருவங்கள் கொண்டு அவரவர்கள் அவாவிய
டைவே இடுக்கண்களைந்து இஷ்டசித்திகளைப் பெறும்படி அநுக்கி
ஞ் செய்யாநிற்பர். அவரது பலவகைத் திருவுருவங்களையும் விளக்
தற்கு முடியா.

**திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரம்.**

"ஸ்மப்படிந்தகண்ணாளுந்தானுங்கச்சி
　　மயானத்தான்வார்சடையான்மாசொன்றில்லா
னொப்புடையனல்லனொருவனல்ல
　　னோரூரனல்லனோருவமனில்லி
அப்படியுமந்நிறமுமவ்வண்ணமு
　　மவனருளேகண்ணாகக்காணினல்லா
லிப்படியனிந்நிறத்தனிவ்வண்ணத்த
　　னிவனிறைவனென்றெழுதிக்காட்டொணாதே."—

அம்முனிவர்முதலானோர் ஆபத்துக்காலத்தில், தமது துயர்கூறி யாசிக்க, அவர்கள் துன்பத்தைத் தொலைத்துச் சகாயஞ்செய்யும்படி எழுந்தருளியுள்ள திருக்கோலமே ஆபதோத்தாரணமூர்த்த மெனக் கூறப்படும்.

காஞ்சிப்புராணம்.

"கணங்கள்கலுழிமதக்கடவுள்கதிர்வேற்குரிசிலெழுமாதர்
நிணங்கொடிகிரிப்படையேந்தனிலவெண்டோட்டுமலர்ப்புத்தே
ளணங்குநவக்கோண்முனிவரர்சூழ்ந்தனுக்கராகப்பொலிந்தவிசி
னிணங்குமாவற்சகாரனெனுமிறைமைப்பெருமான்றிருவுருவம்."

ஆபதோத்தாரணமூர்த்தயே நம:

―――



40. வடுகமூர்த்தி.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

## நாற்பதாவது

# வடுகமூர்த்தி.

---

சிவார்ச்சனைப்பலனாற் பெருவலியமைந்த துந்துபிஎன்போன்
ந்தனாகிய முண்டாசுரன் இளமைப்பருவத்திலேயே எம்பெருமா
நோக்கி, மழைநாளிலும் பனிநாளிலும் நீரிலிருந்தும், கோடைகா
திற் பஞ்சாக்கினி மத்தியினின்றும், பஞ்சேந்திரியங்களையொடுக்கி,
நாக நித்திரையொழிந்து, பரமபதியைக்கருதிப் பலகாலம் அருந்
ஞ் செய்தனன். முண்டாசுரன்கண் டானந்திக்கும்படி முக்கண்
ருந்திய முழுமுதற்கடவுள், அரிபிரமாதியர் இருபுறம் வரவும்,
புருநாரத ரிசைபாடவும், பார்ப்பதிசமேதராய்க்காளகண்ட சதுர்
ு திரிநேத்திரங்களுடன் இடபவாகனாரூடராய்க் காட்சிதந்தருளி
. அசுரன் அதுகண்டு, அளவில்லா மகிழ்ச்சிகொண்டு, தனது தவ
த நிறுத்தி, சங்கரனைத் தேவியோடுதெரிசித்து, சாஷ்டாங்கமாக
பிசைப் பலமுறை பணிந்து- பண்ணேசையாற் பாடி, பரவசனு
கூத்தாடிக் கைகட்டி நின்று " கருணாநிதியே ! கடையேனையும்
பொருளாகக் கருதி, காட்சிதந்தருளினீர் " என்று மெய்யன்
ாடு துதித்தனன்.

அன்பர்துதிக்கு அகமகிழும் ஐயன் "வேண்டியவரம் யாது"
வினவ, " அத்தனே ! அடியேன் தேவாசுரரி லொருவராலும்
ல்வியடையாமலும், தேவரீரா லன்றி ஒருவராலும் உயிரொழி
லும், இருக்கத்தக்க வலியுதவவேண்டும் " என வேண்டினன்.
ருமான் அவ்வாறே அநுக்கிரகஞ்செய்து அந்தர்த்தானமாயினர்.

முண்டாசுரன் அதிக வலியுற்றோனாய், முதலில் அசுரர்களைச் செயித்து அவர்களைத் தனது சேனையாகக் கொண்டனன். அதன்பின்னர் அமராவதிநகரமடைந்து, ஆண்டு வசிக்கும் அந்தரத்தவர்களைச் சிறைப்படுத்தி, இந்திரனோடெதிர்த்துச் செருச்செய்து, ஐராவதம்-அரம்பையர் - சங்கநிதி-பதுமநிதி-காமதேனு - கற்பகத்தரு முதலிய கணக்கில்லாத வளங்களைக் கைப்பற்றி; தோல்வியடைந்த அயிராணி கேள்வனைச் சிறைசெய்ய எத்தனித்தனன். அஃதறிந்த ஆகண்டலன் அம்முண்டனுக்குத் தப்பித்துக்கொண்டு க்ஷணமொன்றிற் சத்தியலோகஞ் சார்ந்து சதுமுகக்கடவுளைச் சரணடைந்து அபயம்பெற்றனன்.

முண்டாசுரன் கோபமூண்டு, "முண்டகத்தவன் என்னினும் வலியனோ? அவனை இப்பொழுதே அடக்குவேன்" என்று அநேகஞ் சேனையுடன் அமர்க்கோலங்கொண்டு வருகையில், ஆரணன் அன்னவாகனமேறி ஆண்டெதிரடையக்கண்டு, அவனை வாகனத்துடன் மாய்ப்பேனென்று மாயை செய்துவருவதை நோக்கிய மலரோன் மனம்வருந்தி யெதிர்த்தனன். இசைத்தற் கரிய யுத்தம் எண்ணில் காலம் இருவருக்கும்நிகழ்ந்தது. வேதா யாதுவகையினும் முண்டனைச்சண்டையிற்சங்கரிக்க வலியற்றவனாய் மஹாதேவனை மனத்திலிருத்தி வருத்தத்துடன் "மங்கை பாகனே! கங்கைவேணியாய்! எம்நாயகா! சங்கரா சிவா!" என ஓலமிட்டழுதனன்.

உம்பர்கூட்டத்திடையே உமாதேவியாருடன் திருவோலக்கங்கொண்டெழுந்தருளியிருக்குஞ்சிவபெருமான்திசைமுகன்முறையிடுதலைத் திருச்செவியிலேற்று வடுகமூர்த்தியைப் பார்த்து "நீமுண்டகத்தவிசோனது துயரொழிய முண்டாசுர னுயிரை முடித்து வருதி" என ஆஞ்ஞாபித்தனர். வடுகநாதர் வள்ளல் கட்டளைப்படி வாயுவேகமாகச் சென்று மலரோனுக்குச் சேவைதந்து, "வருந்தாதே" என்று தேற்றி மனத்துயர் போக்கி, முண்டாசுரன் சேனை

மாத்திரையொன்றில் மாய்த்தனர். முண்டன் ,கண்டு தணியாக்
பங்கொண்டு சண்டைசெய்ய எதிர்க்க, சிறிதுபொழுது அவன
ற்றலறியப் பொருதனர். இருவருக்கும் இணையில்லாச் சமரொய்தி
பால் இமையவர் இடுக்க ணெய்தி இறைவனைத் துதித்தனர். வடுக
ப்பெருமான் ஒருமாத்திரைப்பொழுதில் முண்டனை நெடுநாளாய்
சியுற்றோனுக்குப் பெருவிருந்திட்டாற்போல இயமன்வயிராறப்
த்துத் தேக்கெடுக்கும்படி அவனுயிரைச் * சயமினி நகருக்கு
க்கிரை யனுப்பினர். **பிரமன்** துயரொழிந்து வடுகமூர்த்தியை
ங்கினன். தேவர்கள் புஷபமாரி பொழிந்தனர். வடுகர் மனக்க
புடன் இந்திரனை அமராவதிக்கேக விடையளித்து, திருக்கயிலை
யடைந்து விடையூர்திபால் விண்ணப்பித்தனர்.

பிரமன் தன்னைத் துன்புறுத்திய முண்டாசுரனுக்கு அஞ்சி
றையிட்டபொழுது, அவ் வலரோனது வேண்டுகோளுக் கிரங்கி
டையூர்தி அவ்விடுக்கண்டீர்ப்பான்கருதி விடுத்த மூர்த்தமே வடுக
த்தமெனப் படும்.

வடுகமூர்த்தயோகம:.

---

* சயமினி அல்லது சையமினி—இது யமனுலகத்தில் அவனாற்
ாளுக்கொண்டிருக்கப்பட்ட இராஜதானிநகரம்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## நாற்பத்தொன்றாவது

# க்ஷேத்திரபாலகமூர்த்தி.

ஆதிமத்தியாந்தரஹிதராகிய சிவபெருமானே பலகோடி ஆ மாக்களையும் பதுமனுகிப் படைத்தும், திருமாலாகிக் காத்தும், உ த்திரனுகிச் சங்கரித்தும், மகேச்சுரனுகி மறைத்தும், சதாசிவனுகி நுக்கிரகித்தும், பஞ்சகிருத்தியங்களையும் இயற்று நிற்பர். அத்தகை அமலரது ஆணைவழித்தாய் அகிலாண்டங்களும் விளங்கும். அவ்வ டங்கட்கிடனுய்ச் சத்தசமுத்திரங்களையுஞ் சிறுதிவலைபோல எறி ன்ற மூலமகாசமுத்திரமாகிய பெரும்புறக்கடலும், உலகத்தின் ம தியில் மேருமலையும் விளங்கும்.

தனித்தனி இலட்சம்யோசனைவிஸ்தீரணமான நாவலந்தீவ உவர்க்கடலும், அதனிரட்டிப்பு விரிவாகிய இறலித்தீவும் கருப்ப சாற்றுக்கடலும், அதற்கிரட்டிப்பு விஸ்தாரமாகிய இலவுத்தீவும் ம க்கடலும், அதற்கிரட்டிப்புப்பரப்பாகிய குசைத்தீவும்நெய்க்கடலு அதற்கிரட்டிப்பு விசாலமாகிய கிரவுஞ்சத்தீவும் தயிர்க்கடலும், அ ற்கிரட்டிப்பு அகலமாகிய சாகத்தீவும் பாற்கடலும், அதற்கிரட்டி ப்ளவாகிய புட்கரத்தீவும் சுத்தநீர்க்கடலும், பத்துக்கோடி விஸ்தீ ணமான பொன்மயமாகிய போகபூமியும், பதினுயிரங்கோடி யோ சனை விஸ்தீரணமான சக்ரவாளகிரியும், கோடியே யிருபத்தேழி ட்சம் யோசனை விஸ்தீரணமான பெரும்புறக்கடலும், கோடியோ சனைவிரிவுள்ள இருளுலகமும், நாற்பத்தொன்பதிலட்சம் யோசனை விஸ்தீரணமும் கோடியோசனை கனமுமான அண்டச்சுவரும் உடை யது ஓரண்டம்.

மேருமலையின்நடுவிலிருந்து அண்டச்சுவர்வரையில்யோசனை
ஐம்பதுகோடியாகக் கீழ்த்திசையெல்லை விரித்துக் கூறினோம்.
னைய மூன்று திசைகளும் இவ்வாறே விஸ்தீரண முடையன. அக
மும் நீளமும் உயரமும் தனித்தனி நூறுகோடியோசனை விசால
ள்ள இவ்வகைய அண்டத்தினை ஒருழிகாலத்தில், மலையைப்போல
லைகள் தோன்றி, அண்டகடாகத்தை முட்டி, அண்டஅடுக்குகளை
லகுலையச்செய்து, வெள்ளச்சுழியால் அட்டபர்வதங்களையும் அட்
திக்கஜங்களையுஞ் சாய்த்து, பெரிய சக்ரவாளகிரியையும் மேரும
லையையும் மறையச் செய்து, ஈரேழு பதினான் குலகங்களிலுள்ள
வதங்களெல்லாம் பாழ்படுத்தத்தக்க ஓர் பெருவெள்ளந்தோன்றி
து. அதனால், நெடுங்காலத்தை ஆயுளாகக்கொண்ட அட்டமாநாகங்
ளும் நவக்கிரகங்களும் தேவர்களும் இந்திரன்முதலியவெண்டிசைக்
காவலரும் கற்பகவிருக்ஷமும் சூரியசோமாக்கினியென்னும் முச்சுட
ம் ஊர்வனநீர்வாழ்வன பறப்பன நாற்காலி தாவரம் மாநுடராகிய
எழுவகைத்தோற்றமு மொழிந்து, சொல்லப்பட்ட பல பொருள்களு
அழிந்து, எல்லாவுயிர்களும் முறையே மாயையி லொடுங்கி, அண்ட
முழுவதும் அந்தகாரமயமாயிற்று. அநேககாலம் இவ்வா றகன்றது.

சூத்ரிகன் பதுமையைச் சிறிதுகாலம்நிறுத்தி மீட்டும் அதனை
ஆட்டுவிக்க வெடுப்பான்போல, அருள்வள்ளல் அகிலத்தை அடை
வே சிருட்டிசெய்யத் திருவுள்ளஞ்செய்து, சர்ப்பாபரணமும் புலிய
தளும் மழுமானேந்திய திருக்கரங்களும் கடுக்கைத்தொடையும் கா
கண்டமும் கனல்விழியுங் கரந்து, கௌரியம்மையாருடன் கலைக
ளோட்டெட்டையுங்கலைகளாய்த்தாங்கி, பிரணவமே தோணிவடிவாக
ற்க அதன்மீ தாரோகணித்தனர். நீங்கா நிலையாய் நிறைந்த பேரிரு
ள் எம்பெருமானது திருவிருப்பின்படிநீங்கியது. அறமொன்றுதவிர
னைத்து மழியுமென்று கூறும் ஆன்றோர் கருத்தின்வண்ணம் எஞ்
சின்ற வநனர் மகாதேவனைத் தோணிமேல் துணைவியாருடன்
ற்றிருக்கக்கண்டு திருவடிகளைச் சேவித்துத் துதித்து, பயனம் மு

த்துமுதலியவற்ருனருச்சித்து நிற்க, அமலர் அவ்வருணனுக்கு அ
ள்சுரந்து அநுக்கிரகித்து, அவனளவில்லிருக்க ஆஞ்ஞாபித்து, திசை
காவலனைநிறுவி,வெள்ளப்பெருக்கைத் தமது நுதல்விழியால் நொ
ப்பொழுதில் விலக்கி, பண்டுபோற் பலவையும் படைத்து, அவர
பதவியிலமர்த்தி,அகிலலோகங்களையும் ஆதரித்து அம்மையாருட
திருத்தோணியில் வீற்றிருந்தனர்.

க்ஷேத்திரம்=பூமி; பாலகர்=காப்பவர்;—எனவேக்ஷேத்தி
மாகிய உலகத்துக்கு ஊழிகாலத்தில் உற்றதுன்பத்தைத்தீர்த்து ரக
்த்தருளினமையால் உமைகேள்வனுக்கு க்ஷேத்திரபாலகமூர்த்தி
ன்பதோர் திருநாமம் வழங்கிவருகின்றது.

சீகாழித்தலபுராணம்.

“ விரிதிசைபுரப்பானெட்டுவியன்கணத்தலைவர்க்கேவிக்
கிரிபுரைதண்டமேந்திக்கேத்திரபாலனுகி
புரிசடைமுதல்வன்சூழ்ந்துபுறந்தருந்தோணிமேற்கொண்
டரிப்படாதுலகங்காக்குமன்னையோடிருந்தானெந்தை.

கமலநாரணனெங்குங்கடையினுமுதல்வனுவா
னிமலனேயன்றிவேறுநிலையுநர்யாரேயார்க்குந்
தமரசாகரநீர்மோதத்தம்முயிர்சாம்பினுரை
யுமரவொன்றுரைப்பாரன்னோர்பெற்றியையறியாரன்றே.”

க்ஷேத்திரபாலகமூர்த்தயேநம:

சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

---

## நாற்பத்திரண்டாவது

# வீரபத்திர மூர்த்தி.

---

காசிபப்பிரமாவின் மனைவியராகிய திதி அதிதி யென்னுஞ் சயிழையார் பெற்றதேவர்க்கும் அசுரர்க்கும், தீராப்பகையாற் செச்செய்தல் வழக்கமாதலின் முன்னொருகாலத்தில் அவ்வாறடைந்த மரில் அமரர் வலியுற்றவர்களாய் அயிராணிகேள்வனைத் துணைகொண்டு, அவுணர் சேனையை நாசஞ்செய்ய, அவர்களில் வலியோர்களும் ன்று புறமுதுகு காட்டியோடினர். அகப்பட்டோர் கரம் சிரம் தலிய உறுப்புகள் அறுபட்டு அவதியடைந்தனர். வருந்தி வலியிழத் தானவர், வானவரை ஜெயிக்க வகையேதென்று மனங்குழம்பி, மது குலகுருவாகிய சுக்கிரபகவானை யடைந்து, அவனது துணைமலடியைப்பணிந்து, தமக்குற்ற துன்பத்தைச்சொல்லி, "எமது குடிமுழுவதும் அடிமைகொண்ட குருநாதா! இமையவர் எங்களை யிற்றைப் போரில் வெலித்தனர்; அவர்களை வெல்லவல்ல வல்லமையுண்டாம் வகையை உபதேசித்தருளவேண்டும்" என்று பணிந்துவேண்ட, பார்க்கவன் பச்சாத்தாபமுற்று "பண்ணவரைப் பகைக்கப்பண்ணுவேன்; பறவேண்டாம்" எனக்கூறித் தம்முன்னின்றகிருதனைத்தேற்றினன்.

சாலகடங்கடர் சங்கடத்தைச் சாலவுஞ்சிந்தித்த வெள்ளி வீரமார்த்தாண்டன் என்னுந் திறமுடைய ஒருவனே உம்பரைத் துன்புறுத்தத் தக்கவன் என்றுள்ளத்தி லுன்னி, அன்னோனையழைத்து, 'அம்புயத்தவனை அகத்திலிருத்தி அருந்தவமாற்றி, அதிகவல்லமை படைந்து அமரரையலைத்தி" என்று, தவஞ்செய்யவேண்டிய முறை

மையையுஞ் சாற்றிவிடுத்தனன். முனிவனது பதமுண்டகங்களைப் பணிந்துவிடைபெற்ற வீரமார்த்தாண்டன் மலைச்சாரலையடைந்து ஒருப்பூசிமேற்பெருவிரலூன்றி நின்று பஞ்சாக்கினிமத்தியிற்பலகாலம் பதுமனை நோக்கித் தவஞ்செய்தனன். தவாக்கினி தேவருலகஞ்சென்று ஆண்டுள்ள அந்தரத்தவரைத் தகித்ததால், துன்புற்ற சுரர் இரணியகருப்பனைத்தரிசித்து "வீரமார்த்தாண்டன் தேவரீரைநோக்கிக் கடுந்தவம் புரிதலின்,அஃதக்கினிச் சுவாலையாய் அடியேங்களைத் துன்புறுத்துகின்றது. அதனை விலக்கியருளவேண்டும்" எனப் பிரார்த்தித்துக்கொண்டனர்.

பிரமதேவன் "அவ்வாறே யாகுக" எனத்தேவர்கட்குத் திருவாய்மலர்ந்து விடைதந்து, வீரமார்த்தாண்டன் தவச்சாலைக்கு அன்னவாஹனத் திவர்ந்துசேர்ந்து, அவன் தவச்செயலாலிளைத்து என்புருவாயிருத்தல்கண்டு, இரக்கங்கொண்டு, கமண்டலநீரை மொண்டு அவன்மேற்புரோக்ஷிக்க,அதனால் அசுரன் பண்டுபோலாயினன். வேதன் "வீரமார்த்தாண்ட! நின் தவத்திற்கு வியந்தேன்; இறப்புநிகழ்வெதிர்வெனு முக்காலத்தும் உன்னைப்போன்று தவமுஞற்றுவாரொருவருளரோ? விழைந்தனகூறின் விரைவிற்றருவேன்" என, அசுரன் "அண்ணலே! திரிலோகத்திலும் என்னைச்செயிப்போ ரொருவரின்றி அரசாற்ற அவாவினேன்; அவ்வகையவரம் வழங்கவேண்டும்" என யாசிக்க, கமலயோனி அவ்வாறே கடாக்ஷித்து அந்தர்த்தானமாயினன். அவ்வீரமார்த்தாண்டன் அலரோனளித்தவரத்தால் அகந்தையுற்று, அளவிலாத அசுரச்சேனையைக்கூட்டிக்கொண்டு அமர்க்கோலமாய் **அமராவதி** நகரஞ்சார்ந்தனன். அஃதறிந்தஅயிராணிகேள்வன் ஐராவதத்திலேறி எதிர்க்க, இருவருக்கும் இடையறுப்போர் பலகாலம் நிகழ்ந்தது; கடைசியில் ஆகண்டலன் தோற்க, அவனை நகர்கடக்கத்துரத்தி இந்திரபட்டணத்திலேயே அரசுசெய்திருந்தனன்; அவ்வெற்றியால் மனத்திருப்தியடையாமல் அடிக்கடி **அக்கினி** முதலிய திக்குப்பாலகரைத் துன்புறுத்தியும், தேவமாதரைச் சிறைசெய்தும்

மக்ளைகளைக்கொன்றும், ருஷிசிரேஷ்டர்கள் செய்யும் யாக கரு ்ளைச் சிதைத்தும், எண்ணிட் டோைத்தற்கரிய இடுக்கண் புரிந்து தனன்.

சகலவகையிலுந் தங்களைச் சங்கடப்படுத்திய வீரமார்த்தாண் னைச் சங்கரித்து அவனாலாகிய பாதையொழிந்து உயிர்பிழைக்க, ம்பர்கள் ஒருங்குகூடி, ஆலோசித்துக்கொண் டிருந்தவற்றை நா முநிவராற் கேள்வியுற்ற வீரமார்த்தாண்டன் சினமிகக்கொண்டு வர்களையெல்லாஞ் செருச்செய்து, பெருந்துயர் விளைத்தனன். பொழுது அமரர்களஞ்சியோட, வீரமார்த்தாண்டன் துரத்திக் ாண்டு பின்வர, தேவர்கள் திருக்கயிலாயகிரியை யடைந்து திரு திதேவர் விடைபெற்றுத் திருச்சந்திதானத்தினுட் பிரவேசித்து ெருமானைத் தரிசித்து, அஷ்டாங்கபஞ்சாங்கமாக நமஸ்கரித்து, க்குற்றதுன்பத்தை முறையிட்டனர். வானவர் வழங்கியமாற்றத் ு, மனத்துட்கொண்ட மஹாதேவர் "அவனை யழிப்போம்; அஞ் ர்" என்று அநுக்கிரகித்து, வீரபத்திரரை விளித்து "அவனைய த்தி" என ஆஞ்ஞாபிக்க, ஆண்டவர் அநுமதிப்படி அவ் வீரபத்தி கடவுள் ெறிது சேனையை யுடன்வரக்கொண்டு, தானவத்தானை பச் சடுதியிற்சங்கரித்து, வீரமார்த்தாண்டனுடன் எதிர்த்தனர். வன்பலவகை மாயைபுரிய, வள்ளல் அதனை மாத்திரைப்பொழுதில் ற்றி, அவனோடரும்போர் புரிந்து கடைசியில் வீரமார்த்தாண்ட ரச் சங்கரித்து, தேவர் துயரைத்தீர்த்து, இந்திராதிதேவர்களை அவ ர் பதவியில் விடுத்து, உலகத்திலுள்ள உயிர்கட்குச் சுகவாழ்வளி ு, வெள்ளிமலை யடைந்து தமது வெற்றிச்செயலைச் சிவபிரான் ல் விண்ணப்பித்தனர்.

தேவர்துயர் தீர்த்து,அவர்கட்குச் சுகவாழ்வளிக்கவும், வீரமா தாண்டனைச் சங்கரிக்கவும்,சிவபிரானால் அனுப்பியகோலமே வீர த்திரமூர்த்த மெனவிளம்பப்படும்.

வீரபத்திர மூர்த்தயேநம:

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

## நாற்பத்துமூன்றாவது

# அகோராஸ்த்ரமூர்த்தி.

சிவப்பிரசாதத்தாற் பல போகபாக்கியங்களையும் பெற்று, தனக்கொருவரு நிகரில்லா தருக்குற்ற சத்ததந்து என்போன் செல்வச்செருக்கால், தான் அத்தகையபேற்றினை யடைந்ததற்குக் காரணம் சிவார்ச்சனையென்பதை மறந்து மதிமயங்கி (தக்ஷப்பிரசாபதியைப் போலவே) தானோர் வேள்விசெய்ய வேட்கையுற்றவனாய், வானவர் இருடியர் முதலானோர் வரவேண்டுமென விளித்து,மேருமலைச்சாரலில் ஓர் யாகஞ்செய்ய எத்தனித்து, பிரமதேவனைப்பார்த்து "நீ யாகஞ்செய்விக்க" என்றனன். அருகிருந்த திருமால்வெருண்டு "முக்கண்ணன் சேவடியில் விழிமுளரி பெய்தன்றோ-சக்கரமு மலர்த்திருவுந் தணப்பருஞ்செல் வமுமடைந்தேன் - அக்கடவு ளருள்சிறிதுமடையாரோற் றம்பதத்தி - லெக்கடவு டேவென்றாங் கேமாப்புற் றிருக்குமால்" என்றும், பிரமதேவன் "யாகபுருஷனாகிய சிவபெருமான் எழுந்தருளியிராத யாகம் இடையூறு படுமேயன்றி நிறைவேறாது" என்றும், இந்திரன்முதலிய இமையவர் குழாமும் எஞ்சிய முனிவர்களும் "இது தகாது ; ஈசனையன்றி யாகஞ்செய்தல் நிஷ்பலம்" எனவுங் கூறித் தடைசெய்தனர்.

அவ்வாறு அமரரும் முனிவரும் சாற்றக்கேட்ட சத்ததந்து சாலவுங் கோபங்கொண்டு, பற்களைக்கடித்து மீசைதுடிக்க, கண்களில் நெருப்புப்பொறிகள் கக்கினன். கமலாசனன் இனி இவனால் யாது தீங்கெய்துமோவென்று மனத்திலுன்னி, ஒன்றுங் கூறமாட்டாமல் உடன்பட்டு, சங்கரனைநீங்கிய சகலதேவர்களையும் பல முனிவரையும்



43 அகோராஸ்த்ர மூர்த்தி.

...ன்கொண்டு யாககாரியந் தொடங்கினன். இங்கிவ்வாறிருக்கை
..., த்ரிலோக சஞ்சாரியாகிய நாரதமுனிவர் சத்ததந்து செய்யும்
...ச் செயலை யறிந்து விரைந்து நடந்து வெள்ளியங்கிரியை யடைந்
து திருநந்திதேவரது விடைபெற்றுத் திருச்சந்நிதானமுற்று, சிவபி
...னைப் பலமுறை பணிந்து கைகூப்பி, தனது மகதியாழை யெடுத்
...யமுறக் களிக்கும்படி சாமகீதம்பாடினர். சிவபிரான் "நாரத
முனிவரே! யாதுவிசேஷம்" என வொன்று மறியார்போன்று வினவ,
...ர் "சர்வலோகச் சுதந்தரமுற்ற சம்பு! தேவரீரையின்றிச் சத்தத
ந்து செய்கின்ற யாகத்தை யழித்தல்வேண்டும்" என்று விண்ணப்
பித்து [illegible] பெற்றுத் தமது விருப்பின்படி சென்றனர்.

சிவபெருமான் மண்டலத்தைத் தேராகவும், உலகத்தைச்
சக்கரமாகவும், அக்கினிபகவானை வில்லாகவும், சந்திரனை நாணாக
வும், வருணனைப் பாணமாகவும் வைத்து, குமாரக்கடவுளைத் தேர்ச்
சாரதியாக நியமித்து, யுத்தக்கருவிகளைச் சித்தஞ்செய்து, அருகிருந்த
வீரபத்திரனை நோக்கி "நீ அக்கொடியோனையும் அவன் யாகத்தை
யும் அழித்து வருக" என்று ஆஞ்ஞைசெய்ய, வீரபத்திரர் அகோர
வுருவுற்று அளவில்லாப் பூதசேனைகள் புடைசூழ்ந்து வர இரதாரூ
டராய முருகப்பெருமான் தேரைச் செலுத்த மேருமலைச் சாரலை
யடைந்தனர், அது சங்கதி யறிந்த இந்திரன் பதுமன்-பஞ்சாயுதன்
முதலானோர் பதைபதைத்து நாற்பக்கத்திலும் ஓடத்தலைப்பட்ட
னர். பெருமான் கணங்கள் கணக்கில்லாத தேவர் முனிவர் முதலானோ
ரை யடித்து, இந்திரன் பிரமன் முதலிய இமையவர்களையுஞ் சந்திர
சூரியரையும் பற்றிக் கொணர்ந்து முன்னிறுத்தி, அவர்களைத் தமது
திருவுள்ளத்திற் கிசைந்தவண்ணந் தண்டஞ்செய்து, கையிலேந்திய
சூலாஸ்திரத்தைப் பிரயோகித்து அந்த யாகத்தை யழித்தனர். சந்
[illegible]. சாலவுஞ் சினந்து சமர்க்கோலமுற்றெதிர்வர, அவனை அ
கோராஸ்திர மொன்றினால் வதஞ் செய்தனர். முனிவர் வெருண்
டனர். இறந்த இமையவர் மனைவிமார் "எம்பிரானே சரணம்;

எங்கட்கு மாங்கல்யப் பிச்சை யருள்க" எனப் பிரார்த்தித்தனர். பெருமான் கருணைகூர்ந்து திருவுள்ள மிரங்கினர். அதனால், அவர்கள் அவ்வாறே உயிர்ப்பெய்திச் சாஷ்டாங்கமாகப் பணிந்து தத்தம் பதவி சார்ந்து வாழ்ந்தனர். ஏனைய தேவர்களையும் செல்லவிடுத்து தமது சேனைவெள்ளத்துடன் திருக்கயிலையை யடைந்து சிவபிரானிடம்விண்ணப்பித்து வீற்றிருந்தனர்.

அகோராஸ்த்ரமொன்றினாற் சத்ததந்துவைச்சங்கரித்து அவன்மகத்தையு மாய்த்தமையால், பெருமான் அகோராஸ்த்ரமூர்த்தி யெனப் பெயரடைந்தனர்.

"தக்கனைப்போ லோர்வேள்வி தான்செய்யத் தேவரெல்லா
மிக்கவவி யுண்ணவந்த வேலையின்கண்—அக்கணமே
விண்டலமே தேராக மேதினியே வண்டிலெனக்
கொண்டிழுக்கும் வாயு குரகதமாய்—மண்டும்
அனலே சிலையாக வம்புலியே நாணாப்
புனலே யடுசரமாப் பூட்டி—சினவடிவேல்
சேனைதி பதிதானே தேர்கடவிச் செல்லவெதிர்
வானோர்கள் கண்டு மருண்டோட—வானாத
இந்திரனை மாலயனை யீராறு சூரியனைச்
சந்திரனை மாதவனைத் தாக்கியே—வெந்திறல்சேர்
அந்த மகமு மடர்ந்து வருஞ்சத்த
தந்துவையு மாய்த்த தகைபோற்றி"—என்றார் பிறரும்.

அகோராஸ்த்ரமூர்த்தயேநம:

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

## நாற்பத்துநான்காவது

# தக்ஷயஜ்ஞஹதமூர்த்தி.



சகலலோகங்களையும் பெற்ற தாயாகிய சங்கரியார் ஓர்லீலா
...த்திரையாய் தக்கன்புதல்வியாகத் திருவவதாரஞ்செய்தனர். சிவ
...ருமான் தேவியாரை மணந்து மறைந்தருள, அன்னையார் பண்டு
...ாலத் தவச்செயலிலிருந்து இறைவரால் வெள்ளியங்கிரியுற்று வீற்
...ருந்தனர். *அதனை அவ்வம்மையாரது தோழியரிற்சிலர் சொல்லக்
...ட்ட தக்கன் மிக்க கோபமுற்று விடையூர்தியை மதியாதிருந்த
...ன்.அமரர் அஃதறிந்து "நக்கனைமதியாத தக்கன் தனது தலையை
...த்தல் சரதம்; அவன் பணித்த வகையி லொழுகும் பண்ணவரா
... யாமும் அவனுட னழியவரும்" என்று ஒருங்குகூடித் தக்கமா
...ையைச் சார்ந்து, அவனுக்குத் தக்க புத்திமதிகளை யறைய, அவன்
...ுனல் அதற்கென் செய்வது?"என, தேவர்கள் "திருக்கயிலையை
...டைந்து சிவபிரானையுந் தேவியாரையுஞ் சேவித்துவருக" என,
...ு னதற் கிணங்கி, அவ் வந்தரத்தவரை அங்கேயே நிறுத்திவிட்டு
...ள்ளிமலையையடைந்து முன்வாயிலிற்புகக்கண்டகணநாதர் சிலர்
...ண்ணுதலை மதியாத கடையோனே! உள் செல்லா தொழி"
...று கடிந்து தடுத்தனர். தக்ஷன் அதனால் வருந்தித் தக்ஷணம்
...ரும்பித் தனது நகரமடைந்து தன்னைச் சங்கரன்பா லனுப்பிய உம்
...க்கு அங்குற்ற விசேஷத்தையுரைத்து, "இமையவரே! இன்றைய
...ல் நரனை மதியாதிருங்கள்" என, எல்லோரு மியைய,அந்தரத்
...ரைத் தமது விருப்பின்படி யேக விடையளித்து விடுத்தனன்.

---

* விஸ்தாரம் கௌரீலீலாசமன்விதத்தின்கீழ் கண்டுகொள்க.

பிரமன் ஓர் வேள்விசெய்ப வுத்தேசித்து தன் னேவல்செய்யுந் தனயனை நோக்கி, திருமால் முதலிய தேவர்களை அழைத்துக் கொண்டுவரும்படி யனுப்பி, தக்கன் முன் சாற்றியது சிந்தித்துத் தானிறக்கினு மிறக்கவென்று திடங்கொண்டு, திருக்கயிலையங்கிரியையடைந்து, திருநந்திதேவர் விடைபெற்றுத் திருச்சந்நிதானத்தினுட் சென்று சிவபெருமானைத் தரிசித்துப் பணிந்து இருகரமுங் குவித்து "எம்பெருமானே! யான் செய்யும் யாகத்திற்குத் தேவரீர் எழுந்தருளவேண்டும்" என்று விண்ணப்பிக்க, நம்பர் "நம் முருவாம் நந்தியை விடுப்போம்" என்றருள, பதுமன் பணிந்து சென்று, தக்கனுக்குஞ் சொல்லித் தனது மனோவதிநகரமடைந்து, யாகஞ்செய்யத்தொடங்கினன். திருமால் முதலிய தேவர்கள் தக்கனுடன் யாகசாலை சார்ந்தனர். திருநந்திதேவர் சிவாஜ்ஞையின்படி நூறுகோடி பூதர்கள் புடைசூழ யாகசாலையை யெய்தினர். பிரமன் பார்த்தெழுந்து நமஸ்கரித்து ஆதனத்தமர்த்தினன். தக்கன் அதுகண்டு யாரழைத்தனரென்று கருதி அம்சவாகனனை நோக்கி "நீ யாகஞ்செய்வதைச் சிவனுக்குச் செப்பினை; அவனு லனுப்பிய நந்தியைப் பணிந்து நம்முன்னிருத்தினை; பிதா வாதலின் உன்னை வெட்டாது விடுத்தேன்; பித்தனாகிய சிவன் அவிர்ப்பாகங் கொள்ளுதற்குரியனோ? இதுகாறும் அறியார்கள் செய்துவந்த வழக்கத்தை விலக்குக. விஷ்ணுவே உயர்ந்தவர். அவருக்கு அவியைமுன்னே அளித்து, பிறகு ஏனையோருக் குதவுக" எனக் கூறினன். திருநந்திதேவர் சீற்றங்கொண்டு தக்கன் முகத்தைப்பார்த்து "மூடா! பரமபதியைநிந்தித்தாய்; ஈசனையன்றி யாகஞ்செய்வோர் தலையறுக" என்றும், "எம்மிறைவனை யிகழ்ந்த உனது தலையொழிக; சிவநிந்தைசெய்யும் நின்னோடு சேர்ந்த தேவர்கள் தீயோனாகிய சூரபன்மனால் துன்புறுக" என்று சாபமிட்டு, அவ்விடம்விட்டுப் பூதகணங்களுடன், மாதுபாகனாகிய ஆதிநாதனிடம் வெள்ளிமலை சென்று விண்ணப்பித்து வீற்றிருந்தனர். நந்தியெம்பெருமான் நவின்ற சாபத்திற் கஞ்சி, யாவரும் யாகஞ்செய்யா தொழிந்தனர்.

அவ்வாறிருக்கையில், தக்கன் ஓர்யாகஞ்செய்ய நினைத்து விச்சுகர்மனால், கங்கைக்கரையில் ஆயிரங்கோடியோசனை யகலமும் அழகுமான ஓர் யாகசாலை நிருமிக்கச்செய்து, சில தூதர்களைக்கொண்டு "பெருமானை நீங்கிய தேவர்களையெல்லாம் அழைத்துவாரும்" என அனுப்ப, அவர்கள் கூற, அமரர்கள் யாவரும் ஆண்டடைந்தனர். திருமால் - திசைமுகன் - தேவேந்திரன் முதலிய யாவரும் அங்கிருக்கையில், சார்ங்கனைச்செயித்துள்ள ததீசிமுநிவர் வந்தார். அவரது வருகையைக் கண்ட தக்கன் தனக்கஞ்சி வந்தனவொகருதி, "மாதவரே! வருக" என்று ஓர் ஆதனமளித் தமர்த்தினர். முநிவர் "என்னை யழைத்ததென்னகாரணம்?" என, தாக்ஷாயிணியைச் சங்கரன் வதுவைசெய்தபின் நிகழ்ந்தன கூறி, "என்னை யவமதித்த ஈசனுக்கு அளிக்கும் அவிர்ப்பாகத்தை மாற்ற ஓர் யாகம் செய்யவேண்டுமாதலின், உம்மை யழைத்தோம்" என உரைப்ப, ததீசிமுநிவர் "சங்கரனே ஜகதீசன். அவ்வெம்பெருமானை விரோதித்து யாகஞ்செய்யேல்" என, தக்கன் பலவகையாக வினவி ஆக்ஷேபிக்க,* முநிவர் அவ்வினாக்கட் கேற்ப விடைகூறினர். அரிவைக்குத் தேகசரீரமளித்த அரனே அனைவர்க்கு முயர்ந்த கடவுளாயிருக்கிலிருக்க: அவனுக்கு யான் அவிர்ப்பாகங் கொடேன். ஒன்றுமாயாமற் போக." என, ததீசிமுநிவர் கடுங்கோபங் கொண்டு இறைவனையின்றி யியற்றும் யாகம் இமைப்பி லொழியக்கடவது. நின் தலையறக்கடவது. உன்னோடிருக்கும் உம்பர் உயிர்ஒழியக்கடவர்" என்றுசபித்து, "முநிவர்களே! உங்கள்குலத்தினியற்கைவிலகி, ... னையும் அடியாரையும் விபூதி உருத்திராக்கத்தையும் ஒழித்து ... ட்சமடையாமற்பிறந்துபிறந்திறக்கக்கடவீர்" என்று சாபமிட்டு, முநிவர் புடைசூழ்ந்துவரத் தம திருக்கை சார்ந்து சிவத்தியானத்திருந்தனர். அதன்பிறகு, தக்கன் அந்தணருக் கன்னமிட்டு ஆடை

* இதன் விபரம் விரிவு கருதி விடுத்தாம். கந்தபுராணம் ததீசி உத்தரப்படலத்திற் கண்டுகொள்க.

பொன் முதலியன அபரிமிதமாக வளித்து யாகத்தை ஆரம்பித்த னன்.

அதனையறிந்த நாரதமுநிவர் திருக்கயிலைமலையை யடைந்து சிவபிரானைப் பணிந்துநிற்க, பரமன் "உலகத்தி லென்ன விசேடம் பகர்க" என, முநிவர் "சங்கரா! தக்கன் பல தேவருடன் யாகஞ் செய்கின்றனன்" என விண்ணப்பித்தனர். உமாதேவியார் உடனே எழுந்து உம்பர்நாதனைப் பணிந்து "எம்பெருமானே! எந்தை யியற்றும் வேள்வியைக் காண வேட்கையுற்றேன்" என, விமலர் விடையளித் தனுப்ப, ஓர் விமானமேறிச் சிலசேடியருடன் பிதாவின்பாற் செல்ல, தக்கன்கண்டு சற்றும் உபசாரம் செய்யாம லிகழ்ந்து "இப்போதே போக" என்று ஈசனையும் நிந்தித்தனன். கௌரி கடுங்கோபங்கொண்டு கயிலையங்கிரியை யடைந்து கருணாமூர்த்தியைப் பணிந்து "தக்கன் யாகத்தை யழித்தருளவேண்டும்" என்று விளம்பினர். முன்னோன் அதனை முடிக்கமுன்னியவளவில், நிமலரது நெற்றி விழியினின்றும் ஆயிரந்திருமுகங்களும் இரண்டாயிரந் திருக்கரங்களுங் கொண்டு வீரபத்திரர் திருவவதாரஞ்செய்தனர். அப்பொழுது அம்மையாரது அளவில்லாச் சினத்தால் ஓராயிரஞ் சிரமும், ஈராயிரங் கரமுங் கொண்டு உக்கிரமாகாளியுதித்து வீரபத்திரர்பக்கலிற் றேவியாய் வீற்றிருந்தனள்.

வீரபத்திரர் விரைவுடன் சிவபிரானையுந்தேவியையும்பணிந்து "அடியேனுக்கு யாது கட்டளை" என்றறைய, நம்பர் "நம்மை மதியாத தக்கன் யாகசாலைக்குப்போய் அவிர்ப்பாகங் கேள்; கொடுத்தாற் பெற்று வா; தடுத்தால் அவன் தலையை யறுத்து ஆண்டுள்ளோர் ஆவியை யகற்றி அவ் யாகத்தை யழித்துவிடு; யாமும் வருவோம்" என ஆஜ்ஞாபிக்க, வீரபத்திரர் விடைபெற்று, தமது திருமேனியில்தோன்றிய பூதப்படையும் காளியும் உடன்வர, உலகமதிரவும், சுவாசத்தாற் கடல்கள் நிலைகலங்கவும், பேரிரைச்சலால் திக்குகள் செவிடுபடவும், சுமையாற்றாது ஆதிசேடன் முடி குலுங்கவும்,

டயா லெழுந்த தூளி சத்தசமுத்திரங்களையுந் தூர்த்துச் சூரிய
ஒளியை மறைக்கவும், தக்கன் யாகசாலையை யடைந்து பூதச்சே
னையை அதன் வாயிலிலும் மதிற்புறத்திலும் காவலாக நிறுவி, காளி
டன் யாகசாலையுட் பிரவேசித்து, யாகஞ்செய்வது கண்டு, நெருப்பு
பொறி பறக்க விழித்து, இடிபோற் கர்ச்சித்து, வெற்றிபொருந்திய
துகொம்பினை நாதஞ்செய்தனர். அவ் வோசையால் ஆண்டுள்
ளார் செவிடுற்று, அவரது சொரூபக்காட்சியாற் கண்கலக்கங்கொ
ண்டு மூர்ச்சித்து விழுந்தனர்.

தக்கன் வீரபத்திரக்கடவுளைப்பார்த்து "இங்கு வந்த காரண
மென்ன?" என, வீரபத்திரர் "சங்கரனனுப்ப இங்ஙனம் வந்தனன்;
ன்றேன் அவிர்ப்பாகத்தை யென்முன் னளிக்க" என, ஆவிவழ
கிற்கும் தக்கன் "அவிவழங்கேன்" என்றனன். அதுகேட்ட
னைல் ஆண்டுள்ள அமரரை நோக்கி "உம்பர்காள்! உங்கள் சம்
ம் யாது?" என வினவ, அவர்கள் ஊமைகள்போல ஒன்றுமுரை
திருந்தனர். உடனே உக்கிரமூர்த்தி உலகம் நடுங்க நகைத்துத்
டாயுதத்தாற் சாரங்களை படித்தனர். மாதவன் அதனால் மரணோ
வைக்குச் சமானமாக மதிமயங்கி வீழ்ந்தனன். பிரமனைத் தலை
ங்கும்படி குட்டினர். அவனும் அவனிமேல் அவசமாயினன்.
திரன் கண்டு ஜோலென் றெழுந்தோட அவனுடல் தேயும்படி
ரினாலே தேய்த்தனர். தேவர்கள் பலரையுந் துன்புறுத்தினர்.

வீரபத்திரரேவலால் வெளியேநின்ற பூதகணங்கள் அவ்வெம்
ரனது கட்டளை யேற்று, மதிலையிடித்துக்கொண்டு, போனெனப்
லக் களிப்புற்று, சூரியவொளியும் பின்னிடச் சிரித்து, யாகசாலை
தீமூட்டி, யூபஸ்தம்பங்களை யொடித்து, சிலதேவர்களைத் தின்று,
முனிவர்களை மென்று, அமரர் சிலரை அண்டமுகடு சேரப் பந்
த்து, அட்டதிசைகளிற் செல்ல அனேகரை வீசி, சத்தமேகங்களை
பிழிந்து தாகந் தணித்து, தம்பங்களிற் கட்டிய யாகப்பசுக்களைக்
டவிழ்த்துவிட்டு, இயக்கர் - கின்னரர் முதலானோர் நா-மூக்கு-விழி

கரம்-சிரம் - முழந்தாள் முதலியவற்றைச் சேதித்துப் பல கொடு
தொழில் புரிந்தனர். இதுகண்ட யஜ்ஞன் இனியாவதில்லை யென்று
கலையுருக்கொண்டு காலாற் கல்போற் படரக்கண்ட வீரபத்திர
அக் கலையின் கொம்பை முரித்து அம்பொன்றினுல் ஆருயிர்மாய்த்த
னர். பூதர் " நாத ! அச்சுதன் ஒருவனே எமைத்தடுக்கின்றனன்"
என, சிங்கவேறுபோன்ற வீரபத்திரர் " எங்குளான், எங்குளான்"
என்று சென்று, மங்குல்போல் வடிவமைந்த மாயனைக் கண்டு, "
டியோய்! கொடியோய்! கொன்றை வேணியன் குரைகழல்மீ
ஆயிரங்கமலத்தால் அருச்சனை புரிகையில், அன்னதிலொன்றின
ஐயன் மறைப்ப, அம்பகமிடந்தப்பி அன்னவனருளாற் சுதரிசன
பெற்றதை எதனுல் மறந்தனை ? யாகபுருஷனுகிய நீ தக்கனைக் க
துச் செருச்செய்வையோ ? உயிரிழப்பையோ ? உரைக்க" என
தாமோதரன் " தக்கனைக் காப்பேன். சமர்செய்க" என்று கருட
பேரிலேறினன். அழற்கண் வந்த அண்ணல் அதுகண்டு அண்டமு
ளகையும் அப்பாலுள்ள அண்டமும் மேருமலையும் சக்ரவாளகிரி
வெடிபடவும், எண்டிசையுஞ் செவிடுபடவும், மேகவண்ணனுக்கு
ரிடிபோல் தோன்றவும், கையிலிருந்த வெற்றிச்சங்கத்தை வாய்வ
த்தூதிப் போர் தொடங்கினர். இருவரும் பெருஞ்சமர்செய்தன
கடைசியிற் சருடன் சிறகுகளை வெட்டி, கையிற்பிடித்த வில்
முரித்து, ஏனைய ஆயுதங்களையும் இமைப்பிற் சங்கரித்து, மாய
மூர்ச்சைப்படுத்திப் பூமியில் விழச்செய்தனர். மூர்ச்சை தெளிந்
மூந்த முகுந்தன் கையிலிருந்த சக்கிரத்தைச் செலுத்த, ஐய
அதனைப்பற்றி அயின்றனன். விண்டு வாள்கொண்டு முன்வர, உ
ரமூர்த்தி உங்காரஞ் செய்தனர். திருமால் சித்தங்கலங்கிச் சித்தி
போற் செய்வ தொன்று மில்லாது நிலமிசை வீழ்ந்து கிடந்த
[அவர் இச் சமரில் ஏனைய தேவர்கள் தண்டிக்கப்பட்டாற் பே
தனது உயிரையும் போக்கினதாக வடநூற் பிரமாணங்களால் 
ங்குகின்றது. அவற்றுட் சிலவற்றை யீண்டு தெகரித்திருக்கின்றேன்

சிவபெருமான் உமாதேவியாருடன் இடபாரூடராய் ஆண்டு காட்சி யளித்தனர். வீரபத்திரமூர்த்தியும் காளிகாதேவியும் அவ் விருவ முன்சென்று பணிந்தனர். உலகமாதாவாகிய உமாபிராட்டியார் அ யாகசாலை முற்றும் தேவர்-அரம்பையர்-முநிவர்-முநிமாதர் - தக்ஷவ சுத்தர்முதலானார து பிரேதங்கள்வீழ்ந்துகிடக்கக்கண்டு மனம்பொரு து" எம்பெருமானே! இவர்கள் யாவரும் இவ் வேழைமையன் பொரு ட்டிறந்தோ ராதலின், இவர்களை யெழுப்பியருளவேண்டும்" எனப் பிரார்த்திக்க, கருணாமூர்த்தி களிகூர்ந்தவராய் வீரபத்திரராலே அவர்களை யெழுப்பி உயிர்ந்தருளினர். இமைப்பி லுயிர்பெற்ற இந் ைகேள்வன்-எண்கண்ணன்-இமையவர்-இருடியர்-யாவரும் இமய ல்லியாருடன் இடபாரூடராய் ஆகாயத்திற் சேவைதந்த ஜகதீசன திருவடிகளை நிலமிசைப் பலமுறை வீழ்ந்து பணிந்து பரவிப்பயந்த நிற்க, பரமகாருண்யமூர்த்தி " அஞ்சாதீர்கள் " என்று திருவாய்ம ர்ந்தருளித் தேற்றினர். பதுமன் தன் தனய னாகிய தக்கனைக் கா து பதைத்து, பகவானைப் பணிந்து "கொடியோனாகிய தக்ஷனையு எழுப்பிக் கொடுக்கவேண்டும்" என்றிரப்ப, சிவ கடாக்ஷத்தினா வீரபத்திரர் தக்கன் சரீரத்தின்மேல் ஆட்டுத் தலையை யமைத்து "எழுக" என, அவனும் எழுந்து உளம் நாணி அச்சமுற்று விமலன நமஸ்கரிக்க "வெருவேல்" என்று அருள்செய்து, விடையூர்தி வீ பத்திரருடன் வெள்ளிமலையடைந்து அவருக்கோ ருலகளித்து வி த்தனர். பிறகு தக்ஷன் பிரமன் சாற்றிய புத்திமதியைக் கேட்டு சிவார்ச்சனைசெய்து சிவகணங்கட்குத் தலைவனாயினன்.

சிவபிரானைப் பகைத்துச் செய்த தக்ஷயாகத்தைச் சங்கரிக் எழுந்தருளிய மூர்த்தமாதலின் தக்ஷயஜ்ஞஹதமூர்த்தமெனப்படு

ஏததேவஸம்யோகாத்ரு காஹவாஸ-ஞர்யஸ்ய இத்யாதிதநுரா நி: - விஷ்வெரத்யோவிஷ்ணோ: ஶிர:ப்ரதிபிரத்யது-தநுமபபா யஜ்ஞொமுகஸ்தஸ்மை:ஸச்சிரொ யத்ப்ரவக்ய: - வாஜஸநேயதநு த்ரி:ப்ரக்ருத்யாமநாதி-விஷ்ணோ:ஶிர:ப்ரதிஷ்டிதம்.—ஸ்ருதிக

## லிங்க புராணம்.

*பபாதசதநாபூமௌவிஸம்ஜ்ஞ: புருஷோத்தம: - புநருத்தாய ஹரம்ஜ்ஞம்சக்ரமுத்யம்யஸப்ரபு: - வ்யஸ்ருஜம்பததீநாத்மாகஸொமெண வஹ்நம்ஸிச: - உதிஷ்ட்டெஜ்ஜம்கிதஸ்தேநபாஷாண இவநிஸ்சல: - பிஞ்சகர்ஷிதஸ்தேநத்விதாபூத்வைப்ரபோர்தநு: - ஸார்ங்கோ ப்ரஸாகாசசசிச்செதஸஹி:ப்ரபு:-தத்க்ஷணாதபதத்பூம்யாம்ஸிரஸ் ஸ்யதாநதலெ - வாயுநாப்ரெரிதம் சைவக்ராணஜெநபிநாகிநா - ப்ர ஸாஜக்ஷணாத்தவதநாஸ்யாஹவநீயகெ - ஸார்ங்ககோடிப்ரஸம்கா சேஸவஸ்யமஹாத்மந: - ஸிரஸ்சிச்செதயாமாஸவீரபத்ரோமஹா பா.—யஜ்ஞஸ்யஸிரஸஸ்சேத்தாபூஷ்ணோதம்தவிநாஸக:*

*ஜடாதரம்ஹரிர்த்ருஷ்ட்வாக்ரோதாதாரக்தலோசனம்-தஸ்மாத் ஸாதபக்ரம்யருத்ஜெநாதாம்தர்ஹிதஸ்திதி:.* வாமநபுராணம்.

## ஸாந்திபர்வம்.

*நசைவாகல்பயத்பாகம்தக்ஷோருத்ரஸ்யபாரத - ததஸ்ஸதேவீ சநாத்தக்ஷயஜ்ஞமபாத்ரவத் - ஸஸர்ஜஸூலம்க்ரோதெநப்ரஜ்வலந் தம்முஹுர்முஹு:- தச்சூலம்பஸ்மஸாத்க்ருத்வாதக்ஷயஜ்ஞம்ஸவிஸ் தரம்-ஆவயோஸ்ஸஹஸங்கச்சம்பதர்யாஸ்ரமமம்திகாத்-வேகநமஹதா ராத்தாபதத்நாராயணோரஸி - ததஸ்தத்தேஜஸாப்ருஷ்டா:கேஸாநா யணஸ்ச - பபூவுர்முஞ்ஜவர்ணாஸ்துததோஹம்முஞ்ஜகேஸவாந் - அ யப்ரப்ருதிஸ்ரீவத்ஸ:ஸூலாங்கோமேபவத்யயம்.*

*சரோணாத்தம்துவக்த்ரோண ஸவிராட்பரபூருஷம் - ம்ருகரூபே தாவம்தம்விஸிரஸ்கம்ததாகரோத்.*—வாயுஸம்ஹிதை.

ఏతదేవసంయోగాద్రు గాహ వాసూర్యస్యఇత్యాదిధనురాత్నిః । వి ష్ణుర్దన్వవిష్ణోః శిరః ప్రతిభింద్యతు । తతుమంపపాత । యజ్ఞోముఖస్తస్మైన ప్రాంయత్ప్రిపగద్యః । వాజసనేయంధనురాత్నిః ప్రకృత్యామనంతి । విష్ణోః ప్రతిషింధితం ।—శ్రుతి ।

లింగపురాణము.

పపాతచతథాభూమౌవిసంజ్ఞఃపురుషోత్తమః। పునరుత్థాయతంప
తుంచక్రముద్యమ్యసప్రభుః। వ్యష్టంభయదదీనాత్మాకరేణైవస్తనంశిశుః
ఉతిష్ఠైర్ఘుంకితస్తేనపాషాణఇవనిశ్చలః। త్రిభిశ్చఘుషితస్తే నద్విధాభు
ద్వైపరిభోర్ధనుః। శార్ఙ్గకోటిపరిసంగాచ్చ చిచ్ఛేదసశిరఃప్రభుః। తత
ణాదపతద్భూమ్యాంశిరస్తస్యధరాతలే। వాయునాప్రేరితంచైవఘూర్ణ
నపినాకినా। ప్రవిశేశతుణాదేవతదాహ్యాహవనీయకే। శాజ్ఞాకోటిప్ర
గాచ్ఛకేశవస్యమహాత్మనః। శిరశ్చచ్ఛేదయామాస వీరభద్రోమహాబలః
యజ్ఞస్యశిరసశ్ఛిత్వాపూష్ణోదంతపినాశకః॥

జటాధరంహరిర్దృష్ట్వాక్రోధాదారక్తలోచనం। తస్మాద్దేశాదప
వ్యకుబ్జాధాంతహితస్థితః॥ వామనపురాణం॥

శాంతిపర్వము.

నచైవాకల్పయద్భాగందక్షోరుద్రస్యభారత। తతస్సదేవీవచనాద్ద
యజ్ఞమపాద్రవత్। ససర్జశూలంక్రోధేనప్రజ్వలంతంముహుర్ముహుః
తచ్ఛూలంభస్మసాత్కృత్వాదక్షయజ్ఞంసవిస్తరం। ఆవయోస్సహసం
చ్ఛేబదర్యాశ్రమమంతికాత్। వేగనమహతాపార్థాపతన్నారాయణో
పిచ। తతస్తత్తేజసాప్లుష్టాఃకేశానారాయణస్యచ। బభూవుర్ముంజవర్ణాస్
తతోహంముంజకేశవాన్। అద్యప్రభృతిశ్రీవత్సఃశూలాంకోమేభవత్వయం

శరేణాధేనుమవక్త్రైణసవిరాట్పురపూరుషం। మృగరూపేణధ
వంతం విశిరస్కంతథాకరోత్॥ వాయవీయసంహిత॥

*பல தேவர்களுக் கெய்திய தண்டங்கட்கு மேற்கோள் வேண்
வோர் கூர்மபுராணம் - ஸ்காந்தபுராணம் - இலிங்கபுராணம் - வா
சங்கிதை - காசிகண்ட முதலிய நூல்களிற் கண்டுகொள்க. விரிப்பி
பெருகும். தக்ஷயஜ்ஞஹதமூர்த்தயேநம:*

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

## நாற்பத்தைந்தாவது.

# கிராதமூர்த்தி.



துவாபரயுகத்திலே பாண்டுபுத்திரர் சகுனியின் மாய்ச்சூதி
ல்நாடுநகரங்களைத் தமது ஞாதியாகிய துர்யோதனனுக்குத் தோற்
, மனைவியுடன்வனமடைந்து வாழ்ந்திருந்தனர். பிதாமகனாகியவே
வியாசமுநிவர் அங்கெழுந்தருளக்கண்டு பஞ்சவரும் பாஞ்சாலியும்
வரது பாததாமரையைப் பணிந்து தாம் படும்பாட்டின் குறைகூ
னர். முனிவர் அவர்கட்கு அநேக அரசநீதிகளையும், நளன் முதலிய
பராசர்களுங் காலவித்தியாசத்தினாற் கஷ்டப்பட்டனவெனப் பல
ர்வசரிதங்களையுங்கூறி, அவர்கள் மனத்தைத்திடப்படுத்தி, சிவபெ
மானை நோக்கித் திருக்கயிலாயகிரிச்சாரலிற் பெருந்தவஞ்செய்து
வரது அநுக்கிரகத்தை யடையுங்கள்" என்றருளிச்செய்து, தவ
யற்றுதற்கு முகூர்த்தமுங்கூறித் தமதிச்சையின்படி சென்றனர்.

அம்முநிபுங்கவர் ஆஜ்ஞாபித்தவண்ணம் அருச்சுனன் சடை
டியும் மரவுரியுந் தரித்து, அம்பறாத்தூணியும் வில்லுந் தோளிற்
ட்டி, வெள்ளிமலையின் மேற்புற மடைந்து, அது பர்வதராஜபுத்தி
யாராக உமையம்மையார் திருவவதாரஞ்செய்த புண்ணியக்ஷேத்தி
மென்று பணிந்தெழுந்து, முத்தீழல் வளர்க்கும் முநிவரர்பாதங்களை
டிமேற் கொண்டு, இயக்கர் விச்சாதரர் சாரணர் முதலானோரைக்
ண்டு, சிங்கம்-புலி-யானை-கரடி முதலிய மிருகங்கள் சஞ்சரிக்கும்
ரண்யத்தை யகன்று, எம்பெருமான் வீற்றிருக்கும் புண்ணியவடி
ாகிய மலையை நண்ணி, இதயதாமரையில் இறைவரை யிருத்தி,
வதசிவாகமங்களிற் கூறியவகையே திருவெண்ணீற்றினைத் தேக

முழுவதுஞ் சண்ணித்து, அக்கமாலை யணிந்து தவக்கோலங்கொண்டு தாளொன்றினால் நின்று, மற்றொரு காலை மடித்து நின்ற காலின் தொடையி லூன்றி, இருகரத்தையுஞ் சிரத்தின்மேற் சேர்த்துத் தூக்கி, இருவிழியிலும் இடையறாது நீர்த்தாரை யொழுக, மனத்தைப் புறஞ்செல்லா தொடுக்கி மஹாதேவனைச்சிந்தித்து அருந்தவத் தமர்ந்தனன்.

அவனது தந்தையாகிய இந்திரன் தன்தனயன் தனஞ்சயன் செய்யுந் தவத்தைச் சோதிக்கும்படி, அரம்பை ஊர்வசி முதலிய சில தேவதாசிகளையேவினன். அவர்கள் சதக்கிருதின் விருப்பின்படியே க்ஷணமொன்றில் ஆடையாபரணாலங்கிருதராகி, பரிமளமிகுந்த நறுமலர் சூடி, பற்குனன் தவஞ்செய்யும் பர்ணசாலையைநாடி, பலவகையிலும் தமதுகருத்துப் பக்குவப்படாமையா லோடி,பாகசாதனனைத் தேடி, நடந்த விருத்தாந்தங்கள் பயன்பெற்றிலவென் றுரையாடித் தமது பதியிற்கூடினர். மகபதி தனதுமைந்தனது சிந்தையின் வலிமைக்குக்களித்து, சடுதியிற் சென்று சவ்வியசாசியைக் கண்டு சந்தோஷித்து, சற்றுவசனித்து மனவிருப்ப மறிந்து "மங்கைபாகன் வருவார்; வரங்கள் பல தருவார்" என்று ஊக்கமுண்டாக்கித் தன் நகரிற்குச்சென்றனன்.

இஃதிவ்வாறிருக்க, சில சேடியரால் அருச்சுனன் செய்யும் அருந்தவத்தை யறிந்த அம்பிகை அரனிட மணுகி "அண்ணலே! அருந்தவமியற்றும் அருச்சுனனுக்கருள்புரியவேண்டும்" எனக் கூற, அரன் "தவமியற்று மிவனைக் கொல்லும்படி இவன்ஞாதி சுயோதனன் தனதுநண்பன் மூகாசுரனையேவினன்;அவனும் பன்றிவடிவாய் இவ்வசலமடைந்து சமயம் பார்த்துக்கொண்டிருக்கின்றனன்; ஆதலின் அவன் கிரீடியைக்கிட்டிக் கெடுதிபுரியுமுன், அத்தானவனை சங்கரிக்கவேண்டும்" என்று திருவாய்மலர்ந்தருளி, திருநந்திதேவரை விளித்து "நாம் பன்றிவேட்டையாடவேண்டுதலின், கணங்களும் நீயும் கணமொன்றில் அதற்கேற்ற உருக்கொள்க" என ஆ

...பித்து, தாமும் வேடவ வடிவு தாங்கினர். உமாதேவியாரும் அத
...கற்ப ஓர்வேடவெச்சிறுமியாகி, குமாரக்கடவுளைக் குழந்தையாக்கிக்
...க்கொண்டு பெருமான் பின்வந்தனர். வேதங்கள் நான்கும் வேட்
...நாய்க ளாயின. கணங்கள் வேடவராயின.

ஈசன் இவ்வகையாக யாவரையுங் கூட்டிக்கொண்டு வில்லேவ
...ந்து விரைந்துசெல்லுகையில், மூகாசுரன் பெருமுழக்கத்துடன் அ
...னனை எதிர்த்தோடினன். அகோர தவத்திருந்த சருகுபக்ஷணஞ்
...ப்யுஞ் சுவேதவாகனன் ஆர்ப்பரித்துவரும் பன்றியைப்பார்த்து,
...ருமேல தவநிலை யழியுமென் றஞ்சி, வில்லேவளைத்து நாணேற்றி
...பதிர மொன்றை அதன் முகத்தில் இலக்குவைத்து விடுத்தான்.
...டவுருக்கொண்டு சேனுவீரருடன் வராகத்தைத் துரத்திவந்த
...வர் வில்லோசை காட்டி அம்பொன்றை அதன் பின்புறம் எய்த
. அவ்விரண்டம்புகளும் பாய்ந்தன. மூகாசுரனுகிய ஏனம் நிலத்
...மேல் வீழ்ந்து மூர்ச்சைபாய் இறந்தது. வேடவவடிவுகொண்ட
...கணங்கள் தவஞ்செய்புந் தனஞ்சயனைச் சமீபித்து "தவசியே!
...வ னெய்த மிருகத்தைப் பிறனெருவ னெய்யலாமோ" எனப்
...ர்கொண்டனர்.

வேடவவுருக்கொண்ட சிவபிரானும், தவசியாயிருந்த தனஞ்
...னும், பல நியாயங்கள்பேசி ஒருவரோடொருவர் சபதஞ்செய்து
...ண்டு பெருஞ்சமர் செய்தனர். கடவுள் தனஞ்சயனது காண்டீ
...தின் நாணையறுத்தனர். அதனுல் அருச்சுனன் நாணமடைந்து
...வேடர்தலைவன் தலைமேல் நாணறுந்த வில்லாலடித்தான். அவர்
...வியாபியாதலின் அவ்வடி சுவர்க்க மத்திய பாதலமென்னுந் திரி
...கத்திலுள்ள தேவர் மாநுடர் முதலிய எல்லாருக்கும்பட்டது

" விண்ணிலுறைவானவரிலாரடிபடாதவர்
விரிஞ்சனரியேமுதலினோர்
மண்ணிலுறைமானவரிலாரடிபடாதவர்
மனுக்கண்முதலோர்களதலக்

கண்ணிலுறைநாகர்களிலாரடிபடாதவர்கள்
கட்செவிமகிபன்முதலோ
ரெண்ணில்பலயோனியிலும்யாவடிபடாதன
விருந்துழியிருந்துழியரோ.

வேதமடியுண்டனவிரிந்தபலவாகம
விதங்களடியுண்டனவொணம்
பூதமடியுண்டனவிநாழிகைமுதற்புகல்செய்
பொழுதொடுசெலிப்பில்பொருளின்
பேதமடியுண்டனபிறப்பிலியிறப்பிலி
பிறங்கலரசன்றன்மகளார்
நாதனமலன்சமரவேடவடிவங்கொடு
நரன்கையடியுண்டபொழுதே."

அருச்சுனனடித்த அடியால் வேடர்பதி வெகுளிகொண்டா
போலச் சிறிதுநேரம் மல்யுத்தஞ் செய்து மகவான் மைந்தனது வ
ன்மையை யறிந்தனர். அவன் அல்லற்படுவதை யகற்றும்படி தே
வர்களும் இந்திரனும் தோத்திரஞ் செய்தனர். கருணாமூர்த்தியாகிய
கண்ணுதல் உமாபிராட்டியாருடன் சகலதேவர்களும் புடைசூழக் கா
ட்சி யளித்தருளினர். பற்குனன் பலவகையாகப் பரமபதியைத் துதி
த்தனன். சிவபிரான் அவனைத்தேற்றி "மூகாசுரனால் உன்னுயிர்
போகாவண்ணம் வேடுவனாக வேடமுற்று வந்தேன். வேண்டிய வரம்
யாது" என வினவ, சவ்வியசாசி "சங்கரா! தேவரீர் பெயர்கொண்ட
அஸ்திரமொன்று திருவருள் செய்யவேண்டும்" என விண்ணப்பிக்க,
இறைவர் அவ்வாறே பாசுபதாஸ்திர மநுக்கிரகித்து "பாரதப்போரிற்
செயமுறுக" என ஆசீர்வதித்து அந்தர்த்தான மாயினர்.

அருச்சுனன் தவஞ்செய்கையில், அவனைக் கொல்லும்படி து
ர்யோதனனால் விடுத்த மூகாசுரனைச் சங்கரிக்க வேடுவ வடிவேற்றுச்
சென்றமையால், சிவபிரான் கிராதமூர்த்தியெனப் பெயரொய்தினர்.

கிராதமூர்த்தயேநம:

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

## நாற்பத்தாறுவது

# குருமூர்த்தி.

---

ஆளுடையவடிகளென்னும் சிறப்புப்பெயருற்ற மணிவாசகர் ...ண்டி நாட்டில் நீர்வள நிலவளமிகுந்த திருவாதவூரில் ஆமாத்திய ...தியர்குலத்தில், திருவவதாரஞ்செய்து தந்தையாரால் திருவாத ...ர் என்னும் பிள்ளைத்திருநாமம் பெற்றுவேதாகமமுதலிய கலைக ... தேர்ச்சியடைந் திருக்கையில், மதுரையில் அரசுபுரிந்துவரும் ...மர்த்தனபாண்டியன் இவரது பிரதாபத்தைக் கேள்வியுற்றுத் ...பால் வருவித்து ஆற்றலைநோக்கி அமைச்சுரிமையுந் தென்னவன் ...மராயன் என்னும் பட்டமுங் கொடுத்துச் சிறப்போடு வைத்திரு ...னன். அமைச்சர்பெருமான் இருமனப்பெண்டிர்போலும் அரச ...யத்துந் தொழிலும் ஆளுடையார் திருவடிக்கண்ணே அறிவுமாக ...ழுகிவருகையில், கீழ்க்கடற்றுறையிற் குதிரை கொள்ளும்படி ...ச னேவ, அளவற்ற பொருளோடுஞ் சென்றனர்.

பரிபக்குவமுற்ற ஆன்மாக்கட்குத் திருவருள்புரியும்ஆளுடை...ர் இவரது சத்திநிபாதத்து உத்தமத்தலைமைநிலைநோக்கி மாநுடத் ...ருவுருவேற்றுத் திருநந்தி முநிகணங்கள் மாணுக்கராய்ச் சூழ்ந் ...ர, திருப்பெருந்துறையிற் குருமூர்த்தங்கொண் டெழுந்தருளி ...தலைவர் வரவுநோக்கியிருந்தனர். இவர்சென்று அத்திருப்பதி ...ல்லை யடுக்க, அன்பும் ஆராமையும் தலைமீதூர, என்னுடையான் ...குற்றனரோ என்னுங் கருத்தோடு சென்று, ஆசிரியர் பெருந்த ...யைக் கருவிகளெல்லாங் கனிந்துருகக் கண்டு கைதொழுது ...ா குழற உடல் கரையப் பரவினர்; பாடினர்; ஆனந்தக்கூத்தா

டினர்; பரவசராய் அசைவற்றுச் சிறிதுபொழுது கையேற்றிருந்து, "எம்பெருமானே! இவ் வுடல் பொருள் ஆவி மூன்றனையுந் திருவுள்ளம்பற்றுக" என்று குறையிரந்த குணக்குன்றன்னவரை, எம்பெருமான் திருவருணோக் களித்து, அஸ்த மஸ்தக சையோகஞ் செய்து, அமையத் தடவித் திருவடிசூட்டி அன்பூட்டி அறிவின் மயமாக்கி ஐந்தெழுத்துண்மை யசைவற உபதேசித்தருளினர்; அதனால் அமைச்சர்பெருமானும் அமுதராயினர். ஆசிரியநாயகத் தருட்சந்நிதியில் அன்புருவப்பெருந்தகையார்அளவளாவி,அடியார்கூட்டத்திலாநந்தக்கடலின் மூழ்கி அழுதழு தலங்காரத் தமிழ்சூட, பத்திப்பிச்சைவேண்டும் பரமபதி பவளவாய் திறந்து, தமது அருமைத் திருவாக்கால் 'மாணிக்கவாசக! இங்கிருக்க' என்றனுக்கிரகித்துத் தம்மாணுக்கர் குழாத்துடன் அந்தர்த்தானமாயினர்.

சிவநேயமுற்ற மாணுக்கர்திலகராகிய மணிவாசகர் மனமுருகி வருந்திப் பிரிவாற்றாதவராய் உயிர்நீங்கக்கருதி, அஃதெம்பெருமான தென் றஞ்சிக் கட்டளை கடவாது, அங்கேயேயிருந்துகொண்டு, அவருடன் வந்த பரிசனங்களை நோக்கி "ஆடித்திங்களிற் புரவிகள் வருமென்று புரவலற்குக் கூறுக" எனப் பணித்தனுப்பி, தாம் கொண்டுவந்த அரிமர்த்தன னரும்பொருள் முழுதும் ஆண்டவருக்கும் அடியவருக்கு மமைந்த ஆலய முதலிய திருப்பணியில் விநியோகஞ் செய்திருந்தனர். பரிசனர் சொல்லக்கேட்ட அரசன் அவ்வாறு ஆடித்திங்க ளகன்றும் அஸ்வங்கள் வராமையால் அமைச்சர் வாழ்வுக்கோலைவிடுப்ப, அவரும் உடையார் சந்நிதியிற் சென்று அரசோலையறிவித்து நிற்க "ஆவணிமூலத்திற் பரித்திரள் வருமென்று ஓலைவிடுக்க" எனப் பெருமான் அசரீரியாய்க் கூறினர். ஸ்ரீமன்றுடையார் கட்டளைப்படி அவ்வாறே ஓர் திருமுகம் வரைந் தனுப்பினர். மணிவாசகர் துயில்கையில் எம்பெருமான் தோன்றி "புரவிகள் பின் வரும்; நீ முன்செல்க" எனப் பணித்தமையின், அமைச்சர் பெருமான் ஆளுடையார் சந்நிதியிற்பணிந்து விடைகொண்டு மதுரைை

டைந்து ஆலவாயுடையாரை வணங்கி, அரச னவைக்களத் தற்று கமலராச்செய்து, சோமசுந்தரரைப் பணிந்து இருக்கை யடைந்து ருவருநோக்கியிருந்தனர்.

பரிபக்குவமுற்றிருந்த மாணிக்கவாசகருக்கு ஞானோபதேசஞ் சய்தவர் சிவபிரானாதலால், அப்பெருமானுக்குக் குருமூர்த்தியென் தோர் பெயர் வழங்குகின்றது.

**கவனிப்பு**—குருமூர்த்தம்-அஸ்வாரூடம் என்னும் இரண்டு சரி திரங்களும், மாணிக்கவாசகர் சரிதமேயாதலாலும், அவை முறை ய ஒன்றன்பின் னொன்றாக அடுத்து வருவதாலும், அவர் பிரபாவ தை ஈண்டு முடித்திலேன். எஞ்சிய சரிதத்தை அடுத்துள்ள அஸ் ரூடத்திற்கண்டுகொள்க. இவ்வாறே அஸ்வாரூடத்தின் முற்பட்ட ரித்தை இக்குருமூர்த்தமெனவுங் கொள்க.

குருமூர்த்தயோகம:

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

## நாற்பத்தேழாவது

# அசுவாரூட மூர்த்தி.

மாளிகைசேர்ந்த மணிவாசகருக்குப் பந்துவர்க்கமும், நட்புமா யினோர் நானா வகையாக மதிகூறக் கருதி, அரசகாரியத்திற் சிறந்துள் ளாராயிருத்தலின், மன்னனுக் குறுதியும் உறவினருக் கூன்றுகோ லுமாக விருந்திலீரெனத் தமக்குத் தோன்றியவழியெல்லாஞ் சொல் லக்கேட்டு "எமக்கு யாதுவரினும்வருக. எம்பெருமானை மறவேன். ஊழாகிய தீவினை விளைந்தால் விலக்கற்பாலா ருளரோ?" எனக்கே ட்டகன்றனர். அரசன் அமைச்சர் நாயகரை வருவித்து "குதிரை கள்வந்திலவே" என, "இன்னும் மூன்றுதினத்தில் இவுளிகள்வரும்" எனப் புகல, அப்போதும் குதிரைக்கூட்டம் வராமை கண்டு கொற் றவன் சினந்து,தண்டலாளராற் பலவகையாகத் துன்புறுத்திச் சிறை யிருத்தினன். மணிவாசகர் தம துடலுயிர்கட் குரியராகிய பரமபதி யைப் பலவகைப் பாமாலைகளாற் றுதிசெய்ய, அடியார்பாடலுக் ககமகிழும் ஆநந்தக்கடலாகிய ஆலவாயுடையார் அவ ரிடுக்கண்களையத் திருவுள்ளங்கொண்டு, திருநந்திதேவர் முதலிய சிவகணத்தலைவர் களை விளித்து "பாண்டியனுக்குப் பரிமா செலுத்தவேண்டுதலின் வனத்திலுள்ள நரிகளைப் பற்றிவந்து பரிகளாக்கி அவற்றைநடத்து ஞ்சேவகராக நீங்க ளுருக்கொள்ள வேண்டும்" என்று கட்டளையிட, அவர்கள் அவ்வாறே சித்தப்படுத்திப் பலவகையாகிய ஆடைமுதலி யவற்றில் வேறுபாடற்ற சிறந்த வடிவேற்றனர்.

தொண்டர்களது துன்பங் களையுஞ் சோதி சுரூபியாகிய சிவ பிரான் தரு மார்த்த காம மோக்ஷ மென்னும் நாற்புருஷார்த்தங்



47 அஸ்வாரூட மூர்த்தி.

ள நான்கு கால்கள்' - ஞானகாண்ட கருமகாண்டங்களே இரு
செவிகள்-பர அபர வுணர்ச்சியே விழிகள் - விதிமுகம்-நிஷேதவால்-
திரங்கள் புறவணி-சப்தகோடி மந்திரங்கள் சதங்கைமாலை- சூரிய
சந்திரர் பாதம் வைக்குமிடங்கள்-தாரகப்பிரமமந்திரமே கடிவாளமா
கக்கொண்டு இவற்றைப் போன்ற பிற அங்கங்களு மமைந்த ஓர் சிற
ந்த புரவிமேலேறித் தாமே அவற்றிற் கிறைவராய் எழுந்தருளி வர,
பாண்டிமன்னன் பரிமா வரவறிந்து அவற்றின் சிறப்பையும் தலைவ
னது சிறப்பையும் அன்போடு கண்டு களித்து, பரிசு பல செய்தனு
ப்பி, பழய மந்துறையிற் கட்டப் பணித்தனன். அப்பரிகளும் பாதி
ராவில் பண்டைய நரியுருவேற்றுப் பல குதிரைகளை யூறு செய்து,
ஊர்த்திற் கேக, பூழியன் கேள்வியுற்று மனம் புழுங்கி ஆமாத்தி
யரா யழைத்துத் தண்டலாளர்வச மொப்புவித்து "அப்பண்டாரப்
பொருள்முழுதும் கொண்டுவிடுக" என, அவர்கள் ஐயரைச் சிறைப்
படுத்தி வைகைபாற்றிற் கடுங்கோடையில் வருத்தஞ்செய்ய, வஞ்ச
மில்லார், வள்ளலார் திருவடியில் மனஞ்செலுத்த, அருட்பெருங்
கடலாகிய அவ்வைகையைப்பெருகச்செய்ய,மதுரைமுற்றும் வெள்ளமாக
அரசனுணையால் மண்ணடைப்பாராயினர். மந்திரியார் ஆலயஞ்சே
ர்ந்தனர்.

அச்சமயத்து வந்தி யென்னும் மூதாட்டி தனக்கு விடுத்த
கரை அடைப்பின்றி வருந்த, பெருமான் கூலியாளாய்வந்து பிட்டு
ண்டு, கட்டுண்ட அயற்கரை யிடிய நீர்விடுத்துத் துயில்புரிவார்போ
லிருக்கக்கண்ட பாண்டியன் பிரம்பாலோச்ச *அஃது யாவர்மேலும்
பட்டுச்செய்து அடைப்பாரின்றி யுடைகரையாக்கி மறைந்து ஆகாய
வாணியால். "அமைச்சரைத் தேறுதி" எனக் கூறுவித்தருளினர்.
அவ்வந்தன் வெருண்டோடி ஐயரைக்கண்டு "வாதவூரரசே என்பிழை
பொறுத்து இத்திருவையெல்லாம் வேண்டியவாறு செய்தருள்க"

* சிவபெருமான் சர்வவியாபி யாதலின் அவரை அரிமர்த்த
னன் பிரம்பா லடித்தபொழுது அவ்வடி யாவர்க்கும் பட்டது.

என, ஐயர் "வழுதியர் கோவே! திருவருள்வழி நிற்க" என்று நிறு த்திப் புறப்பட்டுத் திருப்பெருந்துறை யடைந்து பதிகமோதித் துதி த்து, பல திருப்பதிகளையுஞ் சென்று பணிந்து, தில்லையைச்சேர்ந்து, ஈழத்தினின்று வந்த புத்தரைத் தில்லைவாழந்தணர் விருப்பின்படி வாதில் வென்று அவர்கட்குச் சிவசின்ன மளித்து, வளவர்மகளை வா ய்திறப்பித்து, திருவாசகமும் திருக்கோவையாரும் மன்றுடையாரே யெழுதிக் கைச்சாத்திட் டருளும்படி மணிவாய் மலர்ந்தருளினர். ஆமாத்தியகுலதீபத்தை அவ்வேதியர் நோக்கி "திருவாசகத்தில் திரு வுள்ளக்கிடை திருவருள் செய்யவேண்டும்" என்றிரப்ப, அடிகள் முறுவல்செய்து அவ்வந்தணரொடு பொன்னம்பலஞ்சேர்ந்து "இவ் வாசகப்பொருளாவார் இவரே" என்று திருவாய்மலர்ந்து திருச்சிற் றம்பல முடையானைக் குறியாது குறிப்பித்து, எம்பெருமானிடத் திரண்டறக்கலந்தனர்.

திருவிளையாடற்புராணம்.

"பாண்டியன் முதுகிற் பட்டது செழியன்
பன்னிய ருடம்பினிற் பட்ட
தாண்டகை யமைச்சர் மேனிமேற் பட்ட
தரசிளங் குமரர்மேற் பட்ட
தீண்டிய கழற்கால் வீரர்மேற் பட்ட
திவுளிமேற் பட்டது பருமம்
பூண்டவெங் கரிமேற் பட்டசெவ் வுயிர்க்கும்
போதன்மேற் பட்டவத் தழும்பு.

பரிதியு மதியும் பாம்புமைங் கோளும்
பன்னிறம் படைத்தநாண் மீனு
மிருநிலம் புனல்கா லெரிகடுங் கனல்வா
னென்னுமைம் பூதமுங் காருஞ்

சுருதியு மாறு சமயவா ணவருஞ்
    சுரர்களு முனிவருந் தொண்டின்
மருவிய முனிவர் கணங்களும் பட்ட
    மதுரைநா யகனடித் தழும்பு.

மானவர் மனிதர் நாகர்புள் விலங்கு
    மாசுணஞ் சிதலெறும் பாதி
யானபல்சரமு மலைமரங் கொடிபுல்
    லாதியா மசரமும் பட்ட
வூனடை கருவும் பட்டன தழும்போ
    டுதித்தன வுயிரிலோ வியமுந்
தானடி பட்ட சராசர சடங்க
    டமக்குயி ராயினோன் றழும்பு.

தன்னென மாயோன் விழித்தனன் கமலச்
    சோதியும் யாதென வியந்தாள்—"

சிவபெருமான், அரிமர்த்தனனது அளவில்லாப் பொருளைச் வபணிவிடையிற் செலவுசெய்த மணிவாசகர் நிமித்தமாய் நரிகளைப் ரிகளாக்கித் தாமே பரித்தலைவராய்ச் சென்று புரவிகள் ஒப்புவித் மையால் அஸ்வாரூடமூர்த்தியென்பதோர் திருநாமமெய்தினர்.

அஸ்வாரூடமூர்த்தயேநம:

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# நாற்பத்தெட்டாவது

# கஜாந்திகமூர்த்தி.



சொல்லுதற்கரிய வலியமைந்த சூரபன்மனது தொந்தரவைச்
சகியாத **இந்திரன்** தன்மனைவியுடன்மறைந்து சீகாழிப்பதியிற்சிவா
ர்ச்சனைசெய்து காலங்கழித்திருந்தனன். அதுகாலத்தில், அமரர் சில
ஆகண்டலனைக் கண்டு "அரசே! அசுரர் துயரம் ஆற்றகில்லோம்"
எனக் கூற, வச்சிராயுதன் "வானவர்களே! மகாதேவனை வழுத்தி
அத்துயர் தீர வெள்ளிமலை யடைவோம்" என்று இந்திராணியை
**அரிகரபுத்திரர்** காவலில் விடுத்து, தேவர் குழுவுடன் திருக்கயிலை
யடைந்து திருச்சந்நிதானத்தினுட் செல்ல, திருநந்திதேவரை உத்
தரமுதவும்படி யிரந்தனர். அதுசமயம் ஜநகனாதியர்க்குச் சங்கர
ஞானோபதேசஞ் செய்துகொண்டிருத்தலின், நந்தியெம்பெருமான்
நாகாபரணர் கட்டளைப்படி தடுக்க, அத் திருவாயிலிலேயே அநே
நாள் அமர்ந்திருந்தனர்.

அக்காலத்திற் கொடுங்கோல்செய்துவந்தசூரபன்மன் தங்கை
யும், வாலிபரை வலிதிற் புணர்பவளுமாகிய **அசமுகி** யென்பாள்
துன்முகியுடன் சீகாழித்தலத்தைச் சேர்ந்து, ஆங்குப் பொற்கொடி
போல விளங்கும் புலோமசையைக் கண்டு தன் முன்னோனைச் சே
ர்ந்து வாழும்படி யழைக்க, சசி தடுக்க, வன்மையுடன் கையாற்பற்றி
அவளலறும்படி இழுத்துக்கொண்டு சென்றாள். ஐயனார் ஏவலா
ராகிய வீரமாகாளர் விரைந்துசென்று "செல்லாதே" என்று த
க்க, அசமுகி ஓர் சூலத்தைச் சுழற்றி விட்டனள். அதனை வீரமாகா
ளர் வாளால் வெட்டி மாய்த்தனர். அசமுகி துண்ணென்று துன்மு



48 கஜாங்திக மூர்த்தி.

கயிலிருந்த சூலத்தை வாங்கிக்கொண்டு, அவள்கையில் அயிராணி யயளித்து வீரமாகாளர்மேல் அச் சூலத்தை விட, அவர் அதையு டைத்தனர். அரக்கி மலையொன்றைப் பலங்கொண் டெறிந்தாள். அவர் அதனையும் வாள்கொண்டுமாய்த்தனர். மேஷ முகமுள்ளவள் மலொன்றுஞ் செய்யமாட்டாதவளாய், துன்முகி கையிலிருந்த இந் ராணியைத் தனக்குறத் தூக்கிக்கொண்டு விண்வழிவேகமாய்ச் சல்ல, வீரமாகாளர் வெகுண்டு அவள் அளகத்தைப் பிடித்துக் காண்டு உடைவாளையுருவி ஒரு கையை வெட்டி இந்திராணியை டுவித்து, தூர்க்குணங்க ளமைந்த "துன்முகியை நோக்கி "நீயுந் தாட்டனை பண்ணே?" என்று, அவளையு மோர் அத்த மரிந்தனர். ருந்தி யழுது டரண்டு சோகமாகி யெழுந்து அசமுகி அகம் நாணித் ன்முகியுடன் மகேந்திரபுரிக்குச் சென்று தன் தமயனோடு நிகழ்ந் ன கூறித் தக்கித்தனள். சூரன் உலக நடுங்கச் சிரித்து உங்காரஞ் சய்து கோபித்தான். அதுகண்ட அவன் ஜேஷ்டகுமாரன் பாநு காபன் "என்னை விடுத்தால், இந்திரன் இந்திராணி இமையவர் ாவரையும் இமைப்பிற் சிறைசெய்து வருவேன்" எனக் கேட்டு, ன்றென இயைந்து ஏக விடுத்தனன். அவன் தன் வீடுசென்றான். ரன் பிரமனைக் கொண்டு அவ்விருவ ரத்தத்தையும் பண்டுபோற் டைப்பித்து, வாயு-திசைக்காவலர் முதலிய தேவரையும்,நிலமன்ன ரயுந் தண்டித்துப் பிரமன் வேண்டுகோளின்படி விடுத்தனன்.

பாநுகோபன் பல்வகைப்படையும் புடைசூழ இராதருடனு , துன்முகி வழிகாட்டப் புகலிநகரிற்புகுந்து இந்திராணியை யெங் ந் தேடிக் காணாது, அமரர்புரியாகிய அமராவதி யடைந்தனன். ததனை யறிந்த அந்தரர் சயந்தனுடன் சாற்ற, சயந்தன் "தந்தை - ாய்-ஆசிரியன் என்று மிவர்களில் யாரும் ஈண் டிலர்; இனி யென் செய்வது? விதியை விலக்க முடியுமோ? வந்தது வருக" என்று ராவதத்தின்மே லேறி, ஆகாயவாசிகள் புடைசூழ, அசுரச்சேனைக் கெதிரில் அருஞ்சம ராற்றக் கருதி முன் சென்றனன். வானவரும்

தானவரும் போர்புரிய ஆரம்பித்தனர். அவ்வாறு செய்த செருவில்
தேவர்கள் தோற்றோட, அவுணர் அவர்களைத் தொடர்ந்து பற்றி
தோளிற் கயிற்றாற் கட்டி யிழுத்துக்கொண்டுபோயினர். சயந்தன்
சாலவும் வெகுண்டு தன் வில்லைவளைத்துப் பல்வகைப் பாணங்களைப்
பூட்டித் தானவத்தலைவரைப்புறமுதுகுகாட்டி யோடச்செய்து வெ
றிகொண்டனன். பானுகோபன் அவனையெதிர்த்துப்பலதேவாஸ்தி
ங்களைச் சிந்தினன். இந்திரகுமாரனும் எண்ணில்லா அம்புகளை எதி
விடுத்தனன். இவ்வாறு ஒருவர் விட்ட அஸ்திரத்தை மற்றொருவ
ரழித்துக்கொண்டு, இருவரும் பெருஞ்சமர் புரிந்தனர். சயந்தன்
பானுகோபனது வில்லின் நாணியை யறுத்தனன். பானுகோபன்
வேறோர் நாண்பூட்டி, மனம் நாணி, சயந்தன் மார்பில் அஸ்திரமா
வருஷித்தனன். சயந்தன் சகஸ்திராஸ்திரங்களால் அவனது தேரை
யுங் குதிரைகளையும் நொறுக்கினன். தீயோன் வேறோர் தேரேறி
கணக்கில்லாத கணைகளை ஆகண்டலன் சுதன் ஆகத்திற் பிரயோ
த்து அவனை யானைமேலேயே மூர்ச்சையாக்கினன்.

சயந்தன் அவசமானது கண்ட அவனூர்தியாக நின்ற ஐரா
தம் பகைஞன் தேரிற் பலமுடன் பாய்ந்து, அதனுறுப்புக்களை
சிதைத்து, அவன் மார்பிற் கோறல் புரியுங் கோடுகள் நான்காலு
நன்றாய்ப் புடைக்க, அதன் கொம்புகளனைத்துஞ் சடசட வென்று
ஒலியுடன் முரிந்தன. வெய்யோன் வெள்ளையானையின் கவுளி
வெகுளியோடடிக்க அது வருந்தி அலறி வீழ்ந்தது. அவுண னுக்
னையால், தைத்தியர் அநேகர் சயந்தனைச் சூழ்ந்து தோளிற் றும்
பூட்டிப் பிணித்து, சிறைப்பட்ட தேவருடன் சேர்த்தனர். அசு
அமரரது தோளிற்பூட்டிய கயிற்றைக் கைப்பற்றிக்கொண்டோர்த்து
சென்று, அப் பொன்னுலகத்தைத் தீயூட்டினர். பாவியாகிய பா
கோபன் மனமகிழ்ச்சியுடன் நிலவுலகடைந்து மகேந்திரபுரியில்,
தைமுன் சென்று பணிந்து "எந்தையே! இந்திராணியையும் இ
திரனையுங் காணேன். தேவர்களையும், தேவமாதரையும், அவர்க

ளவரசும் இந்திரன் மைந்தனுமான சயந்தனையுஞ் சிறைசெய்து
காண்டுவந்தேன். அமரருலகை இனி அமரொய்தாவண்ணம் அக்கி
ிக் கூட்டினேன்'' என, சூரபன்மன் மனங்களித்து, மகனைத்தழு
க்கொண்டு, தேவர்களை விலங்கு பூட்டிச் சிறையி லிட்டனன்.
ேவ மாதரை அசுர மாதருக்குப் பணிப்பெண்களாகப் பணித்த
ன். சிறையி லகப்பட்ட தேவர்களும், அடிமைசெய்யும் அரம்பா
திரீகளும், எப்பொழுது இத்துயர் தீருமென்று எண்ணிச் சிவபிரா
து திருவருளைச் சிந்தித்துக்கொண் டிருந்தனர். இதுநிற்க:

பாநுகோபனோடு போர்செய்துகொம்பொடிந்தநாற்கோட்டு
ராவதம், தனது துய ராற்றுமல் வருந்தி, சிவத்தியானத்துடன்
ண்ணுலகு நீங்கி மண்ணுல கடைந்து,ஸ்வேதாரண்யம் என்னும்
ருவெண்காடு சென்று, ஆங்கு முன்னொருகாலத்தில் இந்திரனாற்
ிக்கப்பெற்ற பிரமவித்தியா நாயகியாரை இடப்புறமமர்த்திய ஸ்ரீ
வேதாரண்யேசுவரரது துதித்தற்கரிய திருவடியை மனத்திற்பதி
து, ஸூர்யதீர்த்தம் - ஸோமதீர்த்தம் - அக்கினிதீர்த்தம் என்னும்
த்தீர்த்தத்திலும் முறையே காலை - உச்சி - மாலையென்னும் முப்
பாழுதும் மூழ்கி, திருப்பள்ளித்தாமங் கொய்து, சங்கமாகிய
டங்களால் திருமஞ்சனமாட்டி அருச்சித்து, ஒரோமனதாய் உமா
ியை உள்ளத்திற்கொண் டுறைந்தது. அரவாபரணர் அத்தியின்
க்திக்குச் சித்தங்களித்து, திருவருள் செய்யச் சேவைதந்து ஐரா
தத்தின் சிரமேற் றிருக்கரஞ்சூட்டி அதைநோக்கி "உனக்கென்ன
ரம் வேண்டும்'' என, "தேவநாயகா! தேவரீரை இவ்வகையே
ருச்சிக்கவேண்டுகிறேன்'' என விண்ணப்பிக்க, விடையூர்தி
ீ சுதீராப்தி கடைகையின், தோன்றியபொழுதே உன்னை இந்தி
னுக்கு வாகனமாக விடுத்ததாதலின், நீ அவ்வாறே அமரர் துய
ராழிந்தபின் அமராவதியை யடைந்துவாழ்க. எம்மடியனாகிய இந்
ரனை நீயே வாகனமாகித்தாங்குதல் எமக்குச்சம்மதம். நின்கொம்
கள் பண்டுபோலாக'' எனத்திருவாய்மலர்ந்தருளி அந்தர்த்தான

மாயினர். ஐராவதம் ஆண்டவ ரநுக்கிரகித்தவண்ணம் கொம்புகள் வளரப்பெற்று, ஆண்டு அன்போடு சிவலிங்கார்ச்சனை செய்துகொண்டிருந்து ஸ்ரீகுமாரக்கடவுள் சூரபன்மனுதிய அசுரர்துயரகற்றி அமரர் சிறையைவிடுத்தபின்னர் இந்திரனுக்கு வாகனமாய்ப் பண்டு போல் அமராவதியில் வாழ்ந்திருந்தது. ஐராவதமாகிய யானையின் வேண்டுகோளுக்கிரங்கி அதனைச்சமீபித்து அனுக்கிரகஞ்செய்தமையால், கடவுணாயகனைக் கஜாந்திக மூர்த்தி யெனக் கழறலாயிற்று.

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் தேவாரம்.

"சக்கரமாற்கீந்தானுஞ்சலந்தரனைப்பிளந்தானு
மக்கரைமேலசைத்தானுமடைந்தயிராவதம்பணிய
மிக்கதனுக்கருள்சுரக்கும்வெண்காடும்வினைதுரக்கு
முக்குளநன்குடையானுமுக்கணுடையிறைவனே.

கள்ளார்செங்கமலத்தான்கடற்கிடந்தானெனவிவர்க
ளொள்ளாண்மைகொளற்கோடியுயர்ந்தாழ்ந்துமுணர்வரியான்
வெள்ளானைதவஞ்செய்யுமேதகுவெண்காட்டானென்
றுள்ளாடியுருகாதாருணர்வுடைமையுணரோமே."

கந்தபுராணம்.

"மற்ற வன்றன் மணியணி மார்பிடைச்
செற்ற மால்கரி சென்றுமுற் றுக்கலும்
பொற்றை யின்கட் புழைத்திடுஞ் சூசியி
னிற்ற வாலத னீரிரு தந்தமும்.

வாலிய வொளிகெழு வனத்தி லேகியே
மூலம தாகிய முக்கண் மூர்த்தியை
மேலுள தாணுவின் மேவச் செய்துபின்
சீலமொ டருச்சனை செய்து வைகிற்றே.

அறிவுள மால்கரி யமலன் றந்திர
முறையது நாடியே முதிரு மன்பினுன்
மறையுற வழிபடீஇ வைகு மெல்லையிற்
குறைபடு நாற்பெருங் கோடும் வந்ததே."

கஜாந்திகமூர்த்தயேநம:

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## நாற்பத்தொன்பதாவது.

# ஜலந்தரவதமூர்த்தி.

தேவேந்திரன் ஒருகாலத்தில்திருக்கயிலாயகிரியையடைய, வபெருமான் வடிவுமாறி வழியில் நிற்கக்கண்டு, "நீ யாவன்? ாது தொழில் செய்வோன்" என, ஒன்றுங்கூறாதிருப்பக் கோபி துத் தன் கைவச்சிரத்தைத் தோளிற் றாக்க, அது பொடியாக வுதி ந்தது. உடனே பெருமானுக்குக் கோபமுதித்து, ஓ ருருத்திரவடி வற்க, இந்திரன் வெருக்கொண்டு, உளை குழற வுடலசையக் கை ட்டி வாய் பொத்திப் பலவகையாகத் துதிபுரிய, இறைவர் மனம் பொறுத்துத் தன்கோபத்தா லுண்டாகிய வியர்வை நீரை வழித் தறிய, அஃது மேற்றிசைக்கடலில்வீழ்ந்து ஓர் புத்திரவடிவாயது. தனைச் சமுத்திரராசன் மகன்மைகொண்டு வளர்த்துவந்தனன். ச்சிறுவன் பிரமனால் சலந்தரனென்று நாமமிடப்பெற்று, காளைப் ருவமுற்று, அவுணருடன் கூடி ஆற்றல் மிகுந்தவனாய்த் தானவத் ச்சனாகிய மயன் என்பவனால் ஓர் அழகிய நகரஞ் செய்வித்து, ாலநேமியின் புத்திரி விருந்தையைமணந்து சிறிதுகாலம் வசித் ருந்து, மேருமலையிலிருந்த தேவர்களோடு போர்புரியக் கருதிப் பாகையில், தேவர்கள் விஷ்ணுவைவேண்ட அவர்கருடாரூடராய் ருபதினாயிரவருடங் கடும்போர்புரிந்து அவனைவெல்லுந் திறலில் ராய்ப் புகழ்ந்து சென்றனர். அதுகண்ட இந்திரன் அவ்வசுரனால் ாது தீங்கெய்துமோ வென் றலக்க ணுற்றுத் திருக்கயிலாயகிரியை டைந்திருந்தனன்.

இந்திரனது செய்தியைச் சிலதூதுவரியம்ப வுணர்ந்த சலந் ரன் ஆங்குச் சென்று அவனையெதிர்ப்பான் கருதிப் புறப்படு

யில் விசேடித்த கற்பினையுடைய விருந்தையென்னும் மனைவிவேண்டாமென்று தடுப்பவும் மன மயங்காமல், சேனாசமுத்திரத்துடன் திருக்கைலையைச் சமீபித்தலைச்சதக்கிருதுகண்டு சஞ்சலங்கொண்டு சந்நிதானத்துட்சென்று சங்கரர்முன்னே நின்று தனக்குற்றசங்கடத்தைச்சாற்ற, தயாநிதி "வச்சிரபாணி! வருந்தாதே" என வனுக்கிரகித்துத் தேற்றித்தன்பின் வடிவுமாறிவரக் கட்டளையிட்டு, நரைத்த திருவுருவமும், ஊன்றிய தடியும், தொங்கிய கமண்டலமுந் தளர்ந்தநடையுமுடைய ஓர் விருத்த முனி வடிவேற்று, இந்திராதியிமையவர் மறைந்து பின்றொடரச்சென்று, சலந்தரனைக்கண்டு "நீ யார்? யாதுகருதிச் செல்லுகின்றனை?" என வினவ, "யான் சமுத்திரராசன் தனயன். சலந்தரனென்னு நாமமுற்றேன். சிவனுடன் செருச்செய்யச் செல்கின்றேன்" எனச்செப்ப, நம்பெருமான் "நன்றுகூறினாய்" என்று நகை கோட்டி, "கண்ணுதலைப் பொருதக் கருதின் கணத்தி லுயிர் கழிவாய்; உயிர்ப்பிச்சை வேண்டின் திரும்பியோடிப்போ" என, சலந்தரன் "இமைப்பொழுதிங்கிருந்து என் ஆற்றலைக்காணுதி" என, ஈசன் "யான் சிவபிரானுக்கிரண்டாவது. உன்வல்லமையைக்காணவந்தேன்" என்றுதிருவடியாலோர் சக்கரம்போற்கீறி "இவ்வலையத்தைச் சிரமேலேற்றுத் தாங்கவல்லையா" என்றவுடனே, சலந்தரன் இறுமாப்புமிகுந்து "இதுதானோ பெரிது" என்று இருகையாலுமெடுத்து மார்பிலும் புயத்திலுந்தாங்கிச் சிரத்தின்மேல் வைத்துக்கொள்ள, அச்சக்கரம் அவனை அக்கணமே இருபிளவாகப்பிளந்து சிவபெருமான் திருக்கரத் தெய்தியது. அவனுடன்வந்த அசுரர்கூட்டமுற்றும் பெருமானதுவிழித்தீயினாற் சாம்பராயின. பின்னர் பெருமான் தமது நிஜவடிவுகாட்ட இந்திரன் முதலாயினோர் வாழ்த்திப் பூமழை பொழிந்து ஆநந்தக் கூத்தாடிப் போற்றித் தத்தம் பதவியடைந்து வாழ்ந்திருந்தனர்.

அமரரைத் தீராத்துயர் விளைத்துவந்த சலந்தராசுரனைச் சக்கரமொன்று தாளாற்கீறித் தலைமேலெடுக்கச்செய்து சங்கரித்தழை

பால், சிவபிரானுக்குச் சலந்தரவதமூர்த்தியென வோர் திருநாமஞ் சாற்றப்பட்டது.

## கந்தபுராணம்.

"புங்கவர்யாரையும்புரங்கண்டேன்வரு
கங்கையையடைத்தனன்கார்கொள்வேலையி
லங்கியையவித்தனனரியைவென்றன
னிங்கிதுதாங்குவதரியதோவென.

புரத்தழல்கொளுவியோன்பொறித்தநேமியைக்
கரத்திடையெடுத்தனன்கனங்கொண்டெய்தலி
னுரத்திடைப்புயத்திடையுயிர்த்துத்தாங்கியே
சிரத்திடைவைத்தனன்றேவரார்க்கவே.

செழுஞ்சுடர்ப்பரிதியைச்சென்னிகோடலா
லொழிந்திடுசலந்தரனுச்சியேமுதற்
கிழிந்ததுமுழுதுடல்கிளர்ந்துசோரிநீ
ரிழிந்ததுபுவிதனிலிழுமெனேசையால்."

## காஞ்சிப்புராணம்.

'இருகூறுகச்சலந்தரனையிறுத்துமாட்டியவ்வடிவ
மருகேதோன்றச்சுதரிசனமங்கைத்தலத்தின்மிசையேந்தி
முருகார்கடுக்கைத்தண்ணறும்பூந்தொடையல்வாகைமுடிவிளங்கத்
திருவார்காட்சியளித்தருளுந்தேவர்கோமான்றிருவுருவம்."

ஜலந்தரவதமூர்த்தயேநம:

சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

## ஐம்பதாவது.

# ஏகபாத த்ரிமூர்த்தி.

ஆதிமத்தியாந்தரகிதராய் அமலராய்ப் பரிபூரணராய்ச் சூக்ஷம
ராய் ஏகராகிய பரமசிவம் உலகங்களை ஆக்குதல் காரணமாய்ச் சுத்த
மாயையின் அதோபாகமான அசுத்தமாயையினிடத்து அவ்யக்தமா
கிற மஹானையுண்டாக்கி, விஞ்ஞானகலர் - பிரளயாகலர் - சகலரெ
ன்னும் மூவருக்கும், தநுகரணபுவனபோகங்களுக்கு உபகரணமாய்
பிரம விஷ்ணு உருத்திரர்கள் மூலமாய்ப் பிரபஞ்சங்களையெல்லாம்
படைத்தல்-காத்தல்-அழித்தலாகிய முத்தொழில்களையுஞ் செய்வி
த்து மவற்றிற்றோயாதவராய்ச் சுத்தமாயெழுந்தருளுவர். இங்ஙனம்
நிர்மலமாயிருப்பினும் அவர்கொண்ட திருவுருவம் அஜகேஸவாதி
ஆன்மாக்களின் அநுக்கிரககாரணமேயன்றி வேறன்று. அவரது
திருவுருவமும் அநுக்கிரகமேயாகும்.

### ததுக்தம் வாதுளே.

அங்கப்ரத்யங்கஸாங்கஞ்சோ பாங்கஞ்சசதுரோபவேத் - ஶி
ரோவக்த்ரஞ்சஹ்ருதயம் அங்கஞ்சேதிப்ரகீர்த்திதம்-வக்ஷ:கண்டஸ்
தநௌபாஹு நாபிகுஹ்யோதரந்த்த-நேத்ரம்நாஸாஸ்யகர்ணௌ
பாணிபாதம்ததாங்குலி:-ஊருசஜாநுஜங்கஞ்ச ப்ரத்யங்கஞ்சேதிக
யதே - மூர்த்திநாம்குணரூபந்து ஸாங்கம்சேதிப்ரகீர்த்திதம் - குண
சிந்நமிதிஜ்ஞேயம் தத்குணம்தஸ்தாபவேத் - குணம்ஸத்யம்ப்ரதா
ஞ்ச தர்பேத்யாநுக்ரஹம்ததா - ருத்திமாயாவிவர்ணஞ்ச நாதம்ஸ
ஹ்ருதிரேவச-ஏதேதஸ்குண:ப்ரோக்தா:தேஷாம்லக்ஷணமுச்யதே
த்ரிகுணம்ஸூலமித்யுக்தம் ஸத்யம்பரஸூரிஷ்யுதே-கட்கமீஸப்ரத



௫௰. ஏகபாத த்ரிமூர்த்தி.

போயம் துர்பேத்யம்வஜ்ரமிஷ்யதே-ஈஸஸ்யாநுக்ரஹஞ்சைவ அப
யஞ்சப்ரஸஸ்யதே - ருத்திஸ்ஸ்யாந்நாகரூபந்து பாஸம்மாயாஸ்ரூப
கம்-விவர்ணமங்குஸஞ்சைவ கண்டம்நாதாத்மகம்விது: - ஸம்ஹார
மக்நிரூபம்ஸாத் பாஸாநாம்பஸ்மஸாத்க்ருதி: - ஏதேவைகுணரூபா
ஸ்ச ஸாங்கஞ்சேதிப்ரகீர்த்திதா:-வஸ்த்ரோபவீதமாலாஸ்ச் கந்தமா
பரணந்ததா - ஆஸநாசரணஞ்சைவ உபாங்கஂசேதிகீர்த்திதம்—
என்று கூறியதினானே இவர் திருமேனிகாருண்யத்திருமேனியென்
பது பெறப்பட்டது.

[illegible]

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

𑌸𑌹𑌸𑍍𑌰𑌶𑌃 । 𑌨𑌾𑌨𑌾𑌦𑍇𑌵𑌗𑌣𑌾𑌶𑍍𑌚 𑌸𑌾𑌂𑌗𑍍𑌰𑌂𑌚 𑌕𑌿
𑌪𑍍𑌰𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌾𑌃 । 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌦𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌤𑍇𑌵𑌾𑌶𑍍𑌚 𑌸𑌂𑌸𑌾𑌰𑌣𑌂 𑌤
𑌥𑌾 । 𑌶𑍍𑌰𑌵𑌣𑌂 𑌚𑍈𑌵 𑌉𑌪𑌾𑌙𑍍𑌗𑌂 𑌚 𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌮𑍍 ॥

இவர் திருமேனியில் ஹ்ருதயத்தினின்றும் ஸஹஸ்ராம்ஸமாக உருத்திரதேவர் தோன்றுவர். கோடியம்ஸமாக வாமதக்ஷிணபார்சங்களினின்றும் பிரம விஷ்ணுக்கள் பிறப்பார்கள். தக்ஷிணவாமலலாடநேத்திரங்களிலிருந்து ஸூர்ய ஸோமாக்கிதேவர் தோன்றுவர். பிராணனிலிருந்து வாயுதோன்றுவன். கண்டத்தினின்று கணேஸர் ஜனிப்பர். ஹ்ருதயத்தில் ஸ்கந்தர் உதிப்பர். நாபியினின்று இந்திர யமவருண குபேரருதிப்பார்கள். பிரத்யங்கத்தினின்றும் பஞ்சாசத்கோடி தேவர்கள் பிறப்பர். உரோமகூபங்களிற் பலகோடி ருஷிகளும் மற்றுமுள்ள பல தேவர்களுஞ் சனிப்பார்களென்று வேத சிவாகமங்களிற் படிக்கப்பட்டுள்ளன.

### வாதுளாகம்.

கர்மேஸஸ்யஸஹஸ்ராம்ஸாங் மஹேஸஸ்யஸமுத்பவ: - மஹேஸஸ்யஸஹஸ்ராம்ஸாத் ருத்ரதேவஸமுத்பவ: - ஏதம்மஹேஸகோட்யம்ஸாத் ப்ரஹ்மவிஷ்ணுஸமுத்பவ: - தக்ஷிணங்கபவோப்ரஹ்மா ஹரிர்வாமாங்கஸம்பவ : - ஹ்ருதயாந்நீலருத்ரஸ்து ஸிவஸ்யஸிவஸஞ்ஞக: - நேத்ரேஷுஸவ்யவாமோர்த்வே ஸூர்யஸோமாக்நிஸம்பவ: - ப்ராணவாயுஸமுத்பந்ந ஸ்ரோத்ரேகீலாதிஸம்பவ: - ஆஸ்யேஜ்ஞாநம் ஸமுத்பந்நம் கணேஸஸ்துகளோத்பவ : - ஷண்முகேஹ்ருதயேஜாதோ நாபௌதேவாஸ்ஸமுத்பவா : - பஞ்சாஸத்கோடிதேவாஸ்ச மஹேஸாங்கஸமுத்பவா: - ருஷயஸ்சததாகோட்யோ ரோமகூபாத் ஸமுத்பவா: - மநோந்மந்யாஸ்ஸஹஸ்ராம்ஸாத் கௌரீஜாதம்இதிஸ்ம்ருதம் - ஸ்ரீஸ்ஸாஸரஸ்வதீதுர்கா உமாசைவப்ரபாததா - ஸசீஜ்யேஷ்டாசலக்ஷ்மீச ததைவாந்யாஸ்சஸக்தய: - ஏதாவைகோடிஸக்திஸ்ச கௌரீதேஹஸமுத்பவா.

## அதர்வசிகோபநிஷத்து.

ப்ரஹ்மவிஷ்ணுருத்ரேந்த்ரா ஸ்ஸம்ப்ரஸூயந்தே - நகாரணம்
ரணம்த்யேய: - ஸர்வைஸ்வர்ய்யஸம்பந்ந: ஸம்புராகாஸமத்யே

[illegible]

## கூர்மபுராணம்.

ராஜஸீமாமகீஸக்தி:கரோதிஸகலம்ஜகத்-ஆஸ்தாயப்ரஹ்மணோ
பம் மந்மாயாஸம்ப்ரவர்திதா - அந்யாசஸக்திஸ்ஸத்வாட்யா ஸம்ஸ்
பயதிமேஜகத் - பூத்வாநாராயணோநந்தோ ஜகந்நாதோஜகந்மய:-
ருதீயாமஹதீஸக்திர் நிஹந்த்ரீஸகலம்ஜகத்-தாமஸீமேஸ மாக்யா
ா கோபாத்ருத்ராக்யரூபிணீ.

[illegible]

## லிங்கபுராணம்.

தமஸாகாலருத்ராக்யம் ரஜஸாகநகாண்டஜம் - ஸத்வேநஸர்வ
ம்விஷ்ணும் நிர்குணத்வேமஹேஸ்வரம்,

[illegible]

## ஆதித்யபுராணம்.

ஸதஸ்மாததிகம்கிஞ்சித் தத்வம்தத்வித்திஸாங்கரம் - தஸ்யை வமூர்தயஸ்திஸ்ரோ ப்ரஹ்மவிஷ்ணுஹராபிதா :

[illegible]

## அநுசாஸநீகபர்வம்.

ஸஏஷபகவாந்ருத்ர : ஸர்வதத்வாதிரவ்யய :-ஸோஸ்ருஜத்தக்ஷிணாங்காத் ப்ரஹ்மணம்லோகஸம்பவம்-வாமபார்ஸ்வாத் ததாவிஷ்ணும் லோகரக்ஷார்தமீஸ்வர :-ஹ்ருதயாத்காலருத்ராக்யம் ஸர்வஸம்ஹாரகாரகம்.

[illegible]

ஸ்காந்தம்-மதங்கஸ்வேதஸம்பூதௌ ப்ரஹ்மநாராயணாவிமௌ
லிங்கபுராணம்-தக்ஷிணாங்கபவோப்ரஹ்மா வாமதஸ்சஜநார்த்தந :
காளிகாகண்டம். விஷ்ணுவாக்யம்-ஜாதோஹமஸ்யவாமாங்கே ப்ரஹ்மசைவாஸ்யதக்ஷிணே.

[illegible]

[illegible]

## ஆதித்யபுராணம்.

யதாஜ்ஞயாஜகத்ஸ்ரஷ்டா விரிஞ்சி : பாலகோஹரி :
ஸம்ஹர்தாகாலருத்ராக்யோ நமஸ்தஸ்மைபிநாகிநே.

𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌪𑍁𑌰𑌾𑌣𑍇 ॥

𑌯𑌦𑌾𑌜𑍍𑌞𑌯𑌾𑌜𑌗𑌤𑍍𑌸𑍍𑌰𑌷𑍍𑌟𑌾 𑌵𑌿𑌰𑌿𑌞𑍍𑌚𑌿𑌃𑌪𑌾𑌲𑌕𑍋𑌹𑌰𑌿𑌃।
𑌸𑌂𑌹𑌰𑍍𑌤𑌾𑌕𑌾𑌲𑌰𑍁𑌦𑍍𑌰𑌾𑌖𑍍𑌯𑍋𑌨𑌮𑌸𑍍𑌤𑌸𑍍𑌮𑍈𑌪𑌿𑌨𑌾𑌕𑌿𑌨𑍇 ॥

இத்தியாதி நியாயங்களாற் கற்பங்கள்தோறும், சிவபெரு
மான் அநேககோடி பிரமவிஷ்ணு ருத்திரர்களை அவ்வவர்களின் பா
ரவீக்கத்தின் நீத்கத்தின்பொருட்டு அணுத்தன்மை நீங்கிச் சிவமா
ந்தன்மையருள, தமது திரு அங்கத்தினிடத்துச் சிருட்டித்து, மீண்
டுந் தம்மிடத்தில் ஒடுக்கிக்கொள்வர். “யாதேருத்ரபிதர்மருதாம் ஸு
மர்நமேது,” என்னும் சுருதி ப்ரவாணத்தின்படி, அத்தேவர்களைக்
கற்பங்கள்தோறும் சிருட்டித்தும், மீண்டுந் தம்மிடத் தொடுக்கியும்,
தாம் பிறப்பிலராய், மும்மூர்த்தி முதலாகிய தேவர்களுக்கும் பிறப்
பிடமாய்த் தனித்து நிற்பராதலின், சிவபிரான் ஏகபாதத்ரி மூர்த்தி
யெனப் பெயரெய்தினர்.

## காஞ்சிப்புராணம்.

‘அடுப்பார்க்கருளுமொருதாளுமம்பொற்கமலவிழிமூன்றும்
படப்பாம்பணிந்தபுயநான்குஞ்சூலப்படையுமெழில்வயங்க
விடப்பாலரியைவலத்தயனையெழுநாற்கோடியுருத்திரரை
நடுப்பாற்றோற்றியையைந்துவடிவமுடனுநலம்பிறக்கி.

புகன்றவிடப்பாற்பகுதியினைப்புந்தித்தலத்திற்புந்தியினை
யகங்காரத்தினுறுதன்மாத்திரையிற்பொறியினவ்வவற்றைத்
தருந்தாள்குய்யமுந்திகளந்தலையிற்பார்நீரனல்வளிவான்
மிகுஞ்சீர்விழியினிடத்திரவிவெண்கேழ்மதியைப்படைத்தருளி.

அடியினடங்குங்கீழுலகமனைத்துமடியினுறத்தோற்றி
முடியினடங்குமேலுலகமுழுதுமுடிப்பாலளித்தருளிப்
படியில்கருணைப்பிழம்பாகிப்பரசுமடியாரகவிளக்காய்க்
கொடியமலநோயரட்டொதுக்குங்கோணைப்பெருமான்றிருவுருவம்’

ஏகபாதத்ரிமூர்த்தயேநம :

சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# ஐம்பத்தொன்றாவது,
# த்ரிபாத த்ரிமூர்த்தி.

திவ்வியமங்கள ஸ்வரூபராகிய சிவபெருமான் மகேச்சுரராக நின்று, தம்மிடத்திருந்து அகில புவனங்களையும், அப்புவனாதிபர்களையும் முறையே தோற்றுவித்து, அத்தோற்றிய அடைவே தம்மிடத்தி லொடுக்கிக்கொள்வர். அவ்வொடுக்கம் நித்தியம்நைமித்தியம் பிராகிருதம் ஆத்தியந்திகம் எனநான்குவகைப்படும். அவற்றுள் முதலிற்கூறிய நித்தியம் என்பது ஆன்மாக்கள் அவர்கட் கறுதியிட்ட ஆயுளி னிறுதியில், தத்தங்காரணத் தொடுங்குவதாம். இரண்டாவதாகிய நைமித்திகம் என்பது பிரமாவினது பகல்கழிய, உலகஞ்சலத்தால் மறைதலாம். மூன்றாவதாகிய பிராகிருதம் என்பது பிரமதேவனது காலவளவையொழிய உலகமெல்லாம் மடிந்து பிரகிருதியில் ஒடுக்கமுறுதலாம். நான்காவதுங் கடைப்பட்டதுமான ஆத்தியந்திகம்என்பது ஆன்மாக்கள் விரிந்தஞானத்தினால் முத்தியடைதலாம்.

அவற்றுள் முதற் கூறிய நித்திய மென்பது வெளிப்படை. இரண்டாவதாகிய நைமித்திகப் பிரளயத்தின் முடிவில், சூரியன் நூறுதேவவருடமட்டும், சுவர்க்க மத்திய பாதாலலோக மனைத்தும் முதலற,அழற்கதிர்பரப்பி,கடலாற்சூழப்பட்ட பூமியும், அதைச்சூழ்ந்த பெரும்புறக்கடலும் வறண்டு பொரிந்து போகும்படி தீப்பொறிகளைச் சிந்தி அக்கினி தேவனுடன், கொல்லுந் தொழில்செய்யும் யமனைப்போலக் காலத்தோடுகலந்து, பூலோகம் புவர்லோகம் சுவர்லோகம்மகலோகம் பாதலலோகம் முடிவுவரையிலுள்ள சராசரமெல்லாவற்றையுமெரிப்பன்.இங்ஙனம் செய்ததின் பின்னர்நூறுவருஷம்



51. த்ரிபாத த்ரிமூர்த்தி.

மேகக்கூட்டங்கள் குழுமி யானைத் துதிக்கையினின்றும் நீர்சொரி வதுபோல நீர்த்தாரை பொழிந்து மின்னி இடித்துச் சூரியஉஷ்ண முதலியவற்றைத் தம்மிடத் தொடுக்கிக்கொண்டு பெருமழை சொரியும். இவ்வகைய நைமித்திகப் பிரளயகாலத்தில் பிரமன் யோக நித்திரை செய்வன். இப்பிரளயத்தோடு கூடிய கற்பத்தை வராக கற்பமெனவுங் கூறுவர்.

பிராகிருதப்பிரளயத்தைச் சிறிதுவிரிப்பாம். பரமாணு இரண்டு கொண்டது அணு. அதுமூன்றுகொண்டது திரிசரேணு. அதுமூன்று கொண்டது துடி. அது மூன்றுகொண்டது வேதை. அது மூன்று கொண்டது லவம். அது மூன்றுகொண்டது நிமிஷம். அது மூன்று கொண்டது கனம். அது ஐந்துகொண்டதுகாட்டை. அது பதினைந்து கொண்டது லகு. அது பதினைந்துகொண்டது கன்னல் அல்லது நாழிகை. அது இரண்டுகொண்டது முகூர்த்தம். அது பதினைந்துகொண்டது பொழுது. அது இரண்டுகொண்டது நாள். அது பதினைந்து கொண்டது பட்சம். அது இரண்டுகொண்டது திங்கள். அது இரண்டு கொண்டது இருது. அது மூன்றுகொண்டது அயநம். அதுஇரண்டு கொண்டது ஆண்டு என்று சொல்லப்படும். ஆண்டு அல்லது வருஷம் நூறுகொண்டது மாநுடர் ஆயுள்காலம். மேற்கூறிய மாநுஷநாள் முப்பதுகொண்டது தென்புலத்தோர்க்கு ஒருநாள். அவ்வகைத் திங்கள் பன்னிரண்டுகொண்டது தேவர்களுக்கு ஒருநாள். அவ்வகை நாள்கள் கூடிய ஆண்டு பன்னீராயிரங் கழிந்தால், தேவர்களுக்கு சதுர் யுகமாம். நால்வகையூழி யாயிரஞ் சென்றால், பிரமனுக்கொரு பகல். இதற்குள் சுவாயம்பு-சுவாரோசிஷன்-உத்தமன்-தாமசன்-ரைவதன்-சாக்ஷுஷன்-வைவச்சுதன் - சூரியசாவர்ணி-தக்ஷசாவர்ணி-பிரமசாவர்ணி-தருமசார்வணி-உருத்திரசாவணி-ரௌச்சியன் - பௌத்தியனென்னும் பதினான்கு மநுக்களும், விபச்சித்து-சுசாந்தி-சிவி - விபு-மனோசவன் - புரந்தரன் - மாவலி - அற்புதன் - சாந்தி - விருடன் - இருதராமன் - திவற்பதி-சுசிஎன்னும் பதினான்கு இந்தி

ரர்களும் நீங்குவர். அப்பொழுது பிரமன் சிருட்டி நீங்கித் துஞ்சு வன். இதையே பிராகிருதப் பிரளயமென்பர். இத்தகைய பிரமர் ஒருகோடியரிறப்பின் திருமாலுக்கு ஒருபகலாம். இவ்வகையாக விஷ்ணுவின் காலவளவை கழியின் விஷ்ணுவு மிறப்பர்.

இவ்வாறிறந்த பிரமவிஷ்ணுக்களும் உத்திரரும் தாம் தோன்றிய அடைவே மகேச்சுரனிடத்தில் லயமாவர். அம்மகேச்சுவரரோ அநேக கோடி சூரியப் பிரகாசமாய்ப் பிரமாண்டங்களை யெல்லாம் நெற்றிக்கண்ணுலெரித்து, அவ்வாறு எரியுண்ட புவனபதிகளின் அங்கங்களைக் கருணையாலே, தம்மிடத் தொடுக்கிக் கொள்வர். பிரமாவிஷ்ணு-உருத்திரனென்னு மிவ்மூவருஞ் ஒடுங்கும் சமயத்துமகேசுவர ரொழுந்தருளிய அவசரம் த்ரிபாத த்ரிமூர்த்த மெனப்படும். அதாவது மூன்று பாதமாகநின்ற மும்மூர்த்திகளும் மகேஸ்வரரிடத்தில் லயமாதலாகிய அவசரம் என வுணர்க.

எல்லாப்பொருள்களும், தத்தம் பிறப்பிடத்திலேயே லயப்படும் என்பதற்குப் பிரமாணம்.

"யாதேர்வா இமாநி பூதாநிஜாயந்தேயே நஜாதாநி ஜீவந்தியத் ப்ரயந்தயயிஸம் விஸந்திதத் விஜிஜ்ஞா ஸஸ்வததப்ரஹ்ம"—சுருதி.

சிவஞானபோதம்.

முதற்சூத்திரம் - உதாரணம்.

"இலயித்த தன்னின் லயித்ததா மலத்தா
விலயித்த வாறுளதா வேண்டு-மிலயித்த
தத்திதியி லென்னி னழியா தவையழிவ
தத்திதியு மாதியுமா மாங்கு."

த்ரிபாத த்ரிமூர்த்தயேநம :

---



52. ஏகபாத மூர்த்தி.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஐம்பத்திரண்டாவது.

# ஏகபாதமூர்த்தி.

கண்முதலிய உறுப்புகளின்றி, கருத்தினுக்கெட்டாதாகி வண்
முங் குணமுமின்றி மாறலாப்பொருளாய் ஆதிமத்தியாந்த ரகித
ய்ச் சுயஞ்சோதியாய்ச் சர்வான்மாக்களுந் தோன்றி லயிக்குமிட
யுள்ள சாக்ஷாத்சிவபெருமான் ஆன்மாக்கள் ஆணவகேவலத்தில்
ழுந்தித் தம்மையறியாது கிடப்பதை யறிந்துசத்தியை க்ஷோபித்து
ானத்தை யுதிப்பித்து அவ்வான்மாக்கள் ஆணவாதிமலபந்தங்கள்
ங்கித் திருவடியை யடையத் திருவுள்ளங்கொண்டு சிருட்டியாதி
பக்கருதி, மீண்டும் படைத்தும், அவற்றைக் காத்தும், சங்கரித்
ம், திரோபவித்தும், அநுக்கிரகித்தும் வராநிற்பர்.

சர்வசம்ஹாரகாலத்திற் சத்தியில் அனைத்துயிரும் ஒடுங்க,
க்காருண்ய சத்தியார் தம்மிடத்தொடுங்க, சிவபிரான் ஒருவரே
ழியாதிருந்தருளுவர்; எனவே சிவாகமாதிபுராணங்கள் ப்ரதிபாதி
கும். இவரே சர்வகாருண்யராகிய பகவான்; அணிமாதி அஷ்ட
க்துக்கும் முதற்காரணர்; பிரணவவாச்சியர்; பர்க்கபகவத் சப்த
ாச்சியர்; இவரே தனிப்பொருளாய் நிற்பவர். இவற்றைப்பின்
ரும் உபநிடதாதி மஹாவாக்கியங்கள் வெளிப்படுத்தும்.

ஶ்ருதி வாக்கியங்கள்.

ஈஶாநஸ்ஸஏகோருத்ர: | ஶிவஏவகேவல: | ஏகஏவருத்ரோநத்
திய்யாயதஸ்தே | த்யாவாபூமிஜநயந்தேவஏக: | ஸஶிவஏகோ
தவ: | தமேகம்புருஷம்ருத்ரம் | யஏகோருத்ரஉச்யதே | ஏகமே
ாத்விதிய்யம்ப்ரஹ்ம | ஸர்வோவைருத்ர: | விஶ்வாதிகோருத்ரோ
ஹருஷி: | ய:பரஸ்ஸமஹேஶ்வர:

[illegible]

இத்யாதிப் பிரமணங்களால், பகவாணுக வுள்ள சிவமூர்த்தியே தனித்து நிற்பவரெனவும், எஞ்சிய இமையவர்கட்கு முதல்வரென வும் பெறப்பட்டது. இனி பகவத் சப்தவாச்சிய ரென்பதற்குப் பிர மாணங் கூறுவாம். பகவானென்பது அறுகுணச் செல்வனெனப் பொருளாகும்.

அவையாவன,

" ஐஸ்வர்யஸ்யமுக்ரஸ்ய வீர்யஸ்யயஸஸ:ஸ்ரிய:-ஜ்ஞாநவைரா க்யயோஸ்சைவஷண்ணும்பக இதீரித:"- இத்தகைய அறுகுணங்க ளும் சிவபெருமானுக்குள்ளவை. எவ்வாறெனின், ஸ்வேதாஸ்வத ரோபநிஷத்து. " தமீஸ்வராணும் பரமம்மஹேஸ்வரம்" என்றும், "ஸர்வஸ்யப்ரபுமீஸாநம்" என்றும், தைத்திரீயகம் "ய:பரஸ்ஸமஹே ஸ்வர": என்றும், அதர்வஸிரஸு "ஸர்வைஸ்வர்யஸம்பந்ந:ஸம்பு:" என்றும், ஸௌப்திகபர்வத்தில், கண்ணன்வாக்கியம் "நூநம்ஸதே வம்தேவாநாம் ஈஸ்வரேஸ்வரமவ்யயம்." என்றும், சிவநாமங்களில், "ஈஸாந: ஈஸ: ஈஸ்வர: மஹேஸ்வர:" என்றும் போந்த பிரமாணங் களால், எல்லாமுடைமைக் குணமுடையான் சிவபிரானென்பதும், இப்பகவானை யுபாசித்தே மற்றத்தேவர்கள் ஐசுவரியாதி சம்பத்து களைப் பெற்றார்களென்பதும் விளங்குகின்றது.

இனி வீர்யன் என்பதற்கு, ஸ்ருதி "ம்ருகந்நபீமமுபஹத்து முக்ரம்"என்றுகூறியஉக்ரசப்தத்தால்வீர்யனெனப்பெறப்பட்டது.

வதம் சதுர்த்தஸ்கந்தம் பிரமன் வாக்கியம் "நாஹம்நயஜ்ஞாநசய யூயம்-யேதேஜோவாஜாமுநயஸ்சஸத்வம்- விது: ப்ரமாணம்பல பயோர்வா-தஸ்யாத்மதம்த்ரஸ்சஉத்பிதித்ஸேத்" என்றும், ஸ்ரு நஸங்கசாஸங்ஸிவஏவகேவல:" என்றும், காட்டிய பிரமாணங்க ால் யஸோகுணமுடைமை நிரூபிக்கப்பட்டது. "அதவாசேஷகல் குணககணாஈஸ்வர: ஸிவஇத்யுச்யதேஸத்பி: ஸிவதத்வார்தவே : என்றும், இராமாயணம் "ஸ்ரீமத:ஸிதிகண்டஸ்யகீர்திர்ஹி தூரதி ா" என்றும், ருக்வேதம் "ஸ்ரேஷ்டஜாதஸ்யருத்ரஸ்ய ஸ்ரியாஸி ஸ்த மஸ்தபநாம வஜ்ரபாஹோ" என்றும், விளக்கிய பிரமாணங்க ால் ஐசுவர்யமுடைமையும் யசோகுண முடைமையும், அநந்த கல் குணமுடைமையும்நாட்டப்பட்டது. ஸ்வேதாஸ்வதரோபநிஷ "ஏநாவ்ருதம் ஸத்யமிதம் ஸர்வஜ்ஞ: காலகாலோகுணீஸர்வவித் " என்பதாற் செல்வமுடைமையும் ஞானவைராக்கியமுடைமை சாற்றப்பட்டது. பின்னும் கூர்மபுராணம் "யஸ்துயோகம்ததா மிச்சேதஜ்ஞாநமுத்தமம் ஸோர்தயேத்வை விரூபாக்ஷம்" றும், ஸ்மிருதி "ஈஸ்வராதாத்ஜாநமீப்ஸேத்" என்றும் காமா தம் வைராக்யகுணத்தைக்கூறிற்று. பாகவதம் அஷ்டமஸ்கந்தம் ரக்தஸ்த்வத்ருதேபுமாந்" என்றும் இவ்வாறு ஷாட்குண்யஸம் யும் சிவபிரானிடத்தே அநந்யசாதாரணமா யுள்ளன.

அன்றியும் மந்த்ரோபநிஷத்து "தர்மாவஹம்பாபநரம்பகே " என்றும், வேறோர் மந்த்ரம் "ஸர்வாநநஸிரோக்ரீவ: ஸர்வபூத ாஸய: ஸர்வவ்யாபீஸபகவாந் தஸ்மாத்ஸர்வகத:ஸிவ:" என்றும் வத்ஸப்தவாச்சியம் நிர்த்தேசிக்கப்பட்டது. இனிச் சிவபிரானே வாச்சியனென்பதைவிளக்குவாம். ஸ்ருதி "யோவேதாதௌஸ்வ ரோக்த:" என்று பிரணவசப்தவாச்சியத்துவம் மஹேஸ்வரனாக டமாய்த் தெரிவித்தது. பின்னும் ஸ்ருதி "ப்ரஹ்மாஸிவோமே துஸதாஸிவோம்" என்றும், லிங்க புராணம் "ப்ரணவோ கஸ்தஸ்ய ஸிவஸ்யபரமாத்மந:" என்றும், ஆதித்யபுராணம்

“வாசக: ப்ரணவோயஸ்யஜ்ஞாநமூர்த்தேருமாபதே:” என்றும், க
வல்லீமாண்டூக்யாதர்வஶிர: ஶிகைப்ரஶ்நோபநிஷத முதலியவற்
ள்ளும், பிரணவம் ஶிவைகவாசகங்களாகவே பிரதிபாதிக்கப்பட்ட

இனி வேதங்களாற் கூறப்படும் **பரீக்ஷா**திசப்தப் பொருள்
ளோர் சங்கரர்என்பதற்கு ஆதித்யபுராணம் “பர்கோவிஶ்வஸ்யபரணு
விஶ்வயோநிருமாபதி: தஸ்யஞாநமயிஶக்திபார்யாசகிரிஜாஶிவா”
ன்றுகூறிய ஏதுக்களால், சிவபெருமான் ஒருவரே மற்றத்தேவர்களு
கு அருள்புரிந்து முதலிலும் கடையிலும் தனித்துநிற்பர் என்ப
பெறப்பட்டது.

இத்யாதிபிரமாணங்களாற்போந்த பரமபதியாகிய சிவபெ
மான் சர்வஸம்ஹாரகாலத்தில், யாவரும் லயமடைய எல்லாவுலகு
தமது திருவடியிற்பொருந்தநிற்பதால் ஏகபாதமூர்த்தியென்று சரு
யாதிகளாற் பிரதிபாதிக்கப்பட்டனர்.

ఐశ్వర్యస్యసమగ్రస్య వీర్యస్యయశసఃశ్రియః । జ్ఞానవైరాగ్యయో
శ్చైవ షణ్ణాంభగ ఇతీరితః ॥ శ్వేతాశ్వతరోపనిషత్తు । తమీశ్వరాణాం
రమం మహేశ్వరం ॥ సర్వస్యప్రభుమీశానం॥ తైత్తిరీయ్యం ॥ యఃపరస్స
హేశ్వరః ॥ అథర్వ శిరస్సు ॥ సర్వైశ్వర్యసంపన్నఃశంభుః॥ సౌప్తికపర్వ
నూనంసదేవందేవానాం ఈశ్వరేశ్వరమవ్యయం॥ నిఘంటు॥ ఈశానఃఈ
ఈశ్వరః మహేశ్వరః ॥ శృతి ॥ మృగన్నభీమ ముపహంత్తుముగ్రం ॥ భా
వతం ॥ నాహంనయజ్ఞానచయస్యయూయం । యేదేజోవాజాహున య
సత్వం । విదుఃప్రమాణంబలవీర్యయోర్వా। తస్యాత్మతంత్రశ్చనఉద్భిధే
త్ ॥ శ్రుతి॥నసన్నచాసన్శివఏవకేవలః॥అథవాశేషకల్యాణగుణైకఘన
శ్వరః । శివఇత్యుచ్యతేసద్భిఃశివతత్వార్థవేదిభిః॥రామాయణం ॥ శ్రీమ
శితికంఠస్యకీర్తిర్మహిమాదురతిక్రమా॥ఋగ్వేదం॥శ్రేష్ఠజాతస్యరుద్రస్యశ్రియ

పస్తమ స్తపనాంవజ్రబాహు ॥ శ్వేతాశ్వతరోపనిషత్తు ॥ ఏనావృతంస
సర్వజ్ఞః కాలకాలో గుణీసర్వవిద్యః ॥ కూర్మపురాణం ॥ యస్తుయో
ధామోక్ష మిచ్ఛేత జ్ఞానముత్తమం ॥ సోర్చయేద్దైవ విరూపాక్షం ॥ స్క
ఈశ్వరాదాజ్ఞానమిచ్ఛేత్ ॥ భాగవతం ॥ విరక్తస్తవ్యద్యతెపుమాన్ ॥
త్రోపనిషత్తు ॥ దర్మావహంపాపనదంభగేశం ॥ సర్వాననశిరోగ్రీవః సర్వ
తగుహాశయః । సర్వవ్యాపీసభగవాన్ తస్మాత్సర్వగతః శివః ॥ శ్రుతి ॥
వేదాదౌస్వరః ప్రోక్తః ॥ బ్రహ్మశివోమెఅస్తుసదాశివోం ॥ లింగపురా
॥ ప్రణవోవాచకస్తస్య శివస్య పరమాత్మనః ॥ ఆదిత్యపురాణం ॥ వా
ః ప్రణవోయస్యజ్ఞానమూర్తెరుమాంపతేః ॥

### இலிங்கபுராணம்.

"வெய்யதிரிசூலம்விழைவோடினிதினேந்துங்
ஙகைகளொருநான்குமலர்கண்களொருமூன்றுஞ்
செய்யமலர்வென்றவொருதாளுமுறுதேவை
யொய்யெனவமைத்தவர்கள்முத்தியுறுவாரே.

### ஏகபாதமூர்த்தயோகம்:.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஐம்பத்துமூன்றுவது
# கௌரீவரப்தமூர்த்தி.

மந்தரபர்வதமானது மஹாதேவனைநோக்கிப் பலகாலந் தவ ஞ்செய்து, அப்பரமபதி தன்னிடம் வாழும்படி வரம்பெற்றமையால் சிவபெருமான் தேவியாருடன் அதில் சிறிதுகாலம் வீற்றிருந்தனர். அவ்வாறிருக்கையில் அம்சிவாகனனாகிய அலரோனை நோக்கி அநேக நாள் அருந்தவ மாற்றிய அசுரனொருவன் உமையம்மையார் உடலி னின் றுதித்த ஒரு பெண்ணால் உயிரொழிந்தாலன்றி, வேறொரு வராலும் இறவாதிருக்க வரமேற்று இமயவரை யலைத்து வந்தனன். அந்த அவதியை யகற்ற வழியாதென்று வருந்திக் கருதியமலரோன் மந்தர மடைந்து எம் பிரானைப்பணிந்து "இறைவரோ! இமய வல்லியாகிய எமதன்னையிடம் ஓர் கன்னியைத் தோற்றுவித்து அவ் வசுரனை யழிக்கவேண்டும்" என விண்ணப்பிக்க, இறைவர் அவ்வா றே யாகுக" என்று விடையளித் தனுப்பினர்.

பின்னர் காளகண்டராகிய கண்ணுதல் லீலாமாத்திரையாய்த் தேவியாரைத் திருநோக்கஞ்செய்து "ஏ காளிவருக" என, இறைவி "கருப்புவில்லியாகிய காமனைக்காய்ந்து கல்லாடையுஞ் சடைமுடியுந் தரித்த கடவுளுயகா! தேவரீ ரிவ்வாறு திருவாய்மலர்ந்தது யாதுகா ரணம்? விருப்பில்லாமனேவி மகளிருட்பதடியாவ ளாதலின், இக்கா ருருநீங்கிக் கவுரியாம் வண்ணம் கருணைபூத் தருள்க" என்று, கண்ணி ணையில் முத்துக்கள்போல் நீர்த்துளிகள் சிந்தினள். கருணாமூர்த்தி பெண்ணே! சர்வான்மாக்களையும் காத்தலே நமது கடனாதலின் ஓர்

நமப்பொருட்டாய் இவ்வாறுகழறினேம். மனங்கலங்கற்க. அதனைப்
ன்னரறிவாய்" எனத்திருவாய் மலர்ந்தருள, அம்பிகை அண்ணலை
லம்வந்துபணிந்து விடைபெற்று, இமயமலைச்சாரலை யடைந்து, ஆங்
கார் சிவலிங்கப்பிரதிட்டைசெய்து, ஆகமவிதிவழாது பூசித்து அரு
தவத்திருந்தனள்.

அசுரர் செய்யுந்திமையில் அவதிப்படும் அந்தரத்தவர், சதுமு
னை முதலாகக்கொண்டு, சாம்பவிபால் வந்து சாஷ்டாங்கமாகப்ப
ரிந்து "தாயே! தமது திருமேனியி னின்றோர் சத்தியை யுதிப்பித்
, தானவர் குழாத்தைச் சங்கரித்து, வானவருக் கருள்வழங்கவே
ரடும்" எனப் பிரார்த்தித்துக் காத்திருந்தனர். மலையரச புத்திரியா
கியவிமலை, மஹாதேவரது திருவருளாற் கௌரநிறமாங்காலஞ் சமீ
த்தது. அப்பொழுது அன்னையார் தமது காளநிறத்தை விலக்க, அ
வே துர்க்கையென்னுஞ் சத்தியாய்ப் பிரமனுற்கொடுக்கப்பட்ட சி
கவாகனமேறிஉமையம்மையார் கட்டளைப்படி நிருதனைக்கொன்று
ந்தகிரியில் வீற்றிருக்கின்றனள். பரமேச்சுவரியார் புராரியின் திரு
நளாற் பொன்னிறமுற்றுக் கௌரியென்னும் பெயர்பெற்று, மந்த
மலையை யடைந்தனர். திருநந்திதேவர் முதலிய சிவகணநாதர்கள்
ருவடிபரவத் திருச்சந்நிதானத்தி னுட்சென்று சிவபிரானைச் சேவி
துத் திருக்கரங் கூப்பிநின்றனர். மங்கையைத் தமது செங்கையா
லெடுத்துச் சங்கரர் தமது திருத்தொடைமீதி லிருத்தினர்.

சிவபெருமானைநோக்கி உமையம்மையார் தமது கருமைநிறத்
ாலெய்திய காளியென்னும் பெயர்நீங்கிப், பொன்னிறமாகிய திருமே
ியும் கௌரியென்னுங் காரணத் திருநாமமுமெய்தக் கையேற்றுச்
ந்நிதியில் வரங்கொண்ட மூர்த்தமே கௌரிவரப்த மூர்த்தமெனப்ப
ம்.

கௌரீவரப்த மூர்த்தயேநம:

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## ஐம்பத்துநான்காவது.

# சக்ரதாநஸ்வரூப மூர்த்தி



உலகமுழுவதும் ஒரே செங்கோலினலரசுபுரிந்துவந்த ருபவ
என்னும் மன்னன் காரணமாகத் திருமால், ததீசிமுநிவரை யெதிர்
துச் சமர்புரிந்து சகிக்கமுடியாராய்த் தமது சக்ராயுதத்தை அம்மு
புங்கவன்மேல் பிரயோகிக்க, அது அம்முநி சிரேஷ்டரது வச்சி
யாக்கையிற்றாக்கி வாய்மடிந்து மீண்டது. அதுகண்ட அச்சுதன் அ
சமுற்று, மாயாரூபமொன்று தன் போலுண்டு செய்தனன். முநிவ
முனிந்து தமது காற்பெருவிரலை யசைக்கக் கணக்கில்லாத விஷ்
மூர்த்திகள் வெளியே தோன்றினர். அதனால் அவர் தவவலி மிகு
வென்றும், அவரை வெல்லத்தக்கவல்லமை தன்னிடத் தில்லையெ
றும் சார்ங்கன் தெரிந்து, அம்முநிவரைச் சரண்செய்து மீண்டு த
னுடன் போந்தவானவரை நோக்கி, "யான்தீயரைச்செகுத்து உல
ப்புரக்கும் திதிக்கடவுளாதலின், எனக் கித்தகைய சக்ரம் இன்றி
மையாதது ; இதுபோல வேறொன்று யாண்டுப்பெறுவேன்" என்
சைத்துவருந்த, இமையவர் "சலந்தரனென்னுந் தானவத் தலைவ
ச் சங்கரன் சங்கரிக்குமாறு திருவடியாற்கீறி நிருமித்த சுதரிசன
ன்னுஞ் சக்கரப்படை அம்மகாதேவன் பாலுள்ளது" என மறும
றங் கூறினர்.

அதுகேட்ட திருமால் சிந்தை களித்துச்சிவார்ச்சனையா
னையடைவேனென் றுள்ளத்தமைத்து, ஓர் சிவலிங்கக்குறியை ஸ்
பித்துப் பாசுபத விரதம்பூண்டு சற்கற்பஞ்செய்து திருவெண்
தரித்து அக்கமாலைசூடி, தேவர்கள் பூசைக்குரிய உபகரணங்கள



54. சக்ரதானஸ்வரூப மூர்த்தி.

தஞ் செய்துகொடுக்கப் பரமபதியைப் பதுமமலர் ஆயிரத்தால் நா
றும் பவன் முதலிய திருநாமங்களோதி அருச்சிக்கத் தொடங்
ர். அவ்வாறு நிகழ்ந்துவருகையிற் பத்திவலையிற் படுவோராகிய ப
மச்சுரன் அவரதன்பின் முதிர்ச்சியை ஆர்கலி சூழ்ந்த அவனிமாக்
களறிவிக்க ஆயிரங் கமலத்தில் ஒரு சலசத்தை மறைவாக்கினர்.
விரும் வுணராராகிப் பண்டுபோல் பவன்முதலிய சகஸ்திரத் திருநா
ங்களையோதி ஒவ்வொரு கஞ்சமாகவெடுத்துப் பூசித்துவந்து கடை
யில் ஓர் திருநாமத்திற்கு மலர் காணாராய் "இஃதென்னையாளாக
உடையார் திருவிளையாட்டு" என்றெண்ணி, தமது பூசை முட்டுப்ப
வண்ணம் விழியொன்றைப் பிடுங்கி மலராகப் பாவனைசெய்து
அர்ச்சித்து முடித்து ஆனந்தக்கடலுளாழ்ந்தினர்.

உடனே பிறைசூடியபெருந்தகைப்பார்களிகூர்ந்தவராகிச்சோ
தியமான பேருருவுடன் தெரிசனந்தர, திருமால். அட்டாங்கபஞ்
சாங்கமாகப் பலமுறை பணிந்து தோத்திரங்களாற் றுதித்துக்கை
கூப்பி நிற்க, கருணைவள்ளல் "கமலக்கண்ணவ! உனது பூசைக்கு மன
மகிழ்ந்தோம். உனது கண்ணையளித்தோம். கமலக்கண்ணன் என
ப்பெயரடையக்கடவாய்" என்று திருவாய்மலர்ந்து தமது திருக்கரத்
திருந்த சுதரிசனம் என்னுஞ் சக்கராயுதத்தைப் பிரசாதஞ்செய்து
"எத்தகைய வலியினராயினும் நின்னை யெதிர்த்தோரை இஃது இமை
ப்பளவிற் கொல்லும் ஆற்றலுடைய தென்றநுக்கிரகித்தனர். திருமா
லிவ்வரங்களையும் சுதரிசனத்தையும் பெற்றுப் பலமுறை பணிந்து
துதியாற்போற் கண்களில் ஆநந்தபாஷ்பஞ்சிந்தப் பலவகையாகப்
பாடி ஆநந்தக்கூத்தாடி எம்பெருமானது திருவடியை முடியிற்சூடி
வைகுந்தத்தைநாடி இடையறாச் சிவபக்தியுடன் வீற்றிருந்தனர்.

## ஸ்காந்தபுராணம்.

தத்சிரோநிர்ஹ்ருதஸ்த்வம்ஸம்க்ராமே ஸமருக்ஷணே:-கண்டேயம்மாதுஸ்ஸுதி
ஸ்தி கதம்தத்விஸ்ம்ருதம்த்வயா - சக்ரம்விக்ரமஸாஹாய்யம்சக்ரபா
ணி ததவப்ரியம்-குதஃக்ருதம்தேநயச்சத்வ யாத்தபிவிஸ்ம்ருதம்.

దధీచినానిర్జితస్త్వంసంగ్రామేసమరుద్గణః। కండూయమానశ్శిరః
కథంతద్విస్మృతంత్వయా। చక్రంవిక్రమసాహాయ్యం చక్రపాణేతవప్రియం
కుతఃకృతంకేనయచ్చత్వయాతదపివిస్మృతం ॥

**ஆதித்ய புராணம்.**

*ஸுதர்ஶநாக்யம்யச்சக்ரம்லப்தவாநஸ்தத்கதம்ஹரி :! மஹாதேவ த்ப்கவதஸ்ஸூததத்வக்துமர்ஹஸி! இத்யாதி! ஹிமவத்பர்வதம்கத்வ பூஜய மாஸஶங்கரம் லிங்கம்தத்ரப்ரதிஷ்டாப்யஸ்நாப்யகந்தோதகை ஶுபை : ஹ்ருதபுஷ்போஹரிஸ்தத்ரகிமிதம்த்விதிசிந்தயந் ஜ்ஞா த்வாஸ்வநேத்ரமுத்த்ருத்ய ஸர்வதம்த்ராவலம்பநம் பூஜயாமாஸதே வேஶம் ! இத்யாதி ! ஏவமுக்த்வாததௌசக்ரம்ஸூர்யாயுதஸமப்ர பம் நேத்ரஞ்சபத்மஸத்ருஶம்விஷ்ணவேப்ரபவிஷ்ணவே லோகே புண்டரீகாக்ஷஇதிக்யாதிம்கதோஹரி :! இத்யாதி ! மயிபக்திர்த்ருட விஷ்ணோபவிஷ்யதிதவாநக ஆஜேயஸ்த்ரிஷு லோகேஷுமத்ப்ரஸ தாத்பவிஷ்யஸி.*

ఆదిత్యపురాణం.

సుదర్శనాఖ్యంయచ్చక్రంలబ్ధవాంస్తత్కథంహరిః। మహాదేవాద్భ
వతస్సూతతద్వక్తుమర్హసి। ఇత్యాది। హిమవత్పర్వతంగత్వా పూజయ
మాసశంకరం। లింగంతత్ర ప్రతిష్ఠాప్యస్నాప్యగంధోదకైశ్శుభైః। హృ
పుష్పోహరిస్తత్ర కిమిదంత్వితిచింతయన్। జ్ఞాత్వాస్వనేత్రముద్ధృత్యసర్వత
త్రావలంబనం। పూజయామాసదేవేశం। ఇత్యాది। ఏవముక్త్వాదదౌ
చక్రం సూర్యాయుతసమప్రభం। నేత్రంచపద్మసదృశంవిష్ణవేప్రభవిష్ణవే
లోకేతుపుండరీకాక్ష ఇతిఖ్యాతింగతోహరిః। ఇత్యాది। మయిభక్తిర్దృఢ
థావిష్ణోభవిష్యతితవానఘ। అజేయస్త్రిషులోకేషుమత్ప్రసాదాద్భవిష్యసి

**வாமந புராணம்.**

*அதாப்யேத்யஜகந்நாதம்ஸஹஸ்ரஶிரஸம்விபும்-ஆராதயாமா ஹரி : ஸ்வயமாத்மாநமாத்மநா-ஸாங்கவர்ஷஸஹஸ்ரந்துபாதாங்கு*

—நதஸ்ஸிவாந்-தத: ப்ரீதோஹரஃ ப்ராதாத்விஷ்ணவேதுவரம்பரம்-
ப்ரத்யக்ஷம்தைஜஸம்ஸ்ரீமத்திவ்யசக்ரம்ஸுதர்ஸநம் ! ப்ரதேஸாந்தர
அமோகஏஷோமரராஜபூஜிதோ'-ஹ்ருதோமயாநேத்ரகதஸ்தபோ
பலாத்.

### వామనపురాణం.

అథాభ్యర్చ్యజగన్నాథం సహస్రశిరసంవిభుం । ఆరాధయామాసహ
స్వయమాత్మానమాత్మనా । సాంగవర్షసహస్రంతుపాదాంగుష్ఠేనతస్థి
వాన్ । తతః ప్రీతోహరః ప్రాదా ద్విష్ణవేతువరంపరం । ప్రత్యక్షంతైజసం
శ్రీమద్దివ్యచక్రంసుదర్శనం । ప్రదేశాంతరం । అమోఘ ఏషోమరరాజ
పూజితోహృతోమయానేత్రగతస్తపోబలాత్ ॥

### ஹரதத்தர் வாக்கியம்.

காயத்ரிவல்லபத்வாத்தஸரதநயஸ்தாபிதாராதிதத்வாச் சௌ
ரை: கைலாஸயாத்ராவ்ரதமுதிததயாபீஷ்டஸந்தா நதாநாந்நேத்ரே
ணஸ்வேநஸாகஸ்ரஸதகமலைர் விஷ்ணுநாபூஜிதத்வாத்தஸ்மைசக்ர
ப்ரதாநாதபிசபசு பதிஸ்ஸர்வதேவப்ரக்ருஷ்ட:

గాయత్రీవల్లభత్వాద్ద శరథతనయస్థాపితా రాధితత్వాచ్ఛౌరైః
కైలాసయాత్రావ్రతముదిత తయాభీష్టసంతానదానాన్నేత్రేణస్వేనసా
హస్రశతకమలై ర్విష్ణునాపూజితత్వాత్తస్మై చక్రప్రదానాదపిచపశుపతిస్స
ర్వదేవప్రకృష్టః ॥

அவ்வதாரகோலத்திலே ததீசிமுனிவர் மகிமையை அறியாமை
யால் அவர்பேரில் திருமால் பிரயோகித்த சக்ரம் கூர் மழுங்கித் திரு
ம்பிய தாதலின், அதற்குப் பிரதியாகச் சிவபிரானை யருச்சித்துப் பெ
ருவலியமைந்த ஸுதர்ஸநத்தைப் பெற்றனரென்பதற்கு, ஈண்டுச்சில
ப்ரமாணங் காட்டினோம். ஆனால் விஷ்ணுஇராமகிருஷ்ணதி அவதார
ங்களிலே மட்டும் சிவார்ச்சனை இயற்றினரா அல்லது அவதாரகோல

மல்லாத ஆதி காலத்தும் சிவபூசை செய்துள்ளாரா எனப் பரியா லோசிக்கும்பக்ஷத்தில், சிவபிரான் பூஜிதனென்றும் வரதனென்றும், திருமாலே பூஜகரும் சிவவரலப்த மஹானென்றும் தெரியவேண்டும். அவற்றிற்குச் சில நியாயங் காட்டுவோம்.

ருக்வேதம்.

தவஶ்ரியேமருதோ மர்ஜயந்தேருத்ரயத்தேஜநிமசாருசித்ரம்
பதம்யத்விஷ்ணோருபமந்யதாயிதேந.

ఋగ్వేదం.

తవశ్రియేమరుతో మర్జయంతెరుద్రయత్తెజనిమచారుచిత్రం। పదం యద్విష్ణోరుపమన్యధాయి తేన ॥

பராஶரபுராணம் ஷோடஶாத்யாயம்.

ரௌத்ரலிங்கம்மஹாவிஷ்ணுர்பக்த்யாசாருஶிலாமயம் - சாருசி த்ரம்ஸமப்யர்ச்யலப்தவாந்பரமம்பதம் - ஸாசலக்ஷ்மீஸ்ஸமாக்யாதா மஹாவிஷ்ணோஸ்துவல்லபா - யஸ்யலிங்கம்ஸமப்யர்ச்ய ஸபூஜ்ய: ஸர்வசேதநை:—எனப் பிரதிபாதிக்கும் வேதபுராண வாக்கியங்களில் ஆதிவிஷ்ணுவென்றும் மஹாலக்ஷ்மி யென்றுங் கூறப்பட்டதாகை யால் அவதாரங்களில் மட்டுமல்லாமல், அநந்தரம் அச்சுதன் அரனடி யரோயாவர். பாரதம் துரோணபர்வத்தில் வியாஸாஶ்வத்தாமஸம் வாதத்திலும் வராஹபுராணத்திலும் இன்னும் பல இடங்களிலும் பிரமாணங்கள் விளங்கிக் கிடக்கின்றன. விஸ்தாரபயத்திற்கு வெருவி விடுத்தாம்.

పరాశరపురాణం.

రౌద్రలింగం మహావిష్ణుర్భక్త్యాచారుశిలామయం। చారుచిత్రంస మభ్యర్చ్యలబ్ధవాన్ పరమంపదం। సాచలక్ష్మీస్సమాఖ్యాతా మహావిష్ణోస్తు వల్లభా। యస్యలింగంసమభ్యర్చ్యసపూజ్యఃసర్వచేతనైః ॥

இனி அவர் ததிசி முனிவர் மேற்பிரயோகித்த சக்ராயுதம் பண்டைக்காலத்தி லப்பதுமநாமனுக்கு எவ்வாறு கிடைத்தது என்பதை பற்றியுஞ் சிறிது ஈண்டுக்கூற வேண்டுவதாயிற்று.

அசுரர் தொந்தரவைச் சகியாத தேவர் வேண்டுகோளுக் கிரங்கி அவர்களைச்சங்கரிக்கத்தக்க ஓர்ஆயுதம் தனக்கு வேண்டுமென்று நதிய திருமால் இமயமலைச்சாரலில் ஓர் சிவலிங்கப்பிரதிட்டைசெய்து நாளொன்றுக்கு ஆயிரந்தாமரை மலர்களால் அநேக காலஞ் சிவார்ச்சனை செய்துவந்தனர். ஒருநாள் உமாபதி அவர் பத்திமுதிர்ச்சியைப் பரிசோதிக்கும்படி பதுமமொன்று மறைக்க, மாதவன் தன் கண்ணொன்றைக் கமலமாகப் பாவித்து அருச்சித்தனர். அப்பொழுது அருள்வள்ளல் இடபாரூடராய்த் தரிசனந்தந்து ஓர் சக்கராயுத முதவி இதனால் அசுரரை யழித்தி என்றருளி, கண்ணையும் முன்போற் படைப்பித்துச் செந்தாமரைக் கண்ணனெனப்பெயருங் கொடுத்தனுப்பினரென ஆதித்தபுராணத்திற் படிக்கப்பட்டுளது.

முன்னோர் ஆத்தியந்திகப் பிரளயமகன்ற சிறிதுகாலத்தில் பரமேசுவரர் மீண்டும் பிரபஞ்ச நிர்மாணத்தில் திருவுள்ளங்கொண்டு ப்ராக்ருத ப்ராக்ருதஸ்ருஷ்டிகள் சிறிதுசெய்து பிரமவிஷ்ணுக்களை பிறப்பித்து, "நீங்களிருவருங் கிரமமாகச்சிருட்டி ஸ்திதிக்கர்த்தர்களா யிருங்கள்" எனத் திருவாய்மலர்ந்தருளினர். அப்பொழுது விஷ்ணுவிமலனைப்பணிந்து "சுயம்பிரகாசா! துஷ்ட நிவாரணத்தின்பொருட்டுத் தகுதியான ஆயுதமொன்றைத் தயவு செய்தருளவேண்டும்" என விண்ணப்பித்துக் கொண்டனர். சிவபிரான் அவ்வாறே தமது நேத்ர த்ரயத்தால் ஸூர்ய ஸோமாக்நிகளின் தேஜஸு பொருந்திய சக்ரமொன்று நிருமித்து அதனாலேயே கதையொன்று பிறப்பித்துக் கொடுத்தனர். அப்பொழுது பக்கத்திலிருந்த பராசத்தியாகிய உமாபிராட்டியார் தமது திருமுகத்தினால் ஓர் சங்கும் திருநேத்திரத்தினால் ஓர் பத்மமும் பிறப்பித்து, அவற்றைத் தாங்குதற்கு முன்னிருந்த இ

ருகரத்துடன் நூதனமாக இரண்டத் தங்களையுமுண்டுசெய்து பிரசா
தித்தனர். இச்சரிதம் ஸ்கந்தருக்கும் அகஸ்திய முநிவருக்கும் நடந்த
ஸம்பாஷணையிற் சாற்றப்பட்டுள்ளது.

ஸ்காந்தபுராணம் ஈஶாநஸம்ஹிதை.

இத்யுக்தோபகவாந்ஶர்வோஹரிஞ்விஶ்வமூர்த்திநா | தமாஹமே
கநாதேநஸர்வேணஹரமீஶ்வர: | ஆயுதம்சாஸ்ய்தாஸ்யாமிதபோவிக்
நாபநுத்தயே! தேவாரீணாஂசஸம்ஹத்யைரக்ஷாயைஜகதாமிஹா | இ
த்யுக்த்வாபகவாந்விஷ்ணுஂதேவதேவஉமாபதி:!ஏகாக்ரமநஸாத்யாநம
கமத்பரமேஶ்வர: | த்யாயதஸ்தஸ்யதேவஸ்யப்ராதுராஸீத்தமோநு
தம்!ஶாருநேத்ரத்ரயாதஸ்ய ஸஹஸ்ராதித்யஸந்நிபம் | அக்நேஸூர்
யாச்சஸோமாச்சதந்மயாப்லோசநத்ரயாத் | த்ரிதேஜோமயமத்யுக்ர
ம்ஜ்ஞாநாஸ்த்ரம்வஜ்ரபஂஜரம் | நாபௌஸோமாம்ருதமயோஹ்யகோ
ஷூ பகவான்ரவி: | ப்ராஂதேஷுபகவாநக்நிஶ் சக்ரஸ்யஸ்யாச்சிவா
த்வந:—ஸசக்ரமதிமாந்பூத்வாகிஂகரோமீத்யபாஷத | க்ருதாஂஜலிக
ரஸ்தஸ்தௌபஹுபாஹுஸ்த்ரிலோசன: | தஂசக்ரம்பாணிநாலம்ப்
யவிஷ்ணவேப்ரததௌஶிவ: | விஷ்ணோர்வைதக்ஷிணம்பாஹுமப
ஜத்ஸோபிஹர்ஷித: | ததோதேவஸ்யவைஶம்போர்கதாகக்ராத்வி
நிஸ்ஸ்ருதா | தைத்யதர்பஹராகோராஸர்வரத்நவிசித்ரிதா | ஷட்
சாஸ்த்ரரூபிணீதிவ்யாஷட்தாராஸ்த்ரீஸ்வரூபிணீ | ஆஜ்ஞப்தாஶம்
புநாசாபிவிஷ்ணுமேவஸமாஶ்ரிதா | வாமமாஶ்ரித்யவைபாஹுஂவி
ஷ்ணோஸ்தஸ்யஸ்திதாபவத் | ததோதேவீஜகத்தாத்ரீபவாநீஸாபரா
த்பரா ஶிவாங்கஸஂஸ்திதாதத்யௌ விஷ்ணோரர்டேஶஸஂஜ்ஞயா |
தஸ்யாவக்த்ராத்ஸமுத்பந்ந: ஶங்கராஜஶ்ஶஶீப்ரப: | ஸர்வதேவம
ய:ஶாந்த:ஸர்வஶத்ருநிபர்ஹண: | ஸோப்யாஜ்ஞப்தஸ்தயாதேவ்யா
விஷ்ணோ:பார்ஶ்வமதாகமத் | தேவ்யாநேத்ராத்ஸமுத்பந்நமம்புஜஂ
ஸுப்ரபம் ஶுபம் | ரமாலயமநோஹாரி ஸர்வலோகவிபூஷணம் |
தஞ்சவிஷ்ணும்மஹாத்மாநமாஜ்ஞயாபத்மமுத்தமம் | ஸமாஶ்யேத்
ததோவிஷ்ணுர்விஸ்மயம்பரமம்யயௌ | பூர்வம்துத்விபுஜோவிஷ்

ர்கதாம்சக்ரஞ்சஹர்ஷிதः | ததாரஸம்புநாஜ்ஞப்த : ஸதுசிந்தாம
பரூ | த்விபுஜோஹம்கதம்த்வத்ய ஆயுதாநாம்சதுஷ்டயம் | தரி
பாம்யம்பயாதத்தாவுபௌஸங்காம்புஜாவபி | ஏவஞ்சிந்ததஸ்தஸ்
விஷ்ணோ:தேவ்யா:ப்ரஸாதத : — ப்ராதுராஸ்தாம் கரௌபீநௌ
ப்யாங்தௌசாப்யதாரயத் | ததோவிஷ்ணு : ப்ரஸந்நாத்மாஸங்க
ரகதாதர: | நமஸ்க்ருத்யஶிவம்ஶாந்தம் க்ருதார்தோஸ்மித்யபா்
த ! ததோஜலதகம்பீரகோஷேணபகவாந்சிவ : ! விஷ்ணுமாஹம
த்மாநம்க்ருதார்தோ ஸிதிகேஶவ : இத்யுக்த்வாம்தர்ததேதேவ : ப
ராத்மாஸதாஶிவ: ||

## స్కాందపురాణం.

ఇత్యుక్తో భగవాన్ శర్వో హరిణా విశ్వమూర్తినా । తమాహ మేఘ
ఘోషేణ సర్వేశో హరిమీశ్వరః । ఆయుధం చాస్య దాస్యామి తపోవిఘ్నాపను
త్తయే । దేవారీణాంచ సంహర్త్యై రక్షాయై జగతామిహ । ఇత్యుక్త్వా భగవా
న్ శంభుం దేవదేవ ఉమాపతిః । ఏకాగ్రమనసా ధ్యానమగమత్పరమేశ్వరః ।
ధ్యాయతస్తస్య దేవస్య ప్రాదురాసీత్తమోనుదం । చారునేత్రత్రయాద
సహస్రాదిత్యసన్నిభం । అగ్నేః సూర్యాచ్చ సోమాచ్చ తన్మయాల్లోచన
త్రయాత్ । త్రితేజోమయమత్యుగ్రం జ్ఞానాస్త్రం వజ్రపంజరం । నాభౌ సో
మ్యతమయో హ్యరేషు భగవాన్ రవిః । ప్రాంతేషు భగవానగ్నిశ్చ క్ర
స్యాప్యాత్మనః । స చక్రం మతిమాన్ భూత్వా కింకరోమీత్యభాషత ।
ప్రాంజలిః కరయోస్తస్థౌ బహుబాహుస్త్రిలోచనః । తం చక్రం పాణినాలంబ్య
ప్రదదౌ శివః । విష్ణోర్వై దక్షిణం బాహుమభజత్సోతిహర్షితః । త
దేవస్య వై శంభోర్గదా గక్రాద్వినిస్సృతా । దైత్యదర్పహరా ఘోరా
రత్నవిచిత్రితా । షట్చక్రరూపిణీ దివ్యా షడ్ధారా శ్రీస్వరూపిణీ ।
ప్రాప్తా శంభునా చాపి విష్ణుమేవ సమాశ్రితా । వామమాశ్రిత్య వై బాహుం
తస్య స్థితాభవత్ । తతో దేవీ జగద్ధాత్రీ భవానీ సా పరాత్పరా । శి
రస్సంస్థితా దధ్యౌ విష్ణోరర్ధేశసంజ్ఞయా । తస్యా వక్త్రాత్సముత్పన్నః

శంఖరాజశ్శశిప్రభః । సర్వదేవమయః శాంతః సర్వశత్రునిబర్హణః । సో
ప్యాజ్ఞప్తస్తయా దేవ్యా విష్ణోః పార్శ్వమథాగమత్ । దేవ్యా నేత్రాత్సము
త్పన్నమంబుజం సుప్రభం శుభం । రమాలయమనోహారి సర్వలోకవిభూషణం ।
తం చ విష్ణుం మహాత్మానమాజ్ఞయా పద్మముత్తమం । సమాశ్రయేత్తతో విష్ణు
ర్విస్మయం పరమం యయౌ । పూర్వం తు ద్విభుజో విష్ణుర్గదాం చక్రం చ హ
ర్షితః । దధార శంభునాజ్ఞప్తః స తు చింతామవాప హ । ద్విభుజోహం కథం త్వ
ద్య ఆయుధానాం చతుష్టయం । ధరిష్యామ్యంబయా దత్తౌ పుష్పౌ శంఖాంబు
జావపి । ఏవం చింతయతస్తస్య విష్ణోర్దేవ్యాః ప్రసాదతః । ప్రాదురాస్తాం కరౌ
పీనౌ తాభ్యాం తౌ చాభ్యధారయత్ । తతో విష్ణుః ప్రసన్నాత్మా శంఖచక్రగదా
ధరః । నమస్కృత్య శివం శాంతం కృతార్థోస్మీత్యభాషత । తతో జలదగం
భీరఘోషేణ భగవాఞ్ఛివః । విష్ణుమాహ మహాత్మానం కృతార్థోసీతి కేశవః
ఇత్యుక్త్వాంతర్దధే దేవః పరమాత్మా సదాశివః ॥

ஈண் டெடுத் துதகரித்த பிரபல பிரமாணத்தானே திருமால் ஆதிகாலத்திலேயே சிவாநுக்கிரகத்தால், சக்ராயுத தண்டாயுத களும், சாம்பவியின் கிருபையினால், சங்கமும் முன்னிருந்ததுடன் இரண்டு கரங்களும் பெற்றனரென்பது புலப்படும். அவ்வாறு சி கடாக்ஷத்தாற் சக்கரம்பெற்றதை மறந்து விஷ்ணு ஒருகாலத்தி இறுமாப்புற, அஃது மறைந்துவிட்டது: அச்சமத்திலும் அதைப்பெ றும்படி சிவார்ச்சனை செய்து மறுபடியும் பெற்றனரென வேறு உபாசனையும், ஷை ஸ்காந்தபுராணம் ஈசாநஸம்ஹிதை விளக்கு ன்றது. [விரிதல் கருதி இதுவரையும் நிறுத்தப்பட்டது.] இத்திய திநியாயங்களால் நான்குமுறையில் நாராயணன் சக்ராயுதநிமித்தம ய்ச் சங்கரோபாசனை செய்தவற்றை நிலைநாட்டப்பட்டது.

“சலமுடையசலந்தரன்றனுடறடிந்தநல்லாழி
நலமுடையநாரணற்கன்றருளியவாறென்னேடீ
நலமுடையநாரணன்றனயனமிடந்தரனடிக்கீ
ழலராகவிடவாழியருளினன்காண்சாழலோ.” திருவாசகம்.

## கூர்மபுராணம்.

### மாயோன் நேமிபெற்றஅத்தியாயம்.

"...வையம்போதிக்த செங்கனிவாய்மாயோனன்புக்குண் மகிழ்வுற்
...மயன்கைசயாற்புநீவியடியிற்புனைந்தமலர்க்கண் ...
...ப்தசல்கிச்சுதரிசனமென்னுஞ்சுடராழியுமீந்து
...செய்யகமலக்கண்ணனெனும்பெயருஞ்சிறப்பினெடுமேளித்தான்."

## உபதேசகாண்டம்.

...என்னப்போற்றிமுடிபடிதொட்டிழுகப்பணிந்தானெழுநோக்கி
...ன் ...ச்சடைபோன் றிருவருள்கூர்ந் ...ருகாகின்றான்விழுக்கமலக்
...ணிக்கிறைவன்கருத் துணர்ந்துகதிராயிரம்போன்றொளிபரப்பும்
...ரான்னத்திகிரிபுரிந்துபின்னுமிமதுவேண்டுவதுபுகலென்றான்.
...ப்பாலுருகினாடிக்கீழ்நெடுங்கண்சாத் துநிலையுலக
...பாலறிவாளெனக்கி...கணம்போருகத்தினருள்கென்ன
...ன்பாலுசுந்தோன ...த்தருளிவேண்டவேண்டும்வரங்கொடுத்தான்
...ரான்பான்மருமத்திகிரிபினைனடைந்தானமரர்புடைபோற்ற."

## காஞ்சிப்புராணம்.

" ...ங்கவனையெதிர்நோக்கிநின்பூஜைக்ககமகிழ்ந்தே
    முனக்கின்ஞான்று
தேங்கமலவிழியளித்தோம்பதுமாக்கனெனும்பெயரிற்
    ...திகழ்வாயிவ்வூர்
பாங்குபெறுதிருமாற்பேறெனப்பொலிகவென்றருளிப்
    பானுகோடி
தாங்குகதிர்ச்சுதரிசனப்பெயராழித்தனிப்படையு
    முதவியெங்கோன்."

திருமால் வீரபத்திரர்பேரில் தக்ஷயாகத்தில் சக்ரத்தை விடு...
..., அவர் தலைமாலையி லொன்று அதனை விழுங்கியது. பின்னர் விக...
...க்கூத்தாடி அதைச் சிரிக்கச்செய்தனர்; அதனால் சக்கரம் நழுவி
...யினின்று..., ஸ்ரீ விநாயகக்கடவுள் மீண்டும் அங்கடங்காணவிரு...
...ி எடுத்து மறைத்துவிட்டமையால் அவர் மகிழும்படி அவ்வாறே

கூத்தாடி அவர் திருவருளாற் பெற்றனரெனக் காஞ்சிப்புராணங் கூறும்.

"போராழியதன்வாயிற்கழிந்துபுவிமின்சவீழப்
பொருக்கென்றங்கை
யேரானைமுகக்கடவுளதுகவர்ந்தங்கறியான்போன்
றிருப்பநோக்கிப்
பேராண்மைப்படைத்தலைவனினிச்செயலேதென்றழுங்கிப்
பேதுற்றந்தச்
சீராளன்றிருமுன்புங்கைகண்டவிகடநட்ஞ்
செய்துவேண்ட.

எக்கறவானவரியற்றும்விகடநடநெடும்போதெம்
பெருமானோக்கி
மாக்கருணைசுரந்தருளியாழியவன்றனக்களித்தான்—"

சிவபெருமான் தம்மிடத் திடையறாத அன்புகொண்டு அருச்சித்த திருமாலுக்குச் சக்ராயுத முதவினமையால், அப்பெருமானுக்குச் சக்ரதாநஸ்வரூப மூர்த்தியென ஓர் திருநாமம் வேதாகமபுராணங்களில் விளம்பப்பட்டது.

சக்ரதாநஸ்வரூபமூர்த்தயேநம:

---



௭. சுகாசன மூர்த்தி.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## ஐம்பத்தைந்தாவது

# கௌரிலீலாசமந்வித மூர்த்தி.



திருக்கைலாயகிரியிற் சிங்காதனத் தெழுந்தருளியிருந்த சிவ
ருமானது திருவடிகளைத் தேவியா ரெழுந்து பணிந்து நின்று
றைவரோ! எங்கும் நிறைந்த தேவரீரது உண்மைநிலையை யுப
த்தருளவேண்டும்" என விண்ணப்பிக்க, சுயம்பு "உமையே!
யல் குண வுருவங்களைப் பொருந்தோம்; சர்வவியாபகமாக விள
ங்குவோம்; உருவம் அருவம் உருவருவங்களைப் பொருந்துவோம்"
று திருவாய்மலர்ந்தருளினர். உமாதேவியார் "உருவமுடையே
ல மென்றும், பல வுருவமுடையேமென்றும் உரைக்குந் தன்மை
து?" என வோத, ஐயன் "அவை நம தருள்வடிவம்" என்ற
ய, அன்னையார் "ஆயின், அவை யென்வடிவங்களே" என்றிசை
னர். நம்பர் "நம்மெதிரில் உன்னை வியந்துகூறினை; உன்னிடத்
ம் ஏனையோரிடத்திலும் யாமே நின்று தொழில்படுத்துகின்றோம்;
வாறு தொழில்படுத்துதல் நீங்கினால் அகிலசராசரங்களும் அறிவு
ழுவதும் ஒழிந்து சடமாயிருக்கும்; அதனை யறிக" என்று மறு
ற்ற மருளி, திருமால் திசைமுகன் முதலிய தேவரது உள்ளத்தி
பொருந்தி அறிவினை யளிக்குஞ் செயலை நீங்கிக் கணப்பொழுதிரு
, அகிலான்மாக்களும் அறிவிழந்தவர்களாய்த் தமதுமுறை தவ
சடமாயிருப்பதைக் கௌரிகண்டு, கங்காதரனது கழல்பணிந்து
ம்பெருமானே! எளியே னிசைத்ததை யெண்ணாமல்ரவளையு
ழுப்பியருளவேண்டும்" என்றிரப்ப, இறைவர் கருணை பூத்து
ளையுமெழுப்பினர்.

விண்டு முதலானோர் பண்டைய வுணர்வுறத் துயில்நீங்கினோர் போலத் துண்ணென் றெழுந்து அண்ணலைப் பணிந்து "எளியேங்கள் எண்ணில்காலம் அறிவடங்கிச் சடமாய்ச் செய்கடன் மறந்தோமாதலின், அப்பாவம் அகலும் வகையை அருள்செய்யவேண்டும்" என விண்ணப்பிக்க, உத்தமன் "உம்பர்களே! அப்பாவம் உமையிடத்ததன்றி, உங்களிடத்ததல்ல" என்றோதி யகற்றி, சாம்பவியை நோக்கி "நீ * தக்கன்மகளாய்த் தரணிமேற் றோன்றுதி; யாம் வந்து மணஞ்செய்வோம்" என ஆஜ்ஞாபிக்க, விமலை விடையூர்தியைப் பணிந்து விடைகொண்டு, காளிந்திநதியிற் கமலமலரின்மேல் வலம்புரி வடிவாய்ச் சிவநாமங்களை யுச்சரித்துக்கொண்டு, சிறிதுநாளிருந்தனள். மாசிமாதத்தில் மகநக்ஷத்திரத்தில் தக்கன் தன்மனைவி வேதவல்லியுடன் ஸ்நானஞ்செய்து திரும்புகையில், இறைவியாரது வலம்புரிச்சங்கவடிவைக்கண்டு கைகளிற்றாங்க,குழந்தைவடிவேற்றமையாற் களித்து மனைவி கையி லளித்து, உடன்கொண்டு ஊரையடைந்தனன். வேதவல்லி மாதேவியை வளர்த்து வந்தனள்.

அம்மையார் ஐந்துவயதடைந்து "சிவபிரான் தன்னை மணஞ்செய்யும்படி தவஞ்செய்வேன்" எனத் தந்தைபாற்கூற, தக்கன் தன் மகளாகிய தாக்ஷாயணி சாற்றியதற்குச் சாலவுங் களித்து அந்நகர்ப்புறத்தே ஓர் கன்னிமாடஞ் செய்வித்துச் சில கன்னியரோடும் அதில்விடுப்ப,பரை அரனை நோக்கிப் பன்னீராண் டலகையு மெல்லையுந் தவத்திருந்தனள். அவ்வாறிருக்கையில், சிவபெருமான் தக்கமாபுரியில், தாக்ஷாயணியின் தவச்செயல்காண விரும்பி, விருத்த வேதியராய் எழுந்தருள, எம் மன்னையார் கண்டு, இவர் பெரியரொன் றுட்கொண்டு, எதிர்சென்று பாதம் பணிந்து நிற்க, மாதேவர் "மாதே! உன்பா லொரு வேட்கையால் வந்தேம்; கொடுப்பதாகிற் கூறுதும்" என, அம்பிகை "அஃ திசையுமாகிற் றருதும்; அறைக" என,ஐயர் "உன்னை வதுவைசெய்ய உள்ளங்கொண்டுவந்தோம்; இசைக"

---

*இவ்வரலாற்றை இச்சரிதத்தி னிறுதியிற் காண்க.

ன, இறைவியார் "இருகரங்களாலுஞ் செவித்தொளையைப் பொத் ப்பாரினை மணக்குந் தம் புரிமேனுக்கு இவ்வாறு புகன்றனே; ா! போ!" என்று அங்கிருந்து விலகிச் செல்ல, பரமர் அங்கிரு பாங்கெ ரறியாது தமது நிஜவடிவைப் பார்ப்பதிக்குக் காட்ட, ம்மை அளவில்லா மகிழ்ச்சிகொண்டு ஜயனைப் புகழ, அதுகண்ட டியர் சிலர் "இவன் மாயம் வல்லோன்" என்று மனத்துட்கொ, டு விரைந்துசென்று தக்கனிடஞ் சொல்லினர். அவன் தன தறி ல் அரனென்றறிந்து அக் கன்னிமாடமடைந்து, கடவுளையக்ர து ல்பணித்து "தேவரீர் என் நகரிற் கெய்த வேண்டும்" என்று தா ாயணியுடன் சங்கரரைத் தனது தக்கமாபுரிக்குக் கொடுபோந்து, ற்பெருங்கடவுளை ஓர் முழுமணித் தவிசிலிருத்தினன். வேத ல்லி தன்மகளைப் புல்லி, நன்னீராட்டி, பொன்னணி பூட்டி, மலர் ட்டி, எம்பிரானருகில்விட, இறைவியார் ஈசனிடத்திலிருந்தனர்.

சமஸ்ததேவர்களும் அது சமயத்தில் அங்கடைந்துநின்றனர். க்கன் தாக்ஷாயணியின் திருக்கரத்தைச் சங்கரர் திருக்கையி லளி து வேதவல்லி கையிற்றுங்கிய கரகநீரைப் புரோக்ஷிக்க "எனதன் யும், தவப்புதல்வியு மாகிய தாக்ஷாயணியைத் தேவரீருக்குக் ொடுத்தேன்" எனக் கூறினன். சிவபெருமான் சகலதேவருடன் டனே மறைந்துவிட்டனர். தேவியார் மனம்வருந்திப் பண்டு ால், தவச்சாலையிலிருந்து பின்னொருபகலிற் பெருமான் காட்சி ரித்து இடபாரூடராய் அழைத்துக்கொண்டுபோக, வெள்ளிமலை டைந்து விமலருடன் வீற்றிருந்தனர்.

೧

சிவபிரான் திருமணஞ்செய்த தேவியாரை நீக்கி மறைந்ததற் கவும், தன்னை மதியாமைக்காகவும், தக்கன் மிக்க கோபமுற்று முதல் சிவபிரானை மதியாம லிறுமாந்திருந்தனன். இச்சரித்திர தின் மற்றவிஷயங்களை முன்சென்ற தக்ஷயஜ்ஞஹதமூர்த்தத்திற் ண்டுகொள்க.

கௌரியாகிய உமாதேவியாருடன் லீலாமாத்திரையாகச் சிவ பிரான் விளையாடியமூர்த்தமே கௌரீலீலாசமந்விதமூர்த்த மெனப் படும்.

---

* பண்டொரு பகலிற் பதுமன் தனது சத்தியவுலகத்தி லிருக் கையில், அவனது மாநதபுத்திரர் பதின்மரில், தக்கன் தந்தையைநோ க்கி "எந்தையே! பெருந்தேவர் மூவருள் தலைவனாகவும், எல்லாவு யிர்கட்கும் உயிருமா யுள்ளவன் யாவன்?" என்றுவினவ, சதுமுகன் "தனய! சங்கரனே நீ வினவிய முதல்வன்" என மறுமாற்றங்கூற, தக்கன் "சிருட்டியாதி மூவகைத் தொழிலிற் சங்கார மொன்றினை யியற்றுஞ் சங்கரன் ஏனைய விருதொழில் புரியு நுங்கட் கிறைவனாத லெங்ஙனம்?" என, எண்கணன் "சர்வசங்காரகாலத்தில் எல்லாவர் றையுந் தன்னிட மொடுக்கி மீட்டும் படைப்போனாதலாலும், எம் முள் அந்தர்க்கதமாகவிருந்து சிருட்டி திதிகளைச் செய்விப்பவனாத லாலும், இறைவனாவான்" எனத் தேற்றினன். அது கேட்டு மனத் தடுமாற்றம் நீங்கி மாநததீர்த்தக்கரையில் ஆயிரவருடந் தவஞ்செய்த தக்கனுக்குச் சிவபெருமான் காட்சிதந்தருளி, "உன் மனதில் விருப் பியதென்" என, தக்கன் பணிந்து "த்ரிலோகங்களும் என் கட்ட ளையில் நிற்கவும், தேவரீரைப் பணிவோர் என்னைப்பணியவும், உமா தேவியார் என் புதல்வியா யுதிக்கவும், தேவரீர் வேதியவடிவாய் வந் து மணம்புரியவும், வரமருளவேண்டும்" என வேண்டினன். சிவபி ரான் அவ்வாறே யருள் செய்து அந்தர்த்தானமாயினர்.

தக்ஷன் சிவப்பிரசாதத்தாற் பிரமனைக் கொண்டு **தக்கமாபுரி** யென வோர் நகர மியற்றி, ஆங்குக் கொலுவீற்றிருந்து இந்திராதி தேவர் பரவ அரசுசெய்துவருகையில், வேதவல்லியை விவாகஞ் செ ய்து, ஆயிரம்புதல்வரை யீன்று, அவர்கட்கு உபநயனமியற்றி, வேத முணர்த்தி, "நீங்கள் சிவபிரானை நோக்கி மாநததீர்த்தக்கரையில் தவஞ்செய்து, "சிருட்டிசெய்ய வரம்பெற்று வருதிர்" என விடுத்த னன். அவர்கள் அவ்வாறே தவத்திருக்கையில், **நாரதமுநிவர்** அவ

ா வினவி ஞானோபதேசஞ்செய்ய, அவர்கள் தவஞ்செய்து முத்தி
ற்றனர். இச் செயலை ஞானதிருஷ்டியாலறிந்த தக்கன் மீண்டும்
ிரம்புதல்வரைப் படைத்து முன்போலவே விடுப்ப, அவர்களும்
ாதமுனிவரதுபதேசம் பெற்றுத் தம்முன்னோர் போலவே மோக்ஷ
ற்றனர். இதையு மறிந்த தக்கன் வெகுண்டு முனிவரை "எங்குந்
ிக" எனச் சபித்து, இருபத்துமூன்று மாதர்களை யீன்று தருமன்
ுலான முனிவர்க்கு மணம்புணர்த்தி, இருபத்தேழு பெண்களை ய
த்துச் சந்திரனுக்கு மணம்புணர்த்தினன். சந்திரன் அவ்வனிதை
களில், கார்த்திகை உரோகணி யென்னு மாத ரிருவரை யன்றி
னயோரை முகநோக்காதயினன். பலநாள் மனம்பொறுத்து மற்
ைய மாதர் தந்தைபாலுற்று முறையிட, தக்கன் சந்திரனையழைத்
மதிகூறி விடுத்தனன். திங்கள் அதனாலும் மனந்திரும்பாமைதெ
ு சினங்கூர்ந்து "தினமோர் கலைபாகக் குறைக" வெனச்சபித்
ான். அதனால் நாளுக்கோர்கலையாகக் குறைதல்கண்டு, தக்கன்
ொடுத்தசாபத்தினின்று விலக விரும்பியசோமன் சிவபிரானைப் பி
ர்த்தித்து, பெருமானருளால் வளரவும் தேயவும்வரம்பெற்றனன்.
ீதனை யறிந்த தக்கன் கடுங்கோபங்கொண்டு யுலகமுநிவர் புகன்ற
ியாற் கோப நீங்கி யிருந்தனன்.

கௌரீலீலாசமந்விதமூர்த்தயேநமః

சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# ஐம்பத்தாறுவது
# விஷாபஹரணமூர்த்தி.

பண்டொருபகலில் அமரருக்கும் அவுணருக்கும் நேரிட்டபோ
ரில், இருதிறத்தவரிலும் பலர் மடிதலால், அவர்கள் கமலாசனத்திரு
ந்து பலகோடி யான்மாக்களையும்படைக்கும் பிரமதேவனைச் சத்திய
லோகஞ் சென்று கண்டு "தலைவ! யாங்களிறவாது நெடுநாள் போர்
புரியக்கருதினேமாதலின பாற்கடலைக்கடைந்துஅமுதளிக்கவேண்டு
ம்" என வேண்ட, பதுமன் "கமலைகேள்வன்பாற்கூறிக் கருதியது
முடிப்பிப்பேன்" என்றுரைத்து,அவர்களுடன் க்ஷீராப்தியடைந்து
சேஷசயனத்திற் சநகனதியர் பரவ யோகநித்திரைபுரியுந் திருமா
லைவணங்கி அவர்கள் விருப்பை யறிவிக்க, விஷ்ணுமூர்த்தி யதற்கி
ணங்கி, "அவ்வாறே யாகுக" என்று, மந்தரமலையை மத்தாகநட்
டுச் சந்திரனை அடைதூணாக்கி அட்டநாகங்களு ளொன்றாகிய வா
சுகியென்னு மரவைத் தாம்பாகப்பூட்டி, தேவர்ஒருபுறமும் அசுரர்
மறுபுறமும் ஈர்க்கும்படிக் கட்டளையிட்டு, தாம் கூர்மவடிவேற்று
மலையின் அடியையு முடியையு முதுகினாலுங் கைகளாலும் பற்றிநி
க, தேவாசுரர் களையெய்தக் காலம் பல கடைந்தமையால், கயிறா
கிய வாசுகிவருத்தமாற்றாது, உடல் பதைத்து நாத் துடிக்கத் தன
ஆயிரம்வாய்களாலும் விஷஞ் சிந்தியது.

அவ்விஷம் எங்கும் இருளெய்தும்படி யொல்லெனப் பரவ
தேவர் முதலாயினர் பயந்தோடினர். அது கண்ட விஷ்ணு அமரர்க
ளைக் காப்பேனென்று ஆற்றல் கூறி, அவர்கள்மேற் செல்லும் ஆல
த்தைத் தாமெதிர்சென் றடர்த்தனர். அவ்விஷம் அவர் திருமே



56. விஷாபஹரண மூர்த்தி.

பக் கருகிறஞ் செய்ய, அவரும் நிற்றற் கஞ்சி யோட்டெடுத்தனர்.
ப்பொழுது யாவரும் ஒருங்குசென்று திருக்கைலாயகிரியை நண்
, திருநந்திதேவ ரநுஜ்ஞையால், திருச்சந்நிதானத்தினுட் சென்று
நருநிதியாகிய கண்ணுதலைத் தரிசித்துக் கைகட்டி வாய்பொத்தி
ன்றனர். சிவபெருமான் திருமாலை நோக்கி "மாதவ! உருவம் வே
பட்டுத் தேவர் குழுவுடன் வந்ததென்னை?" என் றறியார்போல்
றவ, விஷ்ணு "பரமநிதியே! தேவரீர் கட்டளையின்றிப் பாற்கட
மதித்தமையின் அமுது பெறாது விஷம்பெற்றேம்; அடியேங்
ளைக், காத்தருள்புரியவேண்டும்" என்றிரந்து நிகழ்ந்தவையிசைப்ப,
பிரான் தம திடப்பாகத் துள்ள பார்வதியை நோக்க, உமையம்
மயார் "இவர்களைக் காக்கவேண்டும்" என்று விண்ணப்பித்தனர்.

சர்வான்மாக்களின் இடுக்கண் களையுஞ் சம்பு சமீபத்திருந்த
ந்தரனைப் பார்த்து, "சுந்தரா! அவ்வாலத்தைக்கொணர்க" என்றுக்
ாபிக்க, அத் திருவாணையைச் சிரமேற்கொண்டு, அவ்வாறே அவர்
ம துள்ளங்கையிற் றங்கிப் பெருமானிடந் தர, மகாதேவர் அதனை
ாங்கித் திருக்கரத்தில் வைத்துக்கொண்டு "தேவர்களே! இதனை
ண்ணவா? விட்டுவிடவா?" என, தேவர்கள் "தேவரீரது திரு
கரத்தில் வரவே இதனுருவம் சிறுத்தது; விட்டால் உலகை யழிக்
ும். எவ்வெவற்றினும் முற்பாகந் தேவரீரதே யாதலின், விஷமாயி
ப்பினும் இதனைத் தேவரீர் கொண்டருளல் வேண்டும்." என்று
ரார்த்திக்க, சிவபெருமான் அவ்வாறே சம்மதித்துத் திருவமுதுசெ
கையில், அது கண்டத்தளவு செல்ல அதனை யாவருங் கண்டு,
எம்மை யுயிர் காத்ததற்குச் சான்றாக இவ்விஷத்தைக் கண்டத்தி
லயே தரித்தருளல்வேண்டும்" என்று வேண்ட, எம்பெருமான்
வர்கள் வேண்டுகோளுக் கிரங்கி, அங்கேயே ஒருநீலமணிபோன்று
றுத்தி மணிகண்டர் நீலகண்டர் சிகண்டர் முதலிய திருநாமங்களைப்
பற்றனர். பிறகு பெருமா னருள்பெற்றுக் கடல்கடைய அமுதமும்

ப்ல பொருளும் பிறந்தன. திருமால் மோகினி வடிவேற்று அசுரரை வஞ்சித்து அமரர்க் கமுதளித்து, அவரவரிருக்கைக் கேகவிடுத்தனர்.

திருப்பாற்கடலிற் றோன்றிய விஷத்தாற் சர்வான்மாக்களுந் துன்புறுவகையாக, தேவமுநிவர் வேண்டுகோளுக் கிரங்கிப் பானஞ் செய்தமையால், சிவபிரான் விஷாபஹரணமூர்த்தி யெனப் பெயரெய்தினர்.

**பாகவதம்.**

யேஸமாமந்த்ரியபகவாந் பவாநீம்விஸ்வபாவந: | தத்விஷங்கத்துமாரோபே ப்ரபாவஞ்ஞோந்வமோதத | தத:கரதலீக்ருத்ய வ்யாபிஹாலாஹலம்விஷம் | அபக்ஷயந்மஹாதேவ : க்ருபயாபூதபாவந: | நிஸம்யகர்மதச்சம்போர் தேவதேவஸ்யமீடுஷ : | ப்ரஜாதாக்ஷாயணீப்ரஹ்மா வைகுண்டஸ்சஸஸம்ஸிரே ||

ఘాగవతపురాణం.

యేసమామంత్ర్యబగవాన్ భవానీంవిశ్వపావనః ॥
తద్విషంగర్భుమారేభే ప్రభానజ్ఞోన్వమోదత ।
తతఃకరతలీకృత్య వ్యాపిహాలాహలంవిషం ।
అభక్షయన్మహాదేవః కృపయాభూతభావనః ।
నిశమ్యకర్మతచ్ఛంభోర్దేవదేవస్యమీడుషః ।
ప్రజాదాక్షాయణీబ్రహ్మా వైకుంఠశ్చశశంసిరే ॥

**ப்ரஹ்மாண்டப்புராணம்.**

இரண்டாமத்தியாயம் - பிரமன் வாக்யம்.

தஸ்யவிஷ்ணுரஹம்வாபி ஸர்வேவாஸுரபுங்கவா:
நஸ்க்தவர்திவைஸோடும் வேகமந்யத்ரஸங்கராத்
விஷேணோத்திஷ்டமாநே காலாநலஸமத்விஷா
நிர்தக்தோரக்தகௌராங்க : க்ருத:க்ருஷ்ணோஜநார்தந:!

### బ్రహ్మాండపురాణం.

తస్యవిష్ణురహంవాపి సర్వేవాసురపుంగవాః ।
నశక్నువంతి వైసోఢుం వేగమన్యత్రశంకరాత్ ।
విషేణోత్తిష్ఠమానేన కాలానలసమత్విషా ।
నిదగ్ధోరక్తగౌరాంగః కృతఃకృష్ణోజనార్దనః ॥

### வர்மநபுராணம்.

தம்த்ருஷ்ட்வாரக்தகௌராங்கம் க்ருதம்க்ருஷ்ணம்ஜநார்தநம்
பீதாஸ்ஸர்வேவயம்தேவா ஸ்த்வாமேவசரணம்கதாః!

### వామనపురాణం.

తందృష్ట్వారక్తగౌరాంగం కృతంకృష్ణంజనార్దనం ।
భీతాస్సర్వేవయందేవా స్త్వామేవశరణంగతాః ॥

### ராமாயணோத்தர காண்டம்.

ஹாலாஹலம்விஷம்ஸர்வம் ஸஜக்ராஹாம்ருதோபமம்,

### రామాయణోత్తరకాండం

హాలాహలంవిషంసర్వం సజగ్రాహామృతోపమం ॥

### காஞ்சிப்புராணம்.

"அடுங்காலமிதுவென்ன விடமெழலு நனிவெருவி யயன்மா
லனோர், கொடுங்காலன் றனைக்குமைத்த குரைகழற்கீழ்ச் சரண்பு
நதக் கொதித்துவாழ்நாள், பிடுங்காம லருள்புரிந்த பிரானன்றிப் பி
ன்னையுமோர் பிரானுண்டென்ன, நடுங்காதார் தமைக்காணப் பெற்
றிடினு மென்னுள்ள நடுங்குமாதோ."

விஷாபஹரணமூர்த்தயேநம:

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

# ஐம்பத்தேழாவது.

# கருடாந்திகமூர்த்தி

திருமகள் விளங்கிய மருமமும், திசைமுகன் முதலாவகிலமுகி ழ்த்த முண்டகமும், தண்டம்-சுதரிசனம்- சார்ங்கம்- கதை-சங்குட னைம்படை தாங்கிய கரமும், தினகர ரிருவர்சேர்ந் தொளிசெயல் போற் றிருச்செவிக் குழையும், பன்னகப்பாயலும், பாற்கடற்றுயில் வும், அவுணரை யழித்தலும் அமரரைப் புரத்தலும் அமைந்துலகளி க்கும் ஆதிநாரணன்,முன்னொருபகலில் முக்கணரைத்தொழ எண்ணி னனாகி,வண்ணநற்கருட வாகனமேறி வானெறி வழிக்கொடு கண்ணு தல் வீற்றிருக்குந் திருக்கைலையைச் சமீபித்து, தனது வாசஸ்தான மாகிய திருப்பாற்கடல்போல வெண்ணிற முடையதும்,பலபுறங்களி லும் அருவியாறுக ளிறங்குவதும், சங்குகன்னன் - வாணன் - குண் டோதரன் முதலிய கணநாதர்கள் நாற்புறத்திலுங் காவல்செய்வதும் இடையறாது இமையவர் குழாங்கள் "ஹரஹர சங்கர ஜகதீஸ"எனப் பலவகையாகத் துதிசெய்யும் பேரிரைச்ச லுடையதுமாகிய வெள்ளி மலையின் சிகரங்களைத் தரிசித்துக் கைகூப்பி, மலைச்சாரலைச் சமீபித் துச் சிவத்தியானத்துடன் திருமலைமேலேறி, திருக்கோபுரவாயிலைய டைந்து,வாஹனமாகிய கருடன்பேரிலிருந்திறங்கி,துவாரப்பிரதேசத் தில் வாகனத்தை நிறுத்திவைத்து, நந்தியெம்பெருமானது நளின பாதங்களை நமஸ்கரித்து, அவர் அநுஜ்ஞைபெற்றுத் தேவதேவரைத் தரிசிக்கத் திருச்சந்நிதானத்தி னுட்சென்று, காளகண்டமும், சூரிய சோமாக்கினியாகிய திரிநேத்திரங்களும்,மான்மழு வரதாபயமு முற் றுவிளங்குஞ் சதுர்புஜங்களும், கங்கையுங் கொன்றையுந் திங்களும ணிந்த செஞ்சடையும், பார்வதி தேவிபாகமுமாக ஸ்ரீசிவபெருமான்



57 கருடாந்திக மூர்த்தி.

வரத்தினகசித மண்டபத்தில், இந்திராதி இமையவரும், நாரதாதி முனிவரும், அட்டவசுக்களும், யக்ஷகிந்நராதி பதினெண்கணங்களும் புடைசூழ்ந்து நிற்கவும், அரம்பைமுதலிய தேவதாசிகள் நடிக்கவும், சர்வாடம்பர பூர்வமாய் எழுந்தருளியிருக்குந் திருக்கோலத்தைக் கண்களாரத் தரிசித்து, வாயாரவாழ்த்தி ஆனந்தக்கடலி லமிழ்ந்திருந்தனர். இதுநிற்க,

விஷ்ணுமூர்த்தியின் வாகனமாயும், அவரால் வெளியேயிருக்க ஆஞ்ஞைபெற் றுள்ளதுமாகிய கருடன் சிறிதுநேரம் பார்த்து, திருமால் விரைவாகத் திரும்பிவராமையால், தானும் திருச்சந்நிதானத்தினுட்செல்ல விரும்பி, உள்ளேபோகையில், திருநந்திதேவர் வெகுண்டு "வைநதேய! உள்ளேபுகாதுநிற்றி; மாதவன்வருமளவும் ஈண்டிருத்தி" என இசைத்தனர். அதுகேட்ட கருடன் கடுஞ்சினங்கொண்டு "என்னைத் தடுக்க நீ எவ்வளவினன்; நீயோ பிச்சையெடுப்பவன் வாகனம்; உன்னை விரைவி லுயிரொழிப்பேன்" என வுரைத்தது. விடைத்தேவர் பிரளயகாலாக்கினிருத்திரர்போற் பெருஞ்சினமுற்றுப் பேசுதலொன்றுமிலராய் அக்கருடன்பேரில், தமது நிசுவாச உசுவாசங்களைச் செலுத்தினர். கருடன் அந்நிசுவாசத்தாற் ககனமார்க்கத்திற் கடுந்தூரம்போயும், உசுவாசத்தால் நந்திதேவரது நாசிகாபிலத்தை யடைந்துங் கஷ்டப்பட்டுக்கொண்டு, ஊழிகாலத்துதித்த பிரசண்ட வாயுவேகத்தி லிலையுஞ் சிறுதுரும்புபோலத் துன்புற்றுத்தனதுவல்லமையால் உயிர்பிழைக்க உபாயமொன்று மில்லாமல், விஷ்ணுமூர்த்தியை "மாதவா! கேசவா! மதுசூதனா! அபயம். அபயம். எனது அஞ்ஞானத்தால் ஸ்ரீநந்திபகவானுக்குண்டாகிய கோபாவேச உசுவாச நிசுவாசங்களில் உயிரொழியுந்தறுவாயி லிருக்கின்றேன். அத்துன்பத்தை யகற்றி அடியேனைக் காக்கவேண்டும்" என இறைச்சலிட்டு முறையிட, சிவதரிசனஞ் செய்துகொண்டிருந்த திருமால், அதுமுறையிடும் இறைச்சலைச் செவியேற்று, சிவபிரான் சமுகத்தில் திருவிண்ணப்பஞ் செய்தனர்.

சிவபெருமான், தமக்கு மனைவியும் சத்தியும்அம்பும் பரமபத்த ருமாகவுள்ள விண்டு மனம்வருந்தி வாய்விண்டு விண்ணப்பித்தவற் றைத் திருச்செவிசாத்தி, "மாலே! மாலுறுமல் நமது கட்டளையெ ன்று நந்திபால் நவின்று கருடனை விடுத்தி" எனத் திருவாய்மலர்ந் தருளினர். உவணகேதனன் உள்ளங்களித்து ஓடோடிவிடைத் தே வர்பால்வந்து விமலர்கட்டளையை விளம்பி, "ஐயனே! அதன் அறி யாமையை மன்னித்து அருள்புரியவேண்டும்" என்று பிரார்த்திக்க, நந்திகேஸ்வரர் "என் முன்னே இறைவனை இகழ்ந்துகூறிய இக்கரு டனுயிரை இமைப்பொழுதில் மாய்ப்பேன்" எனச்சினத்துடன் செ ப்ப, நாரணன் நடுக்கெய்தி, மீண்டும் விடையூர்திபால் விண்ணப்பி க்க, சிவபிரான் திருநந்திஎம்பெருமானை விளித்துத் தமதுகட்டளை யாற் கருடனைவிடுவித்து உயிர்காத்து, மாயனை மகிழ்வித்தனர்.

கருடன் கருவபங்கமுற்றுக் கமலைகேள்வனைச் சுமந்து பழயப டியே பதுமநாபனுடன் பாற்கடல் சேர்ந்தது. ஈண்டு நந்திதேவரால் துன்புற்ற கருடனுக்குச்சமீபித்தருள்செய்த காரணத்தால், கடவுளு க்குக் கருடாந்திகமூர்த்தியெனப் பெயரெய்தியது.

## ருத்ரகோடி ஸ்தலமஹாத்ம்யம்.

உச்வாஸேநஹ்ருதஸ்தூர்ணம் யோஜநர்நாம்ஶதம்கத:
நிச்வாஸேநஸமாக்ருஷ்ய வ்ருஷநாஸாந்தரம்விஶத் இத்யாதி
ஏநாமுக்திம்ஹரேஶ்ருத்வா வ்ருஷோவசனமப்ரவீத்
அநேநாகாரிகோவிந்த ஶிவநிந்தாமஹாத்தரா
ஹரிஷ்யேவைநதேயாஸு நிதிவேகாத்வ்ருஷோப்ரவீத் இத்யாதி
ஶ்ருத்வைநாம்வ்ருஷபஸ்யோக்திம் மஹாவேகாத்ரியம்பக:
கருடம்முஞ்சமுஞ்சேதி வ்ருஷபம்ஶங்கரோப்ரவீத்
வ்ருஷோமுக்த்வாதகருடம் வேகாதுக்தம்விபோ:புர:
தஸ்மாந்மஹிபவத்தோஷ: இதிசிந்தாஸமாகுல:

## రుద్రకోటిమహాత్మ్యం.

ఉఛ్వాసేనహృతస్తూర్ణం యోజనానాంశతంగతః ।
నిఛ్వాసేనసమాక్రుష్య వృషనాశాంతరంవిశత్ ॥ ఇత్యాది
ఏనాముక్తింహరేశ్రుత్వా వృషోవచనమబ్రవీత్ ।
అనేనాకారిగోవింద శివనిందామహోత్తరా ।
హరిష్యేవైనతేయాసూ నితివేగాద్వృషోబ్రవీత్ ॥ఇత్యాది,
శ్రుత్వైవనాంవృషబస్యోక్తిం మహావేగాత్రియంబకః ।
గరుడంముంచముంచేతి వృషభంశంకరోబ్రవీత్ ॥
వృషోముక్త్వాథగరుడం వేగాదుక్తంవిభోఃపురః ।
తస్మిన్నస్మిన్మహాభవద్దోషః ఇతిచింతాసమాకులః ॥

### பதினோராந் திருமுறை

"கார்மலிசிறகின் கருடனைக்காய்ந்தனை
அன்னவற்கிரங்கிப் பின்னருமருளினை."

கருடாந்திகமூர்த்தயேநம:.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## ஐம்பத்தெட்டாவது

# ப்ரஹ்மசிரச்சேதமூர்த்தி.

முன்னொருநாளிற் பொன்மலையாகிய மேருகிரியின் மேலுள்ள ஒரு சிகரத்தில் பிரமதேவனும் விஷ்ணுமூர்த்தியும் வீற்றிருக்கையில், கணக்கில்லாத தேவரும் முனிவரும் வந்து வணங்கிக் கைகுவித்து "திரிமூர்த்திகளில் முதன்மையுற்றோரும், ஆதிமத்தியாந்தமற்றவரும், சமஸ்தஜீவான்மாக்களிடத்தும் அந்தரியாமியா யுள்ளவரும் யாவர் ? நீங்களிருவருமாக இயம்புங்கள்" எனப் பிரார்த்திக்க, ஆதிதேவனருளாலன்றிப் போதலில்லாத மாயையின் பிணிப்புற்று வருந்தும் பசுக்களாகிய பிரமவிஷ்ணுக்கள் இருவரும் கன்மவசத்தால் இறுமாப்புற்றனர். அப்பொழுது அயன் "அத்தகையபிரமம் யான்" என, நாரணன் "நானே யுனைப் பெற்றேனாதலின் நான்தான் பிரமம்" என, ஒருவரோடொருவர் உரைத்து எண்ணில்காலம் இகல்மொழிபேசி எரிசிந்த விழித்துத் தருக்கஞ்செய்யக் கண்ட தேவர் முநிவர் "நம்மாலிவர் இத்தகைய பகைமைகொள்வானேன்" என்று தத்தமிடஞ் சார்ந்தனர்.

தேவர் முதலியோர் சென்றபின்னும் இருவரும் மமதை மாறாதவராய் வழக்கிட்டுச் சண்டைசெய்கையில் வேதமும் பிரணவமும் வெவ்வேறுருக் கொண்டுவந்து "பிரமவிஷ்ணுக்களே ! வீண்வாதெற்றுக்கு ? சர்வபரிபூரணராகிய சிவபெருமானே பரம்" எனத் தனித்தனி சாற்றவுங் கேளாதவர்களாய் மீண்டுஞ் சண்டைசெய்கையில், ஆண்டவர் அவர்கள் வழக்கை யொழிக்கச் சோதியுருவாய் நிற்க,இருவரும் ஏதோ சுடரொன்றிருக்க, எம்பிரான் அதன்நடுவே உமாதேவி



௬௩ பிரம்ஹசிரச்சேத மூர்த்தி.

பாருடன் திருக்கயிலாயத்தில் வீற்றிருப்பதாக வடிவுகாட்ட,விண்டு கண்டு விடையூர்தியென் றுட்கொண்டு நிலமிசைத்தாழ்ந்து துதித்து நின்றனன். மலரோன் மலமுதிர்ச்சியால் மதியாமல் நடுச்சிரத்தால் நக்கனை யிகழ்ந்துபேசினன். எல்லாவுலகங்களும் இமைப்பில் எரியுமேயென்று கருதி, சிவபெருமான் சிறிதுஞ்சினங்கொண்டிலர். எண்கண்ணன் இறுமாப்பொழியவும் மற்றையவானவர் மதர்ப்பு நீங்கவும் மகாதேவன் மனதில் பைரவக்கடவுளை வரச்செய்தனர், "சிறுவருகிய பிரமன் சிரங்களைந்தில் நம்மையிகழ்ந்த நடுச்சிரத்தை நகநுதியாற் கொய்து கரத்திலேந்தி அவனுக்கு உயிர்ப் பிச்சையளித்து; தேவர்முனிவர் நகரங்கடோறுஞ் சென்று, உதிரப்பலியேற்று இரத்தப்போக்கா லிறந்தோரை யெழுப்பி யாவரகந்தையையு மழித்து அண்டகடாகத்தின்மே லடைந்திரு" என்று ஆஜ்ஞாபித்து பரமன் சோதியிற்கூடிப் பண்டுபோல வீற்றிருந்தனர்.

மங்கைபாகனருள்பெற்ற பைரவக்கடவுள் வருதல் நோக்கிய மாதவன் வடுகதேவன் மலரடிவணங்கி வைகுந்தமடைந்தனன்; பிரமன் மரம்போல நிற்க, பைரவர் சினந்து தமது நகத்தினால் நாதன் கட்டளைப்படி அவனது நடுச்சிரங்கொய்தனர். உதிரவெள்ளம் உலகெலாம்பரத்தலின் உயிர்ப்புநீங்கி மலரோன் மாய்ந்தனன். மேருவைச்சுற்றிய சோரிநீரை நுதல்விழியாலுலர்த்திப்பிரமனையெழுப்ப, நித்திரைதெளிந்தோன்போல நிலத்தினின்றெழுந்து நின்மலராகியபைரவரைவணங்கி "மலைவில்லிக்கு யான்செய்த அபராதம் வரையானையில்லை. என்பேதைமையைப்பொறுத்தி பெருமானே !" என்று திருவடியில்வணங்கி "என் சிரசைத் தேவரீர் திருக்கரத்திலேயே வைத்திருக்கவேண்டுகிறேன் ; தேவரீரால் அஞ்ஞானமொழிந்தேன்" என்று பிரார்த்தித்தனன். பைரவர் "இனி நான்முகனென்னநானிலத்துறைதி" என விடுத்து, மேருமலையினின் றிறங்கித் திருவுள்ளக்குறிப்பின்படி சென்றனர். தலையிழந்த பிரமன் சதுர்முகத்தொடு சத்தியலோகஞ் சார்ந்தனன்.

தானே பிரமமெனத் தருக்குற்ற பதுமனது ஐந்தாவது தலையைநகநுதியா லரிந்தமையின் சங்கரருக்குப் ப்ரஹ்மஶிரச்சேதமூர்த்தியென வோர் பெயர் வழங்குகின்றது.

**ப்ரஹ்மாண்டபுராணம்.**

ஸஸர்ஜஸ்வாத்மந:கிஞ்சித் பைரவம்லோகதாஹகம்
ஸ்வயம்ஸாக்ஷாந்மஹாதேவ: க்ஷணாத்வைகாலபைரவ:
ச கர்தகரஜாக்ரேண ப்ரஹ்மண: பஞ்சமம்ஶிர:.

బ్రహ్మాండపురాణం.

ససర్జస్వాత్మనఃకించి ద్భైరవంలోకదాహకం ।
స్వయంసాక్షాన్మహాదేవః క్షణాద్వైకాలభైరవః ।
చకర్తకరజాగ్రేణ బ్రహ్మణఃపంచమంశిరః।

**வாமநபுராணம்.**

தச்ருத்வாக்ரோதயுக்தேந ஶங்கரேணமஹாத்மநா
நகாக்ரேணஶிரஶ்சிந்நம் ப்ராஹ்மம்பருஷவாதியத்
தச்சிந்நம்ஶங்கரஸ்யைவ ஸவ்யேகரதலேபவத்
பதிதேநகதாசித்து தச்சங்கரகராச்சிர : | இத்யாதி
ஸக்ருத்வாஸுமஹத்புத்தம் ப்ரஹ்மண:காலபைரவ :
சகர்ததஸ்யவதநம் விரிஞ்சஸ்யாதபஞ்சமம்.

వామనపురాణం.

తచ్ఛ్రుత్వాక్రోధయుక్తేన శంకరేణమహాత్మనా
నఖాగ్రేణశిరశ్ఛిన్నం బ్రాహ్మంపరుషవాదియత్ ।
తచ్ఛిన్నంశంకరస్యైవ సవ్యేకరతలేబవత్
పతితేనకదాచిత్తు తచ్ఛంకరకరాచ్ఛిరః॥ ఇత్యాది
సకృత్వాసుమహద్యుద్ధం బ్రహ్మణఃకాలభైరవః ।
చకర్తతస్యవదనం విరించస్యాథపంచమం॥

ப்ரஹ்மஶிரச்சேதமூர்த்தயேநம:

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

## ஐம்பத்தொன்பதாவது

# கூர்மசம்ஹாரமூர்த்தி.



பண்டொரு பதுமகற்பத்தில், திதிமைந்தரும் அதிதிமைந்தருமாகிய தேவரும் அசுரரும் தீராப்பகையாற் பலகாலஞ் சமர் புரிந்தனர். இருதிறத்தவரிலும் எண்ணில்லார் இறந்தனர்; அதனால் அவர்கள் ஒருங்குகூடி, க்ஷீராப்தி மர்த்தனஞ்செய்து அமுதுண்டு அதிகநாள் ஜீவித்து அரும்போர் ஆற்றவேண்டுமென்று, அகத்துட் கொண்டு, பதுமனுடன் கூறி அவனையுமுடன்படுத்தி, அழைத்துக்கொண்டு அச்சுதன்பாற்சென்று அறைய, திருமால் "அவ்வாறேயாகுக" என்று, மந்தரமலையை மத்தாகவும் சந்திரனை அடைதூணாகவும், வாசுகியைத் தாம்பாகவும் அமைத்து, இருதிறத்தவரையும் இருபுடைநின்று மாறிமாறி யீர்க்கச்செய்ய, மந்தரமலை சாய்ந்தது. அதுகண்ட ஐம்படைக்கிழவன் பெரிய யாமைவடிவுகொண்டு பாற்கடலிற் பாய்ந்து, தன்மேற்புறத்தை யிலக்கயோசனையிடமாக்கி வீழ்ந்த வெற்பை யெழுப்பி முதுகின்மேற் றாங்கி நின்றனர். அந்தரரும் அசுரருங் கடைய அவ்வசலம் மீண்டும் சாய்ந்தது. அதுகண்ட கமட வுருக்கொண்ட கமலநாபனுக்குக் கரங்க ளாயிரந் தோன்றின. கரங்கள் பல ஓங்கலின் உச்சியைப் பற்றி யூன்றின. பல கரங்கள் பக்கத்திற் சாயாமற் பர்வதத்தைப் பத்திரமாய்ப் பற்றிநின்றன. சில கரங்கள் தேவாசுரர் கடல்கடைந்து களையுறாமல் அவர்கட் குதவியாய் நின்றன. அமரர்-அசுரர்-அச்சுதன் முதலானார் யாவரும் ஒருங்குகூடிக் கடைந்தமையால் அம்மந்தரம் அதிவேகமாகச்சுழன்று பாற்கடலைக்கலக்கிப் பலசிறு திவலைகளைத் தேவருலகமட்டு மெறிந்தது.

இவ்வாறு பாற்கடல் கடையப்புக்கோர் பரமசிவன்பால் விண்ணப்பித்து அவர் கட்டளை பெறுமற் செய்த அபசாரத்தால், தாம்பாகிய வாசுகி வருத்தந் தாங்காமல் தன் வாய்வழி நஞ்சு கக்கியது. வானவருந் தானவரும் வெருவி வாயுவேகமாகவோடத்தலைப்பட்டனர். திருமால் அதுகண்டு "தேவாசுரர்களே! சிறிதுமஞ்சன்மின்" என்று அதனைத் தடுக்க முயன்று, விடவேகத்தால் உடல் கருகித் தானு நிற்கற்கஞ்சித் தேவர்களை நோக்கி,—

"என்னை யொப்பவ ராயிர கோடிய ரொனினு
முன்ன ருங்கொடு விடத்தினை யெதிர்ப்பவ ருளரோ
பின்னல் வேணியன் றிருவரு ளுளதெனிற் பிழைப்பே
மன்ன தில்லையே லெங்ஙனம் பிழைத்துமென் றறைந்தான்"

என்றபடியே "என்போன்றோர் ஆயிரகோடிபேரொனினும், நினைத்தற்கு மரிய இவ்விஷத்தின் நேர்நிற்பா ருளரோ? சடைமுடி தரித்த சங்கரரது திருவருளிருந்தாற்பிழைப்போம்; அஃதில்லையாகிற் பிழைத்த லருமை" என்று கூறினர். அதனுல் அமரர்- அசுரர்-அயிராணி கேள்வன்-அம்புயனுதியோர் அஞ்சி, அச்சுதனுடன் வெள்ளிமலையை விநாடியிலடைந்து, விடைத்தேவர்பால் விடைகொண்டு விமலர் சந்நிதிசேர்ந்து "அரஹர சங்கர! அபயம்! அபயம்!" என் றலறியழுதனர். உமாபதி யொன்றுமுணரார் போன்று "உம்பர்காள்! உங்களுக்குற்ற துன்பம் யாது?" என வினவ,இமையவர் யாவையும் விண்ணப்பித்தனர். இறைவர் இமயவல்லியைக்கடைக்கணித்தனர். ஈச்சுவரியார் "ஈசனே! எவ்வாற்றானும் இவர்களைக்காக்கவேண்டும்" என்றிசைப்ப, முன்னோன் தம்முன் நின்ற சுந்தரரால் அவ்விஷத்தை வருவித்து உள்ளங்கையி லேற் றுட்கொண்டு, உம்பர் ஓர்காலத்தும் அகந்தை யுடையாமல், தமது திருக்கண்டத்திலேயே அவர்கள் விருப்பின்படி அவ்விஷத்தை யமர்த்தினர்.

நீலகண்டரொன இக்காரணத்தா லியம்புந்திருநாம மேற்ற நின்மலர் "உம்பர்காள்! உங்கள் உள்ளக்கருத்தின்படி பாற்கடலையினி

மதித்தஅமுதுண்பீராக்" என விடையளித்து விடுத்தனர். திருமால் பிரமன் இந்திரன் வானவர் தானவர்முதலானோர் பெருங்களிப்புடன் ஆரவாரித்து க்ஷீராப்தியை யடைந்து, விண்டு கமடவுருக்கொண்டு மந்தரத்தைப் பண்டுபோற் சுமக்க, தேவரும் அசுரரும் அஃது சுழலும்படிவடந்திருப்பினர். முதலில் மூதேவிதோன்றினள்; அவளை வருணனுக்களித்தனர். தண்டுகமண்டலத்துடன் தன்வந்த்ரியென்னுந்தேவமருத்துவன் தோன்றினன்; உலகமுழுவதுக்கும் மருத்துவனாக விடுத்தனர். அறுபதுகோடி அரம்பாஸ்திரீகள் பிறந்தனர்; அவர்களை இந்திரலோகத்திற் கேகவிடுத்தனர். சுரை தோன்றியது; அதனை வானவருண்டனர்; தானவர் நீத்தனர்; அதனால் அவர்கள் சுரரென்றும் அசுரரென்றும் பெயரெய்தினர். உச்சைச்சிரவம்என்னும் புரவி யுதித்தது; புரவியைப் புரந்தரனுக்களித்தனர். கவுத்துவமணி பிறந்தது: அதனைக் கமலநாபன் மார்பிலணிந்தனன். பஞ்சதருக்கள் - காமதேனு - சிந்தாமணி இவைபிறந்தன; இவற்றை இந்திரனுக்கீந்தனர். சந்திரன் ஜனித்தான்; அவனை ஒளிசெய்யும்படி ஆகாயத்திலனுப்பினர். தாக்கணங்கு தோன்றினள்; தாமோதரன் தனது தாரமாகக்கொண்டனன். இவையாவுந் தோன்றிய பின்னர் அமிர்தம் பிறந்தது.

அமரரும் அசுரரும் அமிர்தத்தைத் தமக்குத்தமக்கென்று ஒருவரோடொருவர் சமர்புரிந்து இருதிறத்தவரிலும் எண்ணில்லாதவர் இறத்தல் கண்ட மாயோன் ஓர் மாய்கையால் மோகினிவடிவேற்று அசுரரைவஞ்சித்து அமரருக்கு அமிர்தத்தைப் பகிர்ந்தளித்தனர். அவ்வானவத்தொகுதியில் மாறிவடிவுடன் அமுதேற்றருந்தியதானவரிருவர்,சூர்யசந்திரரால் விஷ்ணுவுக்குவெளியிடப்பட்டனர். அச்சுதன்அக்ஷணமே அளவில்லா வெகுளிகொண்டு தன் கைச்சக்ரத்தால்அவர்கள் சிரத்தையறுத்தெறிந்தனர். அவர்கள் அமுதுண்ட விசேடத்தாலிறவாமல், சிவார்ச்சனைசெய்து இராகு கேதுவென்னுங் கிரகங்களாய்த் தம்மை வெளியிட்ட செங்கதிர்வெண்கதிர்களைத் திராத்

துயர்செய்து வருகின்றனர். இவையே கிரஹணகாலமாம்: சுரர் அமு தருந்தித்தீர்க்காயுவெய்தி அசுரரை ஹதஞ்செய்து பொன்னுலகுசேர்ந்து வாழ்ந்திருந்தனர். இதுநிற்க,

மந்தரமலையாகிய மத்தினைத் தாங்கிநின்ற மாயவன் அவதாரமாகிய யாமைக்கடலேழையும் ஒன்றுகூட்டி, அதன்வெள்ளம் அவனியைஃ யழிக்கும்படி கலக்கி, சிந்துவைச் சேறுபடுத்தி, இலக்கயோசனை மேன்முதுகும் கால்களினளவைக் கணக்கிட்டறிய ஏலாதவையுமா யியைந்ததாதலின், திமிங்கலமுதலிய ஜலராசிகளையெல்லாம் புசித்தும் பசிதணியாமல் ஜலத்தையுங்குடித்துத் தரைதெரியும்படி சேற்றையும் நக்கியது ; அதனாற் கலக்கி வெளிப்படுத்திய கடலநீர் யுகாந்தவெள்ளம்போல எங்கும் பரவியது; தாமோதரனாகிய யாமை தனக்குக்கிடைத்த பலபொருளையுந் தின்னத்தலைப்பட்டது. இதனை யறிந்த சூரியசந்திரர் கடலிற்றோன்றிச் செல்லுவ தஞ்சினர். உலகமெங்கும் இருட்பிழம்பாயது. மகபதியும் மலரோனும் வையமழியுமென்று மனங்கலங்கி ஸ்ரீகைலாயமலையை யடைந்து திருநந்திதேவரநுஜ்ஞையால் மஹாசந்நிதானத்தினுட் சேர்ந்து சிவபெருமானைச் சேவித்துத் துதித்து நின்று "எம்பெருமானே! எளியேங்கட்கு இடுக்கணெய்தினுல், அதனையகற்றி அருள்செய்வோர் யாவர்? அடைக்கலம்! அடைக்கலம்! அச்சுதன் யாமைவடிவுகொண்டு ஆர்கலியிலிருந்து அவன்புரியும் அல்லல் அறைதற்பாலதோ?. அறியார்போன்றிருப்பது தேவரீரது திருவருளுக் கழகாகுமோ? விரைவில் அதனை விலக்கி எங்களைக் காக்கவேண்டும்" என்று குறைகூறி யாசித்தனர்.

சிவபெருமான் தேவமாநுடர்கட்குத் திருவருள்செய்யத் திருவுள்ளங்கொண்டு, "அமரரே! அஞ்சன்மின்" என்று உடன்வரக்கொண்டு ஊததியையடைந்து தமது திருக்கரத்திருந்த சூலப்படையால் அக்கூர்மத்தின் உயிரைச்செகுத்து, அதனுட லிறைச்சியைக் குடைந்தெறிந்தனர். பார்த்துக்கொண்டிருந்த பண்ணவர், களிகூர்ந்து ஆர்த்து "கருணாநிதியே! கமலைகேள்வன் மீண்டுங் கர்வமடை

பாமல் அதன் ஓட்டினையுந்தேவரீர்திருமேனியிலுள்ள திருவாபரணங்களோடு ஒன்றாக அணிந்துகொள்ளவேண்டும்'' என்று வேண்ட, அடியவர் அவாவிய அடையே அருள்புரியும் அண்ணலார் அக்கூர்மத்தின் முதுகோட்டையுந் தமது திருமார்பிலுள்ள பிரமவிஷ்ணுக்களின் சிரோமாலைக்கு நடுநாயகமாக அணிந்து அமரர்கட்கு விடையளித்தனுப்பி, விடையூர்ந்து வெள்ளிமலைசேர்ந்து வீற்றிருந்தனர்.

கூர்மவடிவேற்ற விஷ்ணுமூர்த்தி அதனாற் பண்டையவுணர் வெய்தி, பரமபதியைத் துதித்துச் சிவலிங்கார்ச்சனை புரிந்து, தேவர் முநிவர் கேட்கும்படி **கூர்மபுராணம்** ஒதித் தனது நிஜவடிவுடன் வைகுந்தமுற்றுச் சிவத்தியானஞ்செய்து வாழ்ந்திருந்தனர்.

பிருகுமுநிவர்சாபப்படி பின்னைகேள்வனுக்குற்ற கூர்மாவதாரத்தில், அக்கூர்மத்தின் கொடுமையை யொழிக்கக் கொன்றெறிந்தமையால், கொன்றை வேணியைக் கூர்மாரியெனக் கூறவேண்டுவதாயிற்று.

**காளிகாகண்டம்.**

ததஃப்ராண்யுபகாராய கூர்மஂஸம்ஹ்ருத்யகர்விதம்
ததங்கம்பூஷணத்வேந தாரயமாஸஶங்கர: ||

**కాళికాఖండే.**

తతః ప్రాణ్యుపకారాయ కూర్మంసంహృత్యగర్వితం ।
తదంగంభూషణత్వేన ధారయామాసశంకరః ॥

**ஸ்காந்தபுராணம்.**

**வீரபத்ரவாக்யம்.**

அத்யாபிதவபஶ்யத்வம் கபாலங்கூர்மரூபிணஃ
ஹாரஹாரலதாமத்யே முக்தகஸ்மாந்நபுத்யஸே ||

స్కాందం వీరభద్రవాక్యం.

ఆద్యాపితవపశ్యధ్వం కపాలంకూర్మరూపిణః ।
హంరహారలతామధ్యే ముగ్ధకస్మాన్నబుధ్యసే ॥

**கந்தபுராணச்சுருக்கம்.**

" மாலவன்கமடத் துருக்கொடுமந்தரத்தைவெரிந்தனிற்
றாலவன்றுபரித்தனன் கடறந்ததங்கமுதந்தனை
நீலமாயனகர்தைகொண்டுநிறைந்தவேலையுழக்கவே
யாலமுண்டவன்வந்துபற்றியவன்றன்வன்மையழித்தனன்"

**காஞ்சிப் புராணம்.**

" மகரந்திளைக்குங்கடலேழுமலங்கக்கலக்கும்பசுந்துளவ
முகைவிண்டலர்தாராமையினைப்பற்றித்தகர்த்தமுதுகோடு
நகுவெண்டலைமாலிகையணிக்குநடுநாயகமாக்கோத்தணிந்து
புகரின்றுயர்ந்தோர்தொழப்பொலிந்தபுத்தேள்செல்வத்திருவுருவம்"

கூர்மசம்ஹாரமூர்த்தயேநம:

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அறுபதாவது
# மச்சசம்ஹார மூர்த்தி.

சிவாக்கினையால் அரக்கர்குலத்திலே சோமுகாசுர னென்னும் நாமமுற்ற தீயோன் ஒருவன் ஜனித்து எம்பிரானை நோக்கி யியற் றற்கரிய தவஞ்செய்து, பல வரங்களைப் பெற்று பராக்கிரமசாலியாய்த் தன்னை யெதிர்ப்போர் தரணியிலிலாது தருக்கெய்தி, தோள்களின் தினவுதீரும்படி மேருமலையை யெடுத்துப் பந்துபோல் விளையாடினன். இயமனும்கண்டஞ்சத்தக்க காலகாலன்போலவிருக்குஞ் சோமுகன், தன்னோடு போர்செய்யவல்ல சதுரர் சுவர்க்க மத்திய பாதல மென்னுந் த்ரிலோகத்திலு மொருவருமில்லாமையால், ஒருநாள் தானே சத்தியலோகமுற்றுப் பிரமதேவனுக்குமுன் தோன்றினன்.

அப்போது சதுமுகன் சோமுகனைக்கண்டுபெயர்ந்துநிற்க, இராக்கதன் இவன்வலி இவ்வளவுதானோவென்று கருதி யிகழ்ந்து, மலரவன் வசத்திலிருந்த மறைகள் நான்கையுங் கையாற் பறித்துக் கடலிற் பாய்ந்து களித்துலாவினன். அயனோ தனது ஆக்கற்றொழிலுக் காதரவாகிய ஆரணம் நான்கும் அசுரன் கையி லகப்பட்டமையாலஞ்சிச் செய்வதொன்றுந் தெரியாமல்,திருமகள் கொழுநன்பாற் சென்று," பிதாவே! என்வசத்திருந்த எழுதாக்கிளவியைச் சோமுகன் கொண்டுபோயினன்" எனக் கூற, நெடுமால் உடனே கோபாக்கிரசித்தராய்ப் பிருகுமுநிவர் சாபப்படி மீனவடி வேற்றனர். எண்ணில்லாத யோசனை நீளமுள்ள பெரிய மச்சவடிவேற்ற மாயோன், கடலிற் பாய்ந்து அது சேறுபடும்படி சோமுகனைத்தேடி வாலையெடுத்தடித்து நீர்த்துளி ஆகாயத்திற் படவும் அண்டச்சுவரில் மீனங்கள்

மோதவும் விசிறி, இமிங்கல்முதலிய் பெருமீன்களை அங்காந்த வாயினு ளுட்கொண்டு வேதத்தைக் கவர்ந்தொளித்த வெய்யோனுகிய சோமுகனைக் கண்டு பின்சென்று துன்புறுத்தி அவனது சோரியாகிய மாரியை வாயாறவுட்கொண்டு அவனைச் சங்கரித்து அவன்வசத்திருந்த அருமறை நான்கையுங் கைக்கொண்டு திரும்புகையிற் கமலயோனி கண்டு மாலோன் மலரடிபணிந்து அச்சத்துடன் கையேந்த, நாரணன் ஆரணங்களை யம்புயன் வசமளித்தனன். அதுபெற்ற அயன் அகங்களிகொண்டு தனது சத்தியலோகஞ் சார்ந்தனன். அசுரன் மெய்யிலிருந்தொழுகும் உதிரப்பெருக்கு உவரியைச் செந்நிறமாக்கியது.

அப்பொழுது மேருகிரிபோலக் கடலைக்கலக்கிய மச்சங்களைகளை யிடித்துக் கிழக்கு-மேற்கு,தெற்கு வடக்கு ஆகிய நேர்த்திசைகளொன்றில் தலையும் பிறிதொன்றில் வாலுமாகநின்று முதுகு நீரிலமிழாத பேருருக் கொண்டு மகர முதலிய மச்சங்களைப் புசித்து மரக்கலங்களை யுடைத்து எல்லாவற்றையுமழிக்குந் தகியிலிருப்பது தெரிந்து, தேவர்கள் புகலிடந்தேடித் திருக்கைலாயகிரியை யடைந்து அறவடிவாகிய திருநந்திதேவரைப் பணிந்து விடைபெற்றுத் திருச்சந்நிதானத்தினுட்சென்று ஸ்ரீபரமபதியைத் தரிசித்து "எம்பெருமானே! மாயோன் மச்சவடிவாய் எழுகடலையுமொன்றுகூட்டி அதிலுள்ள சலராசிகளைப் புசித்தலின் மாந்தர் வருந்துகின்றனர். இனி யாவரிடம் வருவனே தெரியோம்.அண்டகடாகமுற்று மதிர்கின்றது; ஆதலின் அம் மாயமச்சத்தி னிறுமாப்பை மாய்க்கவேண்டும்" என விண்ணப்பித்து வணங்கி நிற்க, சிவபெருமான் "அவ்வாறே யாகுக. அமரர்களே! அஞ்சல்" என் றபயமளித்து, வலைஞர் வடிவேற்று வாரிதியை யடைந்து, அம்மச்சத்திற் கேற்ற பேருருவாய்ந்து, எழுகடலையுட் மறைக்கத்தக்க வலையை வீச, மீனம் அதனு ளகப்பட, சங்கரர் அதன் விழியைப் பறித்தனர். அப்பொழுது தேவர் இருடியர் முதலானுர் "இறைவனே! இத்திருமால் இன்னு மொருதரம்

இத்தகைய விறுமாப்பெய்தாவண்ணம் இவ்விழியையும் தேவரீர்திரு மேனியி லணிதல் வேண்டுகிறோம்" எனப் பிரார்த்திக்க, அன்பர் எண்ணியவாறே அருள்புரியும் அமலர் தன் கைவிரல்மோதிரத்தில் அமைத்தணிந்து வெள்ளிமலை சேர்ந்து வீற்றிருந்தனர், கண்ணிழந்த ஈனமாகிய மீனவடிவுற்ற விஷ்ணு பண்டைய வுணர்ச்சியால் அவ்வடிவை யொழித்துச் சிவார்ச்சனைபுரிந்து **மச்சபுராண**மோதி வைகுந்தமுற்றனர்.

சிவபெருமான் மச்சசங்காரஞ்செய்கையில் கொக்குருவேற்றுச்சென்றதாய் அதர்வணவேதம் கோஷிக்கின்றது.

**மா**யனுகிய மச்சத்தின் மமதையை மாய்த்து, அதனைச் சங்கரித்தமையால், ஐயனுக்கு மச்சாரி யென்றோர் திருநாமம் அறைதலாயிற்று.

**அதர்வண வேதம்.**

த்ரியம்பகோபகோநாமருத்ர: நாராயணஶிரச்சம்சுநாசகர்த ||

అథర్వణవేదమ్.

త్రియంబకో బకో నామరుద్రః నారాయణశిరచ్ఛంచునాచకర్తః ||

**உபதேசகாண்டம்.**

"எடுத்துவீசியவலைகடலேழையுகிரப்பிப்
படுத்திழுத்தனும்வலையகப்பட்டதுபாரா
நடுக்கடற்புகுந்திருவிழிபறித்தனனடந்தான்
கடுத்தவெஞ்செருக்கழிந்ததுமீனமாக்கடவுள்."

**காஞ்சிப்புராணம்.**

'வானம்பழித்தவலைமாக்கள்வடிவுதாங்கிவலம்புரிக்கை
மீனம்படுத்துவிழிருன்றுவிரன்மோதிரத்தினெவ்வுயிர்க்கு
ஞானம்பயப்பக்குருவிந்தலங்கேழ்மணிபோற்பதித்தணிந்த
கானம்படித்துச்சுரும்புளருங்கடுக்கைத்தொடையோன்றிருவுருவம்'

மச்சசம்ஹாரமூர்த்தயேநம:

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

# அறுபத்தொன்றுவது

# வராஹசம்ஹாரமூர்த்தி.



தாமரைமலரில் வீற்றிருக்குஞ் சதுமுகப் பிரமதேவனை நோக்கித் தவஞ்செய்து பலவரம்பெற்ற இரணியாக்கன் பரந்தவுலகத்தைப் பாய்போற் சுருட்டிச் சமுத்திரத்தில் வீழ்ந்து மறைந்தனன். தேவர்கள் அப்பொழுது நடுக்கமெய்தி நாரணனை யடைந்து நடந்தது கூறி "அடியேங்கட்கு அடைக்கலம் வேறில்லை" என்று வேண்டினர். திருமால் "அமரர்களே! அவ்வசுரனைத் தொலைத்து அவனியை யளிப்பேன்" என்று கருடவாகனமேறிச் செல்லுகையில், இந்திரன் பிரமன் இருடியர் முதலானோர் பணிந்தனர். மாயோன்வையகத்தைக் கொணர வராகவடிவாயினர். அவ்வராகமோ நீலவெற்பினும் இரட்டிப்புயர்ந்ததும், கால்கள்நடுவே ஆயிரங்காததூரமுள்ளதும்,வால் அசையுந்தோறும் திக்குகளிற்படுவதும்,சுவாசத்தால் அண்டத்தைக்குலுக்குவதும்,உரைஞ்சால் அண்டச்சுவரை யசைப்பதும், வடவாமுகாக்கினிபோற் பார்வையுடையதும், மூக்கினுற்றேண்டப் பாதலமுட்டுவதுமா யுள்ளது.பன்றியாகிய திருமால் கடலேழையுங் கலக்கிச் சேறுபடுத்திப் பின்னர் புழுதியாக்கி இரணியாக்கனைக் கண்டு, கொம்பினாலே யவனைக் கிழித்துக்கொன்று சுருண்டிருக்கும் பூமியைக்கொம்பின் றுனியாற் றூங்கி யெடுத்துவந்து ஆயிரம் முடிகளையுடைய ஆதிசேடனது உச்சியில் விரித்தனர்.

அவ்வாறு செய்த வராகம் தனதுவெற்றியால் மமதை யுற்று, அட்டகுலபர்வதங்களை யிடித்துத்தள்ளியும்,பலவுயிர்களையும் வாயிற்பெய்து குதட்டியும், சப்தமேகங்களும் நாகலோகமும் அஷ்ட கஜங்



61 வராஹசம்ஹார மூர்த்தி.

ளும் அச்சமெய்தி நடுங்கும்படி ஆர்ப்பரித்துக் கர்ச்சித்தும், காசி
ரியைத் தாங்கும் காசிபர் பெற்ற நவநாகங்களும் உச்சிநடுங்கும்படி
ளையை மோந்தும், பூமியைக் குத்தித் தோண்டியும்,கட்கடையில்
ழித்தீயைச் சிந்தியும் உலாவியது. இக்கோலமாகியகோலத்தைக்
ண் டஞ்சிய் இமையவர் கண்கூச்சும் மனக்கலக்கமு முற்று, இத்
கைய இடுக்கண் விலகும்படி வெள்ளிமலையை யடைந்து முதற்பெ
ங்காவலாகிய நந்தியெம்பெருமான் கட்டளைபெற்றுத்திருச்சந்நிதி
ட் சென்று கருணாநிதியைக் கண்டு தரிசித்துச் சாஷ்டாங்கமாகப்
ணிந்து கைகட்டி வாய்பொத்தி நின்று "மகதேவா! மாயவன்
ராக்வடிவேற்று வையக முழுவதும் வருத்துகின்றனன். இமைப்
'பாழுது கழியின் இமையவ ருலகு மழியும். இரணியாக்ஷனைச் சங்
ரிக்கும்படி திருமாலைத் துதித்தது இத்தீமையை விளைத்தது. யாங்
ள் துன்புற்ருல், தேவரீரை யன்றி யதனைத் தீர்ப்போர் யாவர்?"
னப் பலவாறு துதித்துப் பணிந்துநின்றனர். விடையூர்தி அத்தேவ
முநிவர் வேண்டுகோளுக் கிரங்கி, அவர்கட் கருள்செய்யத் திருவுள்
ளஞ்செய்து ஓர் வேடுவவுருவேற்று வராகத்தை யடைந்து தமது
திருக்கரத் திருந்த முத்தலைவேலால், நெற்றியிற் குத்தி நிலத்திலழு
த்தி, ஒரு கொம்பைப் பறித்தனர்.

அக்காலத்தில் அகந்தைகழிந்த வராகம் ஐயனைத்துதித்தலா
ல்அருள்கூர்ந்து மற்றொருகொம்பையும் பறிக்காமல் மன்னித்து விடு
க்க, தேவர்கள் "எம்பெருமானே! இன்னுமொருதரம் இதனைப்
போல மாயோன் மாலோனாய் மமதையுறாமல் இதன் கொம்பையும்
தேவரீர் திருமேனியி லணிந்துகொள்ளல்வேண்டும்" என, சிவபெரு
மான் அவ்வாறே அவர்கள் வேண்டுகோளுக்கிரங்கித் திருமேனியிற்
றரித்துத் திருக்கைலாயமலைக்கு எழுந்தருளினர்.தனக்குப்பிருகுமுநிவ
ரிட்ட சாபப்படி பன்றியாகிய திருமால் சிவபிரானைத்துதித்துப்பணி
ந்து தேவரும்முநிவருங் கேட்கும்படி வராகபுராணம் கூறித் தனது
வைகுந்தபதவியைச் சேர்ந்தனர்.

திருமாலாகிய வராகம் இறுமாப்புற்று உலகிற் றுன்புறுத்தகையில், தேவர்வேண்டுகோளுக்கிரங்கி அதன் அகந்தையை யழித்தமையால் மகாதேவருக்கு வராஹாரிமூர்த்தியென்பதோர் திருநாமம் வழங்குகின்றது.

காளிகாகண்டம்.

" உத்பாட்யதம்ஷ்ட்ராம்தஸ்யைகாம் ஹரஸ்யோரஸிபூஷணம்
ஏகஸ்ருங்கவராஹோபூத் ததாப்ரப்ருதிமாதவ : |

కాళికాఖండం

ఉత్పాట్యదంష్ట్రాంతస్యైకాం హరస్యోరసిభూషణం ।
ఏకశృంగవరాహోభూ త్తదాప్రభృతిమాధవః ॥

லிங்க.புராணம்.

த்ருஷ்ட்வாஜக்ராஹதம்ஷ்ட்ராந்தாம் விஷ்ணோஸ்சைவமஹாத்மந:
பபாரசமஹாதேவ : கூர்மம்ப்ராந்தேபிசோரஸி
புத்ரபௌத்ராவ்ருத : ஸர்வோ வராஹஸ்சாபதத்புவி
அத்யாபிஸூகராக்யாதம் தீர்த்தங்கங்காதடேஸ்திதம்
ஸ்கந்தஸக்த்யாஹதோயத்ர வராஹாக்யோம்ருதோஹரி : |

లింగపురాణం.

దృష్ట్వాజగ్రాహదంష్ట్రాంతాం విష్ణోశ్చైవమహాత్మనః ।
బభారచమహాదేవః కూర్మంప్రాంతేపిచోరసి ।
పుత్రపౌత్రావృతఃసర్వో వరాహశ్చాపతద్భువి ।
అద్యాపిసూకరాఖ్యాతం తీర్థంగంగాతటేస్థితం ।
స్కందశక్త్యాహతోయత్ర వరాహాఖ్యోమృతోహరిః ॥

௬ வீரபத்ரவசநம்.

விஸ்ம்ருதம்தத்ததஸ்மோந தம்ஷ்ட்ரோத்பாடேநபீடித :
வராஹவிக்ரஹஸ்தேத்ய ஸாக்ரோஸஸ்தேநஹேதுநா

వీరభద్రవచనం.

విస్ఫురంత త్రదంశేన దంష్ట్రిత్వా చేనపీడితః ।
వరాహవిగ్రహస్తేద్య సాక్రోశస్తేన హేతునా ॥

**கந்தபுராணம்.**

"கண்டுகன்றுதலவன்மருப்பொன்றினைக்கரத்தாற்
கொண்டுவெல்லையிற்பறித்தலுமுணர்வுமுன்குறுக
விண்டுமற்றதும்பறிப்பனிங்கிவனெனவெருவிப்
பண்டுபோலநின்றேத்தலும்போயினன்பரமன்.
அன்றுகொண்டதோர்மருப்பிணைச்சிலம்பனமாவணிந்தா
னின்றுமங்கவன்மார்பிடைப்பிறையெனவிலங்கு
மொன்றுமற்றிதுகேட்டனைநின்றதுமுறைப்பா
நன்றுதேர்ந்துணர்மறைகளுமித்திறநவிலும்."

**காஞ்சிப்புராணம்.**

"சுழிக்கும்புனலேழ்கடல்சுவற்றிமலைகளேழுந்துகள்படத்தீ
விழிக்குங்கடவுட்பன்றியினைவிறல்வேடுருக்கொண்டெழுந்தருளி
பழித்தங்கொருவெண்கோடுபறித்தணிந்துமற்றையிடக்கோடு
மழிச்சுந்துதிகேட்டுளமிரங்கிவிடுத்தபகவன்றிருவுருவம்."

வராஹசம்ஹாரமூர்த்தயேநம:

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

# அறுபத்திரண்டாவது
# ப்ரார்தநா மூர்த்தி.

முன்னொருகாலத்தில், தவமே முத்திபயக்கத்தக்கதென்றி
மாந்திருந்த தாருவன முனிவர் தவத்தையும், அவர் பன்னியர் கற்பை
யுமழிக்க, சிவபெருமான் **பிக்ஷாடநமூர்த்தியாய்**, திருமால் மோகி
வடிவேற்று உடன்வரக்கொண்டு தாருவனத்தைச் சார்ந்து மோ
ணியால் முனிவர் தவத்தையொழித்து, தாமே அவ்விருஷிமாதர் க
பையகற்றினர். அதனால் வெகுளிமீக்கொண்ட அந்தணர் ஆபிசா
ஹோமமொன்றியற்றி அதிற்றோன்றிய பல்பொருள்களையும் பரம
மேற் பிரயோகிக்க, இறைவர் அவற்றை உடை படை-அணிமுதலி
வாகக் கொண்டனர். அவர்கள்யாகாக்கினியிற்றோன்றியமுயலனை
செலுத்த, முன்னோன், அம்முயலகன் முதுகில் ஓர் திருவடியையூ
றி ஓர் நடனஞ்செய்து முனிவர்கட்கு ஞானமளித்து திருமாலுட
திருக்கைலைசேர்ந்தனர். [இச்சரிதங்கள் முறையே பிக்ஷாட
மூர்த்தம் - சார்த்தூலஹதமூர்த்தங்களிற் கண்டுகொள்க.]

இதனையறிந்த எமதன்னையாகிய **கௌரியம்மையார்** தாம்ச
தியாயிருக்கையில் இறைவர் மாலாகிய மோகினியை உடன்கொண்
சென்றதும், தாம் உடனில்லாதசமயத்தில் தாருவனத்தில் திருந
னஞ்செய்ததுமாகிய காரணங்களால், ஓர்லீலாமாத்திரையாய் ஊ
ல்கொண்டனர்.

அதுகண்ட அருள்வள்ளல் "ஏகைவஶக்தி: பரமேஶ்வரஸ்
ப்ரயோஜநார்தாய சதுர்விதாபூத் - போகேபவாநி புருஷேஷ்டி வி
ணு: க்ரோதேசகாளீ சமரேசதுர்கா"—என்றபடியே, "உமையே
எமது ஒருஶக்தியே மாயாகாரிய சம்பந்தத்தால் நான்குவகையுற்



62 பிரார்த்தநா மூர்த்தி

விளங்கும். அதுவே நீயும் - திருமாலும் - காளியும் - துர்க்கையுமாக நிற்கும். அதாவது :— மனைவியாகையில் நீயும், ஆணுருவாகையில் விண்டுவும், குரோதமுற்றபொழுது காளியும், யுத்தமுனையில் துர்க்கையுமாக விளங்குவிராதலின், திருமாலும் நீயும் வேறன்று. இதற்காக வெகுளி வேண்டுவதில்லை" என்று தாமும் லீலாமாத்திரையாய்ப் பிரார்த்தித்தனர்.

தேவியார்சினந்தணிந்து "தேவநாயகா! எளியேன் அத்திருநடத்தைத் தரிசிக்கும்படி திருவருள்புரியவேண்டும்" எனப் பிரார்த்திக்க, இறைவர் அகங்களிகூர்ந்து "அவ்வாறே ஆகுக" என்று ஆண்டும் ஓர்தாண்டவஞ் செய்தருளினர். அதனைக் *கௌரிதாண்டவம் என்பர். இறைவியார் ஈசனைப்பணிந்து "எளியேன் பிழையை மன்னிக்கவேண்டும்" என்று பல முறை பணிந்து பண்டுபோல் பரமன் பக்கலில் வீற்றிருக்கின்றனர்.

இறைவர் லீலாமாத்திரையாக ஊடல்கொண்ட இப பல்லவியைப் பிரார்த்தித்த அவசரம் ப்ரார்தநாமூர்த்த மெனப்படும்.

ப்ரார்தநாமூர்த்தயே நம:

---

* இதனை இனியச்சிடப்படும் நவதாண்டவம் என்னு நூலிற் கண் குணரலாம்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

## அறுபத்துமூன்றாவது

# ரக்தபிக்ஷாப்ரதாநமூர்த்தி.

சிவபிரானை யிகழ்ந்துசிரித்த பிரமனது, * நடுத்தலைகிள்ளிய பைரவக்கடவுள் சிவாக்கினைப்படி உதிரப்பலியேற்க, அப்பெருமானு ல்அநுக்கிரகிக்கப்பட்டகாலவேகன் கனன்முகன் சோமகன் ஆல காலன் அதிபலன் ஆகிய் கணத்தலைவருடன் சிறந்த தவசிகள் வசிக் கும் வனங்களும் தவச்சாலைகளுமடைந்து அவர்களைச் சூலப்படையா ற்குத்திச் சோரிநீரைக்கபாலத்தேற்று,உம்பருலகடைந்து அவ்வாறே உதிரமேற்று அவர்களுள் உயிர்துறந்தாரை உடனேயெழுப்பி அகந் தையொழித்து உலகமெங்குஞ்சஞ்சரித்து மாயவன்வாழும் வைகுந்த நகர மடைந்தனர்.

அவருடன் கூடிவந்த கணநாதர்கள் கொக்கரித்துக் கூச்சலி ட்டு முன்செல்ல, விண்டுவின் சாரூபம்பெற்று, தண்டு கோதண்டம் சங்கு கட்கம் சக்கரங்கொண்டுவிடுவச்சேனனென்னும்பெயருடை ய முதற்காவலாளன் பைரவப்பெருமானது பிரதாபத்தையறியாமல் சாமாந்யமாகக் கருதி, முன் வந்துதடுத்து எம்பிரான் கணத்துடனெ திர்த்துச் செருச்செய, பைரவர் விசையுடன் சூலநுதியில் விடுவச் சேனனைக்குத்தித் தோள்மேற்சாய்த்து, பூமகள் நிலமகள் இருபுறம் பொருந்த, பல தலையுடைய பன்னகசயனத்திற்படுத்துத் திருக்கண் வளருஞ் சீதரன்முன் சிவகணங்களோடணுக, திருமால் இருமாதரு டன் றுண்ணென் றெழுந்து மண்மிசை விழுந்து மலரடியணங்கி "எம்பெருமான் ஈண்டுற்றதென் ?" எனவினவ,பைரவப்பெருமான்

---

* இச் சரிதத்தைப் ப்ரஹ்மசிரச்சேதமூர்த்தத்திற் காண்க.



53 இரக்தபிக்ஷாபிரதான மூர்த்தி.

பலிக்குவந்தோம், சிரத்திலிருந்திழியுஞ் செந்நீரைச் சீக்கிரந்தருக"
றனர்.

நாரணன் நன்றென் றிசைந்து தன் நகத்தினால் நெற்றியினு
ா நரம்பொன்றைப்பிளந்து பரமன் கபாலத்திற்சோரி சொரியும்ப
விட, அதினின்றும் உதிரப்பெருக்கு ஓர் ஆயிரவருடமொழுக,
ல் மயக்குற்றனன். கபாலத்திற் பாதியும் நிரம்பியதில்லை. சிதரன்
ார்ந்ததால் மாதர்கள் பைரவரை வணங்கிநிற்க, "மாதர்களே! அ
ல்" என்றருளி வாசுதேவனைச் சுவாசமுற்றெழத் திருவுள்ளஞ்செ
து "ஈங்கிருத்தி" யெனவிடுத்துத் திரும்புகையில், விண்டு "பண்
பால் விடுவச்சேனனைத் தலைவாயில்காக்க...தயைசெய்யவேண்டு
' என்று பிரார்த்திக்க, காரி சூலநுதியிலிருந்த விடுவச்சேனனை
க்கி யுயிரளித்து விடுத்துப் பின்னுமுள்ள தேவர் முநிவர் செரு
கையொழித்துச்சேனை சமுத்திரஞ்சூழ அண்டங்கடோறுஞ் சென்
ார். இவர் சர்வசம்ஹாரகாலமாகிய யுகாந்தங்கடோறும், ...
ாகமாகவர அதன்மீதேறி அகமகிழ்ந்துலவுவர். இவ்வாறு ...
லொருது உதிரத்தைப் பலியேற்றது அவர்கள் இறுமாப்பை ...
வயன்றிப் பிறிதொரு காரணத்திற்குமன்று.

இறுமாப்புற்ற இமையவர்பால் இரத்தத்தைப்பலியேற்று அ
கள் அகந்தையை அடக்கிவைத்தமையாற் சிவபிரானுக்கு ரக்தபி
ாப்ரதாநமூர்த்தியென வோர்பெயர்விளங்குகின்றது.

### ப்ரஹ்மாண்டபுராணம்.

அவிஜ்ஞாயபரம் தாம திவ்யம் தத்பாரமேஶ்வரம்
நிவாரயத்ரிஶூலாங்கம் த்வாரபாலோமஹாபல: | இத்யாதி
நிர்பித்யபாதயாமாஸ ஶூலேநோரஸிதம்புவி
தத்பாஜீவிதம்த்ருஷ்ட்வா ம்ருத்யுவ்யாதிதோதேயதா.

అవిజ్ఞాయపరం ధామ దివ్యంతత్పారమేశ్వరం ।
నివారయత్రిశూలాంకం ద్వారపాలోమహాబలః । ఇత్యాది

నిర్భిద్యపాతయామాస శూలేనోరసితంభువి ।
తత్యాజజీవితందృష్ట్వామృత్యుర్వ్యాధిహతోయథా॥ బ్రహ్మాండపురాణం.

சிவரஹஸ்யம்.

மஹதர்தேநதேவோஸ்மி மாஹாத்ம்யேநவிமோஹிதா:
மாம்நஜாநந்திதாதாரம் ஸர்வக்ரஸ்தாஸ்ஸுராஸுரா:
ப்ரஹ்மவிஷ்ணுமஹேந்த்ராத்யா ஸ்தாநஹம்லீலயாமுஹு:
ரக்தபிக்ஷாடநவ்யாஜாத்வீதஸர்வாந்விதாயச.

శివరహస్యం

మహతర్థేనదేవోస్మి మాహాత్మ్యేనవిమోహితాః ।
మాంనజానంతిదాతారం సర్వగ్రస్తాస్సురాసురాః ।
బ్రహ్మవిష్ణుమహేంద్రాద్యా స్తానహంలీలయాముహుః ।
రక్తభిక్షాటనవ్యాజా ద్వీతసర్వాన్విధాయచ ॥

ப்ரஹ்மாண்டபுராணம்.

தேவாநாம்தாநவாநாஞ்ச ததாந்யேஷாஞ்சமாத்யதாம்
[illegible]க்தபிக்ஷாச்சலேநைவ ஸர்வகண்டேம்ஹராம்யஹம்
இதிஸம்சிந்த்யவிஶ்வாத்மா சசாரபுவநத்ரயம்—இத்யாதி
[illegible]விஷ்ணோர்பவநம் யத்ராஸ்தேமதுஸூதந:—இத்யாதி
[illegible]ஶூலாங்கம த்வாரபாலோமஹாபல:—இத்யாதி
[illegible] ஸந்நிதிக்யாதோ விஷ்ணோரம்ஶஸமுத்பவ:
[illegible]ரஸிஶிர்பித்ய பாதயாமாஸதம்புவி
வி[illegible]ஶூலேநாதாய தத்களேபரமீஶ்வர:—இத்யாதி
திவ்யவர்ஷஸஹஸ்ரந்து கபாலேபைரவஸ்யது
தய[illegible]த்யாவிப்ரேந்த்ர தாரயாபரமேஷ்டிந:
கபாலஸ்யவிஶாலஸ்ய நார்தமப்யபிபூரிதம்
ரக்தஸ்யவிரஹாத்விஷ்ணு: பபாதபுவிமோஹித:.

## బ్రహ్మాండపురాణం.

దేవానాం దానవానాంచ తథాన్యేషాంచ మాద్యతాం ।
రక్తభిక్షాచ్ఛలేనైవ గర్వకండూం హరామ్యహం ।
ఇతి నిశ్చిత్య విశ్వాత్మా చచార భువనత్రయం । ఇత్యాది
జగామ విష్ణోః భవనం యత్రాస్తే మధుసూదనః । ఇత్యాది
న్యవారయత్ త్రిశూలాంకం ద్వారపాలో మహాబలః । ఇత్యాది
విష్వక్సేన ఇతి ఖ్యాతో విష్ణోరంశ సముద్భవః ।
శూలేనోరసి నిర్భిద్య పాతయామాస తత్ర భువి ।
విపేశ శూలేనాదాయ తత్కళేబరమీశ్వరః । ఇత్యాది
దివ్యవర్షసహస్రంతు కపాలే భైరవస్య తు ।
తయాపతంత్యవిచ్ఛిన్న ధారయా పరమేష్ఠినః ।
కపాలస్య విశాలస్య నార్ధమప్యభిపూరితం ।
రక్తస్య విరహాద్విష్ణుః పపాత భువి మోహితః ॥

## கந்தபுராணச்சுருக்கம்.

"உன்றலைப்படுசோரிநீரையுகுத்தியென்னகத்திருற்
றன்றியென்றிபினாக்குசோரித்தனைப்பொழிந்திடநம்பிரான்
வென்றிசேரயனார்பெருஞ்சிரமீதிலேற்றனனாறுநா
ளின்றுகூறிடமொண்டுசெல்லவிளைத்துமாயன்விழுந்தனன்"

ரக்தபிக்ஷாப்ரதாநமூர்த்தயேநம:

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

## அறுபத்துநான்காவது

# சிஷ்யபாவமூர்த்தி.

ஸ்ரீமுருகக்கடவுள் திருவிளையாடல்கள் பலவியற்றி, தேவர் வேண்டுகோளின்படி அவர்கள் பூசையைக்கொள்ளத் திருவுள்ளங் கொண்டு ஸ்கந்தகிரியில் எழுந்தருளி யிருந்து, நாரதமுனிவர் யாகத் திற்றோன்றிய யாடோன்று அமரருலகத்தை யழித்துவந்ததால் அந்த ரர்துயர்கூற அதனை வீரவாகுதேவரால் பிடிப்பித்து வாகனமாகக் கொண்டு வீற்றிருந்தனர்.

அவ்வாறிருக்கையி லொருநாள், பிரஹ்மேந்திராதிதேவர்கள் சிவபெருமானைச் சேவைசெய்யக் கருத்துட்கொண்டு திருக்கைலாய மலையை யடைந்து தரிசித்துத்திரும்பி, குமாரக்கடவுள்வீற்றிருக்கும் திருவாலயத்தைச் சமீபிக்கையில், இளையபிள்ளையார் இலக்ஷத்தொன் பது வீரரும் புடைசூழ்ந்து நிற்க, பொன்மயமான முதற்கோபுரவாயி லில் எழுந்தருளியிருந்தமையால், அவ்வமரர்குழாமிடையே அவர்க ட்குத் தலைவனுகவரும் பிதாமகனைத் திருக்கண்சாத்தி, "ஏ சதுர்முக! ஈண்டுவருக" எனவிளிக்க, பதுமன் அக்கட்டளை மேற்கொண்டு சமீபித்துச் சாஷ்டாங்கமாய்ப் பணியாது கைகூப்பி நின்றனன். முருகக்கடவுள் "நீயாவன்?" என்று வினவ, அலரோன் "அண்ண லாக்கினைப்படி அகிலத்தை ஆக்குவோன்" என்றனன். அறுமுகக் கடவுள் "அவ்வாறு சிருட்டிசெய்வோனுகில் உனக்கு வேதந்தெரியு மோ" என, அம்புயன் "அண்ணலே! இறைவரருளிய எண்ணில்லா வேதாகமங்களுட் சிறிதறிவேன்" எனச் செப்பினன். கார்த்திகேய



61. சிஷ்யபாவ மூர்த்தி.

ன் "கமலயோனியே! இருக்குஓதுக" என, நான்முகன் "நல்லது" என்று ஓம் எனப் பிரணவத்தை யுச்சரித்துப் பின் வேதமோதத் தொடங்கினன்.

முருகக்கடவுள் "இரு; முன்னோதிய ஓம் என்பதற்கு முதலில் உரையுரைத்துப் பின்வேதமோதுக" எனப்பணிப்ப, அன்னவூர்தி அஃதறியானாதலின் அறைதலொன்றுமிலனாய் யோசித்துநின்றனன். செவ்வேள் சினமிக்குக் கொண்டோராய் "இதன் பொருள்றியாதவுனது சிருட்டித்தொழிலும் இவ்வாறேயோ?" என்று திருவாய்மலர்ந்தருளி அவனது நான்குமுடிகளுநங் குலுங்கும்வண்ணங் குட்டி, நிலத்தின்மேலேவிழ வுதைத்து, பரிசனங்களாற் கந்தகிரியிலே சிறையிடுவித்து, தாமே ஜெபமாலை - கமண்டலம் - அபயம் - வரதமேந்திய நான்குதிருக்கரங்களும் ஒரு திருமுகமுமாக வீற்றிருந்து பிரமதேவனைப்போலச் சிருட்டிசெய்துகொண் டிருந்தனர். சதுமுகனோடுவந்த வானவர்பயந்து வள்ளலை வணங்கித் தத்தம் பதவியடைந்து பண்டுபோல் வாழ்ந்திருந்தனர். இவ்வாறே பலகாலங் கழிந்தன.

பதுமன் சிறையிருத்தற்காக, பன்னகசயனன் தன்னுளமதனில் இன்னல்மிகுந்து எண்கணன் சிறையைவிலக்க வெண்ணி, அட்டதிக்கிறைவர் - எட்டுவசுக்கள் - துவாதசாதித்தர்- சந்திரன்முதலிய கோள்கள் - சத்தருஷிகள் - நவபிரமாக்கள் முதலிய தேவர்முனிவர்களைச் சிந்திக்க அவர்கள் அக்கணமே ஐம்படைக்குரிசில்பா லடைந்தனர். திருமால் தேவர்முனிவரை யுடன்கொண்டு திருக்கைலையை யடைந்து திருநந்திதேவர் விடைபெற்றுத் திருச்சந்நிதானத்தினுட்சென்று திரியம்பகனைச் சேவைசெய்து பலவகையாகத் துதித்துக் கைகூப்பி நின்றனர். உமாபதி ஒன்றுமறியார்போன்று லீலாமாத்திரையாய் "தேவமுநிவர்களே! ஒருகாலத்துமில்லாத பெருங்கூட்டமாற்றுவந்தனிர்போலும்; என்னவிசேஷம்" என வினவ, வானவர் கூட்டத்திலிருந்தமாதவன் பணிந்து "மஹாதேவ! தேவரீரது புதல்வராகிய முரு

கப்பிரான் பிரமனைப் பிரணவப்பொருள்வினவி அவனறியாமையால்
சிறையிலிட்டுச் சிருட்டியையுந் தாமேசெய்து வருகின்றனர்; வேலவன்
போல வேதனும் தேவரீர் சுதனேயாம்; ஆதலின் சிறைநீக்க அருள்
புரியவேண்டும்" என விண்ணப்பித்தனர். சிவபிரான் நந்தியெம்பெரு
மானை நோக்கி "எமது கட்டளையைக் கூறிப் பிரமனைச் சிறைவிடு
வித்துவா" என, அவர் அவ்வாறேசென்று சுப்பிரமணியமூர்த்தியைத்
தரிசித்து, ஆஜ்ஞையை விண்ணப்பித்தவளவில், வேற்படையேந்
திய விமலர் வெகுளி மிக்கு "வேதாவை விடுவதில்லை; விரைந்து
செல்லாதுநிற்பின் நின்னையுஞ் சிறையிடுவேன்" என்றருளிச்செய்ய,
நந்திபகவான் அச்சமுற்று ஒன்றுங்கூறாது உம்பர்நாயகரிடஞ்சென்
றுரைத்தனர்.

பரமசிவன் அதுகேட்டுப் புந்நகைசெய்து, சகலதேவருந் தம
மைப் புடைசூழ்ந்துவர இடபவாகனத்தி லாரோகணித்து, ஸ்கந்தகி
ரியை யடைந்துவிடையினின்றிழிந்து உள்வருதல்கண்ட உம்பர்
ஞபதி எதிர்வந்து இறைவரது இருசரணங்களைப் பணிந்து தமதாசன
த்தின்பேரில் வீற்றிருக்கச்செய்து "தேவரீர் ஈண்டெழுந்தருளிய
தென்னகாரணம்" என வினவ, பிறைசூடிய பெருந்தகை "பிரம
னை நீயிட்ட சிறையினின்று விலக்குக" என, ஸ்கந்தர் சிரமசைத்து,
"பிரணவப்பொரு ளறியாத இவன் சிருட்டிசெய்வது அடாது" என
னக் கூறினர். சிவபெருமான் சினங்கொண்டார்போன்று "வேதனை
விதியை விடுதி" என, அறுமுகக்குரிசில் பரிசனர்களாற் டதுணை
விடுவித்தனர். பரமபதி அவ்வலரோனுக்கு அருள்செய்து ஆக்கத்
தொழிலிற் பண்டுபோலிருக்கப் பணித்து விடுத்து, மயூரவாகனனைத்
தொடைமேலிருத்தி "பிரணவப்பொருள் உனக்குத் தெரியுமாயின்
செப்புக" என, குழகன் "கொன்றைவேணியாய்! அன்றெனக்
னைக் கருளிய ஞான்று பிறருணராது பேசியதன்றோ? அன்ன
கனைவரு மன்னியவிடத்தே மறைவிலாதுணாத்தல் மரபதன்றே

மறுமாற்றம் வழங்கினர். ஈசன் "எனக்கு மறைவாகக் கூறுக"
று திருச்செவி கொடுக்க ஸ்ரீசுப்பிரமணியசுவாமிகள் ஓம்என்னும்
ணவப்பொருளை யுபதேசித்தருளிச் சிவகுருநாதர் எனப்பெய ரொ
னர். சிவபிரான் களிகூர்ந்து தேவர்களுக்குச் செல்ல விடையளி
விடையேறி வெள்ளிமலையடைந்து வீற்றிருந்தனர்.

முருகக்கடவுளிடத்திற் பிரணவப்பொருளைக் கேட்டுக்கொ
ண்டபொழுது சிஷ்யகோலமாக நிற்றலின், சிவபெருமான் சிஷ்யபா
வமூர்த்தியெனப் பெயரெய்தினர்.

சிஷ்யபாவமூர்த்தயே நம:.

---

## வாழ்த்து.

றுமுடிபுனைந்தசங்கரனுமலையரயன்றரும்பூங்கொம்பும்
றுகரத்தானுமீராறுகரத்தானுமெண்ணில்கேள்வி
தக்கன்மகஞ்சிதைத்தானுமறைஞானிகண்ணுவானும்
ருங்கண்மணியும்வாழ்கவிறைபராக்கிரமநூலொடுமிக்கம்மா

# சிவபராக்கிரமம்

முற்றுப்பெற்றது.



ப்ரம்பதயேநம: